383



Auroville

# ONE WORLD CONCEPT IN TAMIL

## INTERNATIONAL SEMINAR SOUVENIR

## பன்னாட்டுக் கருத்தரங்க மலர்

தமிழின் ஒருலகக் கருத்துணர்வு



KMM0383

93

# பாரதி - 125
# ஆரோவில் - 40
# தமிழின் ஒருலகக் கருத்துணர்வு
# பன்னாட்டுக் கருத்தரங்க மலர்

## தமிழ் மரபு மையம்

**ஆரோவில்**

**BHARATI - 125 AUROVILLE - 40**

One world concept in Tamil

**INTERNATIONAL SEMINAR SOUVENIR**


**PUBLISHED BY:**

G.Varadharajan
R.Meenakshi
A. Thillai Ganapathi

TAMIL HERITAGE CENTRE
Bharat Nivas,
Auroville - 605 101
Tamilnadu
e.mail: tamil@auroville.org.in





**2008-2009**





**DESIGNED BY:**

*Kapilan Graphics*
321, 3rd Main Road,
Mahaveer Nagar,
Puducherry - 605 008.
9442379558
arunankapilan@gmail.com

**PRINTED AT:**

*Surya Print & Solutions (P)Ltd*
15-2 P.S.R. Road,
Sivakasi - 626 123.

**FUNDED BY:**

MINISTRY OF HUMAN RESOURCE DEVELOPMENT, GOVT. OF INDIA
*Through*
AUROVILLE FOUNDATION






# AUROVILLE

"THE ONE WORLD CONCEPT IN TAMIL"

INTERNATIONAL SEMINAR

9th December 2007

**FACILITATORS**

Yogi. Om Bhavadarini

Gnanapeet D. Jayakanthan

Kavignar Sirpi Balasubramaniam

Dr Prema Nandakumar

Dr M.S. Udayamoorthi

**CO - ORDINATORS**

Prof. G.Varadharajan

Kavignar R.Meenakshi

Thiru. A. Thillai Ganapathi

Prof. Michael Kei

**ADVISERS**

Prof. Shraddhavan

Prof. N.Ardhanari

Prof. S.Madanacalliany

Prof. Themina Doraiswamy

Dr Siva. Madhavan

Dr C.Sethupathi

Prof. R.KurinjiVendan

## அன்புடன்...

'கருமயோகம் ஒன்றே உலகில் காக்கும் என்னும் வேதம்' - பாரதியின் இந்த வேதவாக்குப் பலித்து விட்டது. மனித உயிர்கள் குறித்தும், தெய்வீகவாழ்க்கை குறித்தும் உலகத்து ஞானிகள் கண்ட கனவுகள் எல்லாம் நனவுகளாகி நிகழ்ந்து கொண்டேயிருக்கின்றன. ஒருலகம் மெல்ல மெல்ல ஒவ்வொரு மனிதருக்குள்ளும் பதிவாகி வருகிறது. சங்ககாலத் தமிழனின் கவிச் சொல்லில் உருவாகிய, 'யாதும் ஊராய் யாவரும் கேளிரெனக்' கொள்ளும் ஒருலகம் எல்லோருக்கும் கனவாகவே இருந்து வந்தது. அன்பெனும் சக்தியாய்த் தோன்றிய ஸ்ரீஅன்னையின் தவவலியால் அது ஆரோவில் எனும் ஒருலகாகவே மலர்ந்தது. ஸ்ரீஅரவிந்தரின் யோகநெறியில் மாந்தகுல மேன்மை குறித்த கனவுபூமியான ஆரோவில்லுக்கும் பாரதியாருடைய பாடுபொருளுக்கும் மிகுந்த பொருத்தம் இருக்கிறது. இதை, ஆரோவில் தமிழ்மரபு மையம் தொடர்ந்து பதிவு செய்து வருகிறது.

'கடமையாவன; தன்னைக் கட்டுதல், பிறர் துயர் தீர்த்தல், பிறர் நலம் வேண்டுதல்' என்று சுட்டிக் காட்டுகிற பாரதியாரின் வாழ்வியல் கொள்கை ஆரோவில்லின் நிகழ்வு. பொழுதெலாம் இறையருள் நெறியிலே நாட்டத்தோடு, கருமயோகத்தில் நிலைத்திடலே அந்த ஒருலகத்தின் இயல்பு. இது 'பூமண்டலத்தில் உயிரெலாம் அன்புற்று வாழுதற்கு' இறைவனை வேண்டிய மகாகவி பாரதியாரின், 125ஆவது பிறந்த ஆண்டு; பிரபஞ்ச ஒருலகமாகிய ஆரோவில்லிற்கு வயது 40. இத்தகு காலப்பிணைப்பும், கனவுப்பிணைப்பும் வரலாற்றில் பதிவு செய்யப்படவேண்டியதுஅவசியம் என உணர்ந்த ஆரோவில் தமிழ் மரபு மையம், 2006 தொடங்கி 2007 வரையிலும் பல்வேறு நிகழ்வுகளைத் திட்டமிட்டு நடத்தியது. குழந்தைகள் முதல் பெரியோர்கள் வரை பங்கேற்றுப் பயன்கொண்ட இவ் விழாநிகழ்வுகளை நினைவுபடுத்தி இம்மலரின் பக்கங்கள் மலர்ந்துள்ளன.

......

*Co- Ordinator*

TAMIL HERITAGE CENTRE

BHARATNIVAS, AUROVILLE - 605 101. TAMIL NADU

Phone : 0413- 2623773, 2622770, 9442379558

email: oneworldtamil@yahoo.co.in

இந்நிகழ்வுகளில் திருவாளர்கள், ஜெயகாந்தன், கங்கைஅமரன், சிற்பி பால சுப்பிரமணியம், ஓம்பவதாரிணி அம்மையார், எம்.எஸ்.உதயமூர்த்தி, தவத்திரு குன்றக்குடி பொன்னம்பல அடிகளார், வேதாரண்யம் ரவிவேதரத்னம் முதலிய பலரும் கலந்து கொண்டனர்.

'ஒருலகக் கனவு நனவாகத் தமிழ் தந்த நற்கொடை' எனும் பொருண்மையிலான பன்னாட்டுக் கருத்தரங்கினை, பத்திரிகைகளின்வழி அறிந்த பெருமக்கள்பலர் கட்டுரைகள் அனுப்பித் தந்தனர். பேராசிரியர்கள் மற்றும் பல்துறைஅறிஞர்களின் கட்டுரைகளில் இருந்து நுட்ப இழைகளைத் தெரிவு செய்தது வல்லுநர் குழு. செறிவுமிகுந்த அக்கருத்துகள் பேராளர்களின் பொழிவுகளோடு, உலகுதழீஇய சிந்தனையாளர்களின் கட்டுரைகளுடன் இம்மலருள் தரப்பெற்றுள்ளன. தமிழ், ஆங்கிலம், மற்றும் ஃபிரெஞ்சு மொழிகளில் இப்பதிவுகளை நல்கிய பெருமக்கள் நன்றிக்குரியவர்கள்.

ஆரோவில்லின் 40ஆவது ஆண்டு விழாவினை ஒட்டி 'தி ஹிந்து' இதழ் வெளியிட்ட சிறப்பு மலரிலிருந்து மதிப்பிற்குரிய பாரத தேசத்துப் பெரியோர்களின் நல்வாழ்த்துச் செய்திகளும் இம்மலருக்கு மகிமையூட்டுகின்றன.

ஆரோவில் வரலாறு, மற்றும் தமிழ்மரபு மையத்தின் வளர்ச்சி குறித்த பதிவுகளும் உரிய ஆவணங்களோடு இம்மலரில் இடம்பெறுகின்றன.

இம்மலர் சிறக்க உதவிய அனைவர்க்கும் நன்றி.

மேலும், பங்கேற்றுச் சிறப்பித்த விருந்தினர்கள், பார்வையாளர்கள், பத்திரிகையாளர்கள், கட்டுரையாளர்கள், அணுக்கத் தொண்டர்கள், பன்னாட்டு அறிஞர் பெருமக்கள், விழாவிற்கு உயிர்ப்பளித்த கலைஞர்கள், ஆசிரியர்கள், மாணவச் செல்வங்கள், ஆரோவில் ஊழியர்கள், ஆரோவில்லைச் சுற்றியுள்ள கிராமத் தலைவர்கள், பொதுமக்கள் மற்றும் ஆரோவில் அமைப்புகளைச் சார்ந்த யாவர்க்கும் நன்றி மலர்கள்.

இச்செயல்பாடுகள் அனைத்திற்கும் நிதி நல்கி உதவிய இந்திய மனிதவள மேம்பாட்டுத் துறை அமைச்சகத்திற்கும், ஆரோவில் ஃபவுண்டேஷனுக்கும் நமது இதயபூர்வமான நன்றி.

தொடர்ந்து ஆரோவில்லானது செம்மொழியாம் தமிழின் சிறப்புகளை உலகெலாம் பரவச் செய்ய, சிறந்த திட்டங்களை வகுத்து வருகின்றது. உங்கள் அனைவரின் பங்களிப்பினையும் பெற்று முன்னேறுகிறோம். நன்றி.

**- மலர்க்குழுவினர்**

**எண்ணிய முடிதல் வேண்டும்!**
**நல்லவே எண்ணல் வேண்டும்!**



*India is the meeting place of the religions and among these Hinduism alone is by itself a vast and complex thing, not so much a religion as a great diversified and yet subtly unified mass of spiritual thought, realization and aspiration........*

*She saw the myriad gods, and beyond God his own ineffable eternity; she saw that there were ranges of life beyond our present life, ranges of mind beyond our present mind and above these she saw the splendors of the spirit.*

- SRI AUROBINDO

# A DREAM



There should be somewhere upon earth a place that no nation could claim as its sole property, a place where all human beings of goodwill, sincere in their aspiration, could live freely as citizens of the world, obeying one single authority, that of the supreme Truth; a place of peace, concord, harmony, where all the fighting instincts of man would be used exclusively to conquer the causes of his suffering and misery, to surmount his weakness and ignorance, to triumph over his limitations and incapacities; a place where the needs of the spirit and the care for progress would get precedence over the satisfaction of desires and passions, the seeking for pleasures and material enjoyment.

In this place children would be able to grow and develop integrally without losing contact with their soul. Education would be given, not with a view to passing examinations and getting certificates and posts, but for enriching the existing facilities and bringing forth new ones. In this place, titles and positions would be supplanted by opportunities to serve and organize.

The needs of the body will be provided for equality in the case of each and every one. In the general organization intellectual, moral and spiritual superiority will find expression not in the enhancement of the pleasures and powers of life but in the increase of duties and responsibilities.

Artistic beauty in all forms, painting, sculpture, music, literature, will be available equally to all, the opportunity to share in the joys they bring being limited solely by each one's capacities and not by one's social or financial position.

For in this ideal place money would be no more the sovereign lord. Individual merit will have a greater importance than the value due to material wealth and social position.

Work would not be there as the means of gaining one's livelihood, it would be the means whereby to express oneself, develop one's capacities and possibilities, while doing at the same time service to the whole group, which on its side would provide for each one's subsistence and for the field of his work.

In brief, it would be a place where relations between human beings, usually based almost exclusively upon competition and strife, would be replaced by relations of emulation for doing better, for collaboration, relations of real brotherhood....

THE MOTHER, AUGUST 1954

# THE CHARTER OF AUROVILLE

1. Auroville belongs to nobody in particular. Auroville belongs to humanity as a whole. But to live in Auroville one must be a willing servitor of the Divine Consciousness.
2. Auroville will be the place of an unending education, of constant progress, and a youth that never ages.
3. Auroville wants to be the bridge between the past and the future. Taking advantage of all discoveries from without and from within, Auroville will boldly spring towards future realisations.
4. Auroville will be a site of material and spiritual researches for a living embodiment of an actual Human Unity.

**THE MOTHER**

---

For millennia, we have been developing outer means, outer instruments, outer techniques of living, and finally those means and techniques are crushing us. The sign of the new humanity is a reversal in the standpoint, and the understanding that inner knowledge and inner technique can change the world and master it without crushing it.

Auroville is the place where this new way of living is being worked out, it is a centre of accelerated evolution where man must begin to change his world through the power of the inner spirit.

**THE MOTHER**

# AUROVILLE 40TH FOUNDATION DAY

## SPECIAL MESSAGES



**Her Excellency**
**PRATIBHA PATIL**
**President of India**

I am happy to learn that Auroville, an international experiment in Human Unity, seeking to manifest the vision of Sri Aurobindo and the Mother, is completing 40 years of its existence on February 28, 2008.

I had the privilege to visit the Inner Chamber of Matrimandir, the spiritual centre of Auroville. I remember the message I gave at the time: *"Auroville is the atom which has the inherent power of filling the world with humanity, peace, progress, tolerance and harmony. It gives a chance to explore by the coming together of the right thinking people of different cultures all around the world."* It is India's destiny to support this work for the future of mankind.

On this occasion, I extend my greetings and felicitations to all those associated with the Auroville Foundation and wish the event every success.



**Dr. MANMOHAN SINGH**
**Hon'ble Prime Minister of India**

I am glad to know that the 40th anniversary of the founding of Auroville is being celebrated on February 28, 2008. It is heartening that Matrimandir, described by the Mother as the *"Soul of Auroville"*, is being declared open on the occasion.

The life and work of Sri Aurobindo and the Mother underlined the deeper spiritual basis of human civilization and aimed at uniting mankind on the common thread of understanding and reconciliation. The resonance of their teachings reverberated across the world and awakened consciousness of humanity for lasting peace and harmony. Auroville, which was established by the Mother to establish human unity through integral yoga, has emerged as an important institution inspiring generations of people to establish a world order based on peace, fellowship and commonalities of diverse faiths.

On this occasion, I pay my homage to Sri Aurobindo and the Mother and wish the 40th anniversary celebrations of Auroville all success.



**Dr. ARJUN SINGH**
**Hon'ble Minister**
**For Human Resource Development**

I am glad to note that the 40th Anniversary of Auroville is being celebrated on February 28, 2008 and that a four page supplementary edition is being published by The Hindu on this occasion. I am particularly happy to learn that a major project like Matrimandir building is also becoming fully functional and will be opened of February 28, 2008.

I convey my best wishes to the Auroville Foundation for its future endeavours.



**Dr. KARAN SINGH**
**Chairman, Auroville Foundation**

Since the dawn of civilization, in its long and tortuous journey through the corridors of time, humanity stands poised today at the most critical crossroads. It faces a crisis dimensions that are so intricate that they seem to defy resolution. Stark and endemic poverty, gratuitous degradation of the environment and mindless conflicts because of human hubris appear along with unprecedented economic growth and prosperity. However, the roots of the gathering crises enveloping us essentially go deep into our collective spiritual consciousness and raise profound moral and spiritual issues. At times like these, full of conflict and turmoil, defining change and transition, we turn for enlightenment to great spiritual guides who have illuminated humanity's path through the ages. Sri Aurobindo was one such persona that strode our recent political, literary, intellectual and, above all, spiritual landscapes like a colossus.

*Vasudaiva kudumbam* – the world is a family – as a precept on human unity is a part of Indic civilizational inheritance. Yet, not only our country but the entire world is riven by fault lines based on myriad meaningless attributes. Human history is replete with instances of conflicts prompted by these premises that have caused incalculable human suffering over the ages. Ironically, many wars were fought on the pretext of bringing about unity that have further disaggregated nations and built walls that separated kith from kin.

Auroville, the city of dawn, was conceptualised by the Mother in this context as an affirmation that, if humanity is to survive on this earth, efforts are essential to meet the challenges posed by the crises that create and perpetuate disharmony and disaffection among people

and between nations. Sri Aurobindo, writing on the Ideal of Human Unity, elaborated on his concept of *devasanghas,* spiritual communities, that will ultimately coalesce into an universal gnostic society based on the concept of integral yoga and, overcoming dark forces of nature, will lead humanity into the realm of supramental consciousness where mind is unfettered by social or economic attributes. Sri Aurobindo's companion in this voyage towards a new dawn, the Mother, gave physical manifestation to his vision on February 28, 1968 by founding the international cultural township of Auroville in the proximity of the ashram where Sri Aurobindo blended his light with Light Eternal on December 5, 1950.

Auroville's development, during the past 40 years, is marked by triumphs and trials that have to be understood in the context of the evolutionary crisis through which we are passing today. Ours is the time when highest aspirations are seen foundering on the shoals of dead habits and negative forces. For Auroville to be truly relevant to the present times, it will have to find and realize within itself the answers to some of the most disturbing questions that we are confronted with. The critical survival issues are to realise and manifest the City that Planet Earth needs and to endow it with collective and definitive opulence of the ideal of human unity that Sri Aurobindo spoke of. Evidently, these are very difficult issues to address.

Auroville today may seem far from that vision of the city of a new dawn that both Sri Aurobindo and Mother has so eloquently written and spoken about. Yet Auroville must press on ceaselessly towards that future whose effulgence Sri Aurobindo has predicted, where dualities, hesitations and limitations of mortal mind cease to exist and human consciousness is knocking at the doors of the supramental realm. The completion of the unique and magnificent 'Matrimandir' on February 28, 2008 and the installation of Sri Aurobindo's statue at Savitri Bhavan are both encouraging symbols.

On this 40th anniversary of the founding of Auroville, I close with the following celebrated lines from Sri Aurobindo:

*"WE DO NOT BELONG TO THE PAST DAWNS.*
*BUT TO THE NOONS OF FUTURE."*

**Sri M.RAMASWAMY I.A.S**
**Secretary , Auroville Foundation**

Auroville is a universal township in the making for a population of up to 50,000 people from around the world. It is located mostly in Tamilnadu, although some parts are in the Union Territory of Puducherry. It lies a few kilometres inland from the Coromandal coast, approximately 160 Km south of Chennai and 10 Km north of Puducherry.

The Matrimandir (Temple of the Mother), the soul of Auroville, is located at the epicentre. It has been completed. Matrimandir is the Mother's Dream. It was made a reality by Shri Roger Anger, the Chief Architect of Auroville. He passed away on January 15 after completing the Matrimandir project. He was responsible for the minute details and design of this huge wonder, and this is his masterpiece, is built for the benefit of Auroville and for the humanity. Matrimandir consists of beautiful gardens, a huge spherical structure that is 29 meters high and 36 meters in diameter and gold disc - clad with 12 petals (Meditation Rooms) and an Inner Chamber for silent concentration. Matrimandir is the living symbol of Auroville's aspiration for the Divine manifestation.

Auroville will be an ideal self supporting township with all the comfort and facilities needed for each one to freely develop higher consciousness and aspire for the divine life.

**Dr. ASTER MIRA PATEL**
**Member, The Governing Board, Auroville Foundation.**

Today we celebrate the 40th anniversary of the founding of Auroville, an extraordinary adventure of our times.

It was the vision of Sri Aurobindo, the great nationalist leader, poet, philosopher and 'rishi' that inspired it. And the Mother gave it concrete form as an international township, a 'city' where the growing 'soul' of man could find an abode to shelter and nourish him, as he explored the greater possibilities of the future.

It was this future of man that Sri Aurobindo was in quest of. In the early years of the 20th century, Sri Aurobindo foresaw a great crisis coming upon humanity, a crisis leading to another stage in the earth's evolution.

He wrote at the time: "At present mankind is undergoing an evolutionary crisis in which is concealed a choice of its destiny; for a stage has been reached in which the human mind has achieved in certain directions an enormous development while in others it stands arrested and bewildered and can no longer find its way... Man has created a system of civilization which has become too big for his limited mental capacity and understanding and his still more limited spiritual and moral capacity to utilise and manage... The evolution of Mind working upon Life has developed an organization of the activity of Mind and use of Matter which can no longer be supported by human capacity without an innerchange."...

The physical field of this adventure is here in rural Tamil Nadu. But the attraction to it today is worldwide. There are groups of people everywhere who respond to it and support it. Auroville is like a 'morphogenetic' field, where the world comes in for an evolutionary experience of a 'transformative' action and it meets India. And India too does not remain unchanged.

A 'wholeness' result of new qualities is taking shape in the kind of human personality it is beginning to create and in the 'structures of life' by which it tries to function. Unpredictable and not always easy to accept, but invaluable in the possibilities that it holds. India has the vision to create this 'space', both inner and outer, and to offer herself for such an interaction to realize a greater future for humanity.

**Prof. R. MEENAKSHI**
**Board Member**
**Sri Aurobindo International Institute of Educational Research**
**Auroville**

Auroville's development is intertwined with the surrounding villages, which are classified as part of a "most backward area in need of development." There are 13 villages in the immediate area of Auroville's Master Plan, comprising about 40,000 people, and altogether 40 villages in the bioregional area. Some 400 people from the surrounding villages have joined, or been born, in Auroville. Its present population is about 1,940 representing more than 35 countries. Almost 5,000 local people are employed by Auroville, from multipurpose workers to engineers. Most of them have been trained in Auroville to improve their qualifications and skills. Most important is the fact that Auroville provides for the young of this rural area a real and viable alternative to migration to cities and urban centres, which is often the only option for those seeking improvement of their prospects and employment.

Over the past 15 years, the Auroville village development groups (Auroville village Action Group, Health Centre, Dental Care programme, Pitchandikulam, Harvest, Palmyra and Aranya) have been engaged in development activities, with funding from a number of national and international organisations.

*These programmes aim to:*

- Improve the health situation through education, preventive care and treatment, and by empowering women;
- Encourage in each village the growth of community spirit and leadership by ensuring people's participation in developmental programmes;
- Raise the standard of living of the local population through vocational training and self employment, aiming mainly to touch the youth, involving the villagers in a cooperative effort of wasteland reclamation, watershed management and environmental regeneration, and disaster management to face events such as tsunamis and cyclones.
- Provide integral education to the village children and youth.

The villages appear like satellites of Auroville, where both sides have been gaining from each other, not only economically but also in terms of values, practices and material wealth. The villagers have been not only earning a salary but have also been enabled to set a course in life without much imposition from Auroville. We are in a constant dynamic state of exchange, and this is a form of wealth from which both sides benefit.

Much more still needs to be done, but real long-term change can only be achieved when it is allowed to emerge from within, naturally, gradually, organically. Auroville can only plant the seeds.

'THE HINDU' - SPECIAL ISSUE - FEB - 2008

# ஆரோவில் கங்கை

முன்புநீ
இமயமலையில் பிறந்தவள்தான்!
மீண்டும் அரவிந்த மனத்திலே பிறந்தாய்!
இமாலயத்து வெண்பனி
மலராய் மணக்கும்
அன்னைமடி தவழ்ந்தாய்!

ஆரோவில் கங்கையே,
நாங்களெல்லாம் பகீரதர்கள்தாம்.
புதிய மனிதஇனமென்னும்
ஒரே பகீரதர்.
மண்மீது உனைக் கொணர
இங்கியற்றும் தவம் புரிகிறதா?

திரிவேணியே,
இம்மண்ணின் ஓடைநீரும்
எங்கள் உழைப்புடம்பின் உவர்நீரும்
தேவ ஆசிகளாய்ப் பொழியும்
ஆகாச நீருமாய்க்
கலந்து வருகின்றாய்.

புத்தம்புதுக் கங்கைநீ!
ஜீவநதிப் பெருக்கம் நீ!
ஆரோவில் கங்கையே,
நீயே நதிகளின் தனித்தலைமை.
கவிதைகளில் சர்வதேசப் புதுக்கவிதை.
சிறியதாய்த் தொடங்கி
விஸ்வமாய் ஓங்காரிக்கும்
நிலைத்த முதன்மை-

உன்னில் எது இல்லை?
ஆரோவில் கங்கையே,
கரையோரம்
கலப்புநிலச் செழுமைகள்
ஆலம்விழுதுகளின்
புதிய பசுமைகள்
உன்மீது மிதக்கும்
வண்ணத் தேன்மலர்க் கூட்டங்கள்

இன்முகம் காணத் துடித்து வரும்
பறவையினங்கள்.
ஆரோவில் கங்கையே,
உன்னையே உச்சரித்து
உன்னுள்ளே ஆழ்ந்து
'தான்'களைக் கரைக்கும்
ஆத்மானுபூதிகள்.

ஓ, மகாமுக்தியே,
அழுகலையும்
அழுக்குகளையும் செரிக்கும்
மூலிகை மூலத்தை
எவரிடம் பெற்றாய்?
சத்திய கங்கையே,
எப்போதும்
உன்னையே உயிர்க்கிறேன்.
எரியும் என்னை அமிழ்த்துகிறேன்.
'நான் நீயேயாகுக'
நான் நீயேயாகுக!'

இரா.மீனாட்சி

# ஆன்மிகம் வளர்க்கும் ஆரோவில்

சொ. அருணன்

'யாதும் ஊரே யாவரும் கேளிர்' என்று ஈராயிரம் ஆண்டுகளுக்கு முன்னர்க் குரல் கொடுத்த தமிழ்மண்ணில் அப்படியொரு அதிசயம் மெய்யாகவே நிகழ்ந்துவிட்டது என்பதன் அடையாளம் ஆரோவில்.

ஆம். "எல்லா நாடுகளையும் சேர்ந்த ஆண்களும், பெண்களும், மதக்கோட்பாடுகளையெல்லாம், அரசியல் ஈடுபாடுகளையெல்லாம், நாட்டுப்பற்றுக்களையெல்லாம் தாண்டி, அமைதி, மேலும் மேலும் சிறந்து வளரும் சமூகம் முதலியவற்றின் அடிப்படையில் வாழக்கூடிய ஒரு சர்வதேச நகரமாக இருக்க ஆரோவில் விரும்புகிறது. மனிதகுல ஒருமைப்பாட்டை உண்மையாக்குவதே ஆரோவில்லின் நோக்கமாகும்" என்ற பிரகடனத்தோடு ஸ்ரீஅரவிந்த அன்னை விளக்கிய அற்புதத் திருக்கனவு நனவாகி இன்று 40 ஆண்டுகள் நடந்தேறி விட்டன.

"பழமையானவை, தற்காலத்தவை, புதியவை, இனிவரவிருப்பவை ஆகிய எல்லா மதங்களையும் விட்டுவிட்டுக் குறிப்பாகத் தெய்வத்தன்மையுடைய வாழ்க்கையை வாழ விரும்புகிறவர்களுக்காக ஏற்பட்டதே ஆரோவில். தன்னுடைய உணர்வைக் கண்டுபிடிக்க முயற்சி செய்வதற்கான ஓர் இடம் இது" என்று அன்னை பூமிப்பரப்பின் வரைபடத்தை வைத்துக்கொண்டு குறிப்பிட்ட ஓரிடத்தில் தொட்டுக்காட்டினார். அந்த இடத்தில் ஆரோவில் உருவாக வேண்டுமெனச் சொன்னார்.

விண்ணையும் மண்ணையும் இணைக்கும் உன்னத ஆன்மிகத்தலமாக உருக்கொள்ளும் ஆரோவில் நகரத்திற்காக, அன்னை சுட்டிக்காட்டிய இடம் விழுப்புரம் மாவட்டத்திலுள்ள வானூர் வட்டப் பகுதியில் அமைந்தது. அது இன்றைக்குப் புதுச்சேரியிலிருந்து 12 கி.மீ. தொலைவில் உலகப் புகழ் பெற்ற ஆரோவில்லாக மலர்ந்துள்ளது.

இது சித்தர்பூமி. கடுவெளிச்சித்தர் தவம் செய்த புண்ணியபூமி. இந்த இடத்தில் ஆரோவில் உருவாகும் என்று கடுவெளிச்சித்தர் கூறியிருப்பதாக இப்பகுதி மக்கள் சொல்வதுண்டு.ஆரோவில்லைச் சுற்றிலும் பழஞ் சிறப்புக்குரிய சிவாலயங்கள், சிறுதெய்வக்கோயில்கள் அமைந்துள்ளன.18 சிவன்கோயில்கள் உள்ளனவாக இப்பகுதி மக்களால் சுட்டப்பெறுகின்றன. குறிப்பாக, திருஞானசம்பந்தப்பெருமானால் பாடப்பெற்ற இரும்பை மாகாளம், திருவக்கரை, அரசிலி ஆலயங்களை ஒட்டி ஆரோவில் அமைந்துள்ளது.

மேலும், அகத்தியர் தவஞ்செய்த வேதபுரமாகிய புதுச்சேரி, வள்ளலார் வாழ்ந்து வழிகாட்டிய வடலூர் ஆகியவற்றின் அருகாமையில் அமைந்துள்ளது ஆரோவில். தொன்மைச் சிறப்புக்கும், பன்னெடுங்காலத்திற்கு முன்னரே நம் மூதாதையர் வாழ்ந்த பூமி என்பதற்கும் அடையாளமாக இங்கு ஏராளமான முதுமக்கள் தாழி உள்ளிட்டவை காணப்பெறுகின்றன. இதற்கெனத் தொல்லியல் துறையின் துணையோடு இங்கு ஆய்வுகளும் மேற்கொள்ளப்பெறுகின்றன.

இப்படிப் பல்வேறு சிறப்புகள் உடைய இப்பகுதியில், 1968-ஆம் ஆண்டு பிப்ரவரி மாதம் 28-ஆம் நாள் ஆரோவில் நகரத்தைக் கட்டும் பணிக்கு அடிக்கல் நாட்டப்பட்டது. இதற்கு இந்தியாவிலிருந்தும், தமிழகம் மற்றும் புதுவையிலிருந்து 5000 பேர் வந்து குழுமினர். அதன் மையத்திலிருந்த பெரிய ஆலமரத்திலிருந்து சிறிதுதொலைவில் ஒரு வட்ட வடிவமான மேடையில் தாமரை மொட்டு வடிவத்தில் சலவைக்கல்லாலான ஒரு தாழியில் உலகத்தின் 121 நாடுகளிலிருந்தும், இந்தியாவின் 25 மாநிலங்களிலிருந்தும் அந்தந்த இடத்திலிருந்து ஒரு பிடி மண் கொணரப்பெற்று அங்கு இடப்பெற்றது. இந்த உலகநகரில் சுமார் 50,000 பேர் வசிப்பதற்காகத் திட்டமிடப்பட்டு உருவாக்கம் பெற்றுவருகிறது. நகரத்தின் மையத்தில் ஆரோவில்லின் ஆன்மாவாகிய மாத்ரிமந்திர் அமைந்துள்ளது. அதனைச்சுற்றி பூந்தோட்டங்கள் உள்ளன. இந்த மையப்பகுதிக்கு, பேரமைதி (Peace) என்று பெயர்.

இந்த மையத்திலிருந்து நாற்புறமும் சுருள் சுற்று வடிவத்தில் விரிந்த நான்கு பகுதிகள் உள்ளன. அதன் தென்கிழக்குத் திசையில் குடியிருப்பும், வடகிழக்குத் திசையில் பண்பாட்டுப் பகுதியும், தென்மேற்குப் பகுதியில் பன்னாட்டுப் பகுதியும், வடமேற்குத் திசையில் தொழிற்கூடங்களும் அமைந்துள்ளன.

புதிய கட்டடக்கலைகள் பலவற்றின் உறைவிடமாகத் திகழும் ஆரோவில்லின் குடியிருப்புகள் இயற்கைச் சூழ்நிலையோடு அழகுநிறைந்து விளங்குகின்றன.

பன்னாட்டுப் பகுதியானது, ஒரு மைய அரங்கம், அனைத்து நாட்டு இசை, நடனம், நாடகம் முதலியன பயிற்றுவிக்கும் கூடங்கள், கலைஅரங்குகள், நூலகங்கள், பரிசோதனைக் கூடங்கள், கல்வி பற்றிய ஆய்வுக் கூடங்கள், விளையாட்டரங்குகள் கொண்டதாக அமைகின்றன.

பன்னாட்டுப் பகுதியில் ஒவ்வொரு நாட்டிற்கும் ஓர் அரங்கு இருக்கும். அங்கு அந்தந்த நாட்டின் கலை, பண்பாடு, வாழ்க்கை முதலானவற்றை மற்றவர்கள் கண்டு அறிந்துகொள்ள, ஆய்ந்துணர உதவியாக அமைந்துள்ளது குறிக்கத்தக்கது.

இந்தியப் பகுதியான பாரத்நிவாஸ் முதல் அரங்கமாக அமைந்துள்ளது. அதன் அங்கமாகச் செயல்படும் ஆரோவில் தமிழ் மரபு மையம் குறிப்பிடத்தக்க பணிகளைச் சிறப்புற ஆற்றி வருகின்றது.

தற்போது திபெத் கலாச்சார அரங்கு உள்ளது. அமெரிக்கா, ஐரோப்பா, ஆப்பிரிக்கா ஆகிய கண்டங்கள் தங்களுக்கான அரங்குகளை நிறுவ முன்னேற்பாடுகளைச் செய்துவருகின்றன.

சுற்றுச்சூழலுக்கு மாசுஉண்டாக்காத வகையில் அமைந்துள்ள தொழிற்கூடப் பகுதிகளில் உயர்ந்த தொழில்நுட்பங்கள் பயன்படுத்தப்பெற்றுவருகின்றன. சிறிய, நடுத்தரத் தொழிற்கூடங்களாக அவை அமைகின்றன.

நகரப்பகுதியைச் சுற்றி மரங்களும், பூங்காக்களும், பூந்தோட்டங்களும் பசுமை வளையங்களாக நகரை எழிலூட்டி வருகின்றன.

ஆரோவில்லைச் சுற்றியுள்ள சிற்றூர்களில் வசிக்கும் மக்கள் இப்பகுதியின் ஆதிமுதல் குடிமக்களாகக் கருதப்படுகிறார்கள். ஆரோவில்லின் நோக்கினைப் புரிந்துகொண்டு அவர்கள் இயங்க வழிவகை செய்வதன் முதற்கட்டமாக, இங்குள்ள கிராமங்களின் வளர்ச்சி, கல்வி, நல்வாழ்வு, நல்ல குடிநீர், சத்துணவு, பொது சுகாதாரம், சூழல்காப்பு மற்றும் வாழ்க்கை மேம்பாட்டிற்கான முயற்சிகள் மேற்கொள்ளப்பெற்று வருகின்றன. தன்னிறைவு பெற்ற, கைத்தொழில் அறிந்த கல்வியறிவு பெற்றவர்களைக் கொண்டதாக அந்தக் கிராமங்கள் வளர்ந்து வருவதை இன்று காணமுடிகின்றது.

பன்னாட்டு மக்களுக்கிடையே நல்லிணக்கத்தையும் கலை, இலக்கிய, பண்பாட்டு நெறிமுறைகளைப் பகிர்ந்து கொள்ளவும் ஆன்மிகத்தின் அடிப்படையில் ஒருலகக் கருத்துணர்வை வளர்க்கும் வகையிலும் வளர்ந்துவரும் இந்நகரில் நான்குமொழிக்கொள்கை நடைமுறையில் உள்ளது. முதல்மொழி தமிழ். அடுத்து பிரெஞ்ச், சமஸ்கிருதம் மற்றும் ஆங்கிலம் இங்கு பேச்சு மற்றும் எழுத்துமொழிகளாக விளங்குகின்றன. 'ஆரோவில் டுடே' என்னும் இதழ் (1988ஆம்ஆண்டிலிருந்து) ஆங்கிலமொழியில் வெளிவந்து கொண்டிருக்கின்றது. வலைதளத்தின்மூலமாக, 'ஆரோவில் ரேடியோ' இயக்கம்பெறுகின்றது.



முற்றிலும் வறண்ட பூமியான இதனைச் செழிப்புமிகுந்த ஆன்மிக நகரமாக உருவாக்குவதற்கு 40 நாட்டுமக்கள் உள்ளூர் மக்களின் துணையோடு உழைத்துவந்திருக்கின்றார்கள். மழைநீர் சேகரிப்பு, இயற்கைவேளாண்மை, மாற்றுச்சக்தி மற்றும் மறுஉற்பத்தி செய்யவல்ல (சூரிய சக்திப் பலகங்கள் வழி) பொருள்களைக் குறைந்த விலையில் உற்பத்தி செய்து வழங்குதல், விதைகள் சேகரிப்பு, மர நாற்றுப் பண்ணைகள், ஆராய்ச்சிப் பணிகள் எனப் பலவற்றைச் செய்துவரும் ஆரோவில்லின் நோக்கம் மானுடம் மேம்பாடடைதல் என்பதேயாகும். சிதைவுக்குள்ளாகி வரும் பழங்காலக் கட்டடங்களைப் பாதுகாத்தல், மரபு மாறாமல் புதுப்பித்தல், இயற்கையோடு இசைந்த வண்ணம் கட்டடங்களை எளிமையாக அமைத்தல், உள்ளூர்ப்பள்ளிகளின் கல்வித்தரத்தைமேம்படுத்துதல், உள்ளூர் விளையாட்டுக்களை உயர்த்துதல் என்பதான நிலைகளில் விரிவாகவும், ஆழமாகவும் ஆரோவில் தன் பணிகளைத் தொடர்கின்றது.



இயற்கை கொலுவிருக்கும் எழிலார் சோலைகளுடன் அமைந்திருக்கும் ஆரோவில் தன்னைச் சுற்றியுள்ள கிராமங்களை முன்னேற்றும் முயற்சிகளிலும் முனைந்துள்ளது. இயற்கை சார்ந்த நவீனத்தொழில்நுட்ப உதவியுடன் மேற்கொள்ளப்பெறும் முயற்சிகள் அனைத்தும் உயர்வளர்ச்சியை அடிப்படையாகக் கொண்டவை. கடற்கரை வளர்ச்சிமையம், உள்ளூர் அலுவலர்கள், தொண்டு நிறுவனங்கள் ஆகியோருடன் இணைந்து பல சீரிய பணிகள் மேற்கொள்ளப்பெறுகின்றன.

சுனாமிகா, ஸ்மால் ஸ்டெப்ஸ், வெல்பேப்பர் போன்ற திட்டங்கள் மூலம் கழிவுப் பொருட்களைப் பயன்படுத்தி, பிற மாற்றுப் பொருட்களை உற்பத்திசெய்து உள்ளூர் மக்களுக்கு வேலை வாய்ப்பு உருவாக்கப்படுகின்றது.

25 அறக்கட்டளைகளின் கீழுள்ள 140க்கும் மேற்பட்ட வணிக நிறுவனங்கள் உற்பத்தி செய்யும்பொருள்கள் பல உலக நாடுகளுக்கு ஏற்றுமதி செய்யப்பெறுகின்றன.

மறுஉற்பத்தி செய்யவல்ல சக்திகள், காற்றுமூலம் மின்சார உற்பத்தி, உயர்தர இயந்திரங்கள், தகவல் தொகுப்புகள் ஆகியவற்றில் தனித்துவமுடைய நிறுவனங்கள் உருவாகியுள்ளன. இயற்கையை மாசுபடுத்தாத 2 உலோகத் தொழிற்கூடங்கள், உயர்தரத்தொழில்நுட்ப வசதிகொண்ட ஒலிப்பதிவுக்கூடம், விண்வெளி வீரர்கள் விண்வெளிப்பயணத்தின்போது உட்கொள்ளும் ஸ்பிருலினா (உணவுப்பாசி) உற்பத்திசெய்யும் நிறுவனம், பேக்கரிகள் மற்றும் கைவினை உற்பத்தித்தொழிற்கூடங்கள் எனப் பல்வகை நிறுவனங்கள் சிறப்புறச் செயல்படுகின்றன.

ஆரோவில் குழந்தைகளுக்கான 5 பள்ளிகள், 2 சிறார்பள்ளிகள், 2முன் மழலையர் பள்ளிகள் இவற்றோடு ஆரோவில் பகுதியைச் சுற்றிலும் 16 பள்ளிகள் அமைக்கப்பட்டுள்ளன. கிராம இளைஞர்கள் தொழிற்கல்வி கற்றுக் கொள்வதற்கென ஒரு தொழிற்பள்ளியும், பணிமுடித்துத் திரும்பும் தொழிலாளர்களுக்கான இளைஞர்கள் கல்விமையமும் இயங்குகின்றன.

8 மொழிகளில் 25,000 மேற்பட்ட நூல்கள் மற்றும் குறுந்தகடுகளைக் கொண்ட நூலகங்கள் இங்கு உள்ளன. இந்திய மற்றும் பிறநாட்டுமொழிகளைக் கற்பதற்கான மொழிக்கூடம் இங்கு உள்ளது. பாரத்நிவாஸ் வளாகத்தில் ஆரோவில் ஆவணப்பாதுகாப்பு மையமும் செயல்படுகின்றது.



நடனம், யோகா, தற்காப்புக் கலை, இசை, ஓவியம் முதலியவற்றிற்கான பயிலரங்குகள், கண்காட்சிகள், கலைநிகழ்ச்சிகள், பல்வேறு ஒருங்கிணைந்த மருத்துவச்சிகிச்சை முகாம்கள், அறிவியல் கண்காட்சிகள் தொடர்ந்து நடத்தப்பெற்று வருகின்றன.

ஆரோவில்லிற்கும் வெளி நிறுவனங்களுக்கும் தங்கள் பங்களிப்பை நல்கிவரும் எழுத்தாளர்கள், இசை மற்றும் ஓவிய, நடன, கட்டடக்கலைஞர்கள், சிற்பிகள், நடிகர்கள், மட்பாண்டக்கலைஞர்கள் பலர் இயங்கிவருகின்றனர். பல நாடுகளுக்குச் சென்று கலைநிகழ்ச்சிகள் நிகழ்த்திவரும் கலைக்குழுக்களும் இங்கு உண்டு. அறிவியல் சாதனைகளும் ஆன்மிகவழியில் இங்கு நாள்தோறும் பொலிவு பெற்றிலங்குகின்றன.

40க்குமேற்பட்ட விருந்தினர்இல்லங்கள், மாணவர், இளைஞர்விடுதிகள் இங்கு அமைந்துள்ளன. ஆய்விற்காகவும், ஆன்மபரிசோதனைகளுக்காகவும் இங்கு ஆண்டுதோறும் ஆரோவில் சபைகளைச் சார்ந்த பன்னாட்டினர் வந்து தங்குகின்றனர்.

ஆயிரம்பேர் அமர்ந்துண்ணும் வகையில் இங்கு இயங்கும் சூரிய சக்தி உணவகம் (சோலார் கிச்சன்) குறிப்பிடத்தக்க ஒன்று. அதேபோல், இண்டஸ்வேலி என்னும் அமைப்பின் விருந்தோம்பும் பாங்கு இங்குக் குறிப்பிடத்தக்க ஒன்றாகும். இங்கு வருகைதரும் யாரும் தமது உணவுக்காக விலை கொடுக்க வேண்டியதில்லை. எனினும் தம்மைப்போல் பின்னர் வரும் விருந்தினர்க்காகத் தாம் விரும்பும் தொகையையோ, பொருளையோ, உழைப்பையோ செலுத்தி மகிழலாம். இங்கு விருந்துண்ண வருபவர்கள் முன்கூட்டியே பதிவு செய்து கொள்வது நல்லது.

ஸ்ரீஅரவிந்தரின் சாவித்ரி காவியத்தை நினைவூட்டும் வகையில் அமைந்துள்ள சாவித்ரி பவன், சிறப்பாக உருவாகி வரும் கலைக்கூடம். கண்காட்சிக்கூடம், நூலகம், கருத்தரங்க அரங்கு என்னும் பன்முகத்தன்மைகளோடு கட்டப்பெற்றுவரும் இதன்முன் கம்பீரமாகக் காட்சிதருகின்றார், ஸ்ரீஅரவிந்தர் - ஏழரை அடி உயர வெண்கலச் சிலைவடிவில்.

பன்னாட்டுச் சிறப்புகளும் ஒருங்கிணைந்த ஆரோவில்லின் கட்டடக்கலை முதலான அனைத்துக் கலைகளும் கண்டுகளிப்பதற்கு மட்டுமன்றிப் பின்பற்றுதற்கும், தலைமுறை கடந்து பேணுதற்கும் உரியவை எனலாம். ஆரோவில் பாரத தேசத்தில்- குறிப்பாக, தமிழ்நாட்டில் அமைந்துள்ளது நாம் செய்த தவப்பயனே ஆகும்.

### ஆரோவில் பெற்ற சிறப்புகள்

1968ல் நடைபெற்ற ஆரோவில் தொடக்கவிழாவில் 124 நாடுகள் பங்கேற்று ஆரோவில் சாசனத்தை ஏற்றுக்கொண்டன. 1988இல் இந்திய அரசு ஆரோவில் பவுண்டேஷன் சட்டத்தை நிறைவேற்றி, நிர்வாகப் பேரவை, பன்னாட்டு ஆலோசனைக் குழு, ஆரோவில்வாசிகள் அவை ஆகியவற்றை அமைத்தது. ஆரோவில் நகரத்திட்டத்திற்கு அங்கீகாரம் அளித்ததோடு, நிதியுதவியும் வழங்கிவருகின்றது.



யுனெஸ்கோ, ஐரோப்பிய ஒன்றியம் மற்றும் உலகின் முக்கியத்தொண்டு நிறுவனங்கள் போன்றவற்றின் நல்லுறவையும், அங்கீகாரத்தையும் ஆரோவில் பெற்றுள்ளது. 6 கண்டங்களில் உள்ள உலக அமைதிச் சின்னங்களின் வரிசையில் ஆசியாவிற்கான அமைதி மேசை ஆரோவில்லிற்கு வழங்கப்பெற்றுள்ளது. இம் மேசையை ஐநா. சபை நட்புக்குழு சார்பில் நியூயார்க் நகரில் வழங்கப்பெற்றபோது ஆரோவில்லின் பிரதிநிதியாக நமது தமிழ்க்கவிஞர் இரா.மீனாட்சி அதனைப் பெற்றுக்கொண்டார் என்பது குறிப்பிடத்தக்கது.

பல பன்னாட்டுக் கருத்தரங்குகள் இங்கு நடத்தப்பெறுகின்றன. ஆரோவில்லிற்கு ஆதரவுநல்கிவரும் ஆரோவில் பன்னாட்டு மையங்கள் மற்றும் தொடர்பு அலுவலகங்கள் 23 நாடுகளில் அமைந்துள்ளன.

உலகப் புகழ்பெற்ற தலைவர்களான இந்திரா காந்தி, புனித தலாய்லாமா, யுனெஸ்கோவின் பொதுச் செயலர், ஐக்கியநாடுகள் சபையின் துணைப்பொதுச்செயலர், இந்தியக் குடியரசுத் தலைவர்கள், துணைக் குடியரசுத்தலைவர், மாநில, மத்திய அமைச்சர்கள், பிறநாட்டு அதிபர்கள், தூதர்கள், மற்றும் பல்துறைசார்ந்த அறிஞர் பெருமக்கள் எனப் பலரும் வந்து செல்லும் சிறப்புக்குரிய இடம் ஆரோவில்.

## மாத்ரிமந்திர்

'ஆரோவில்லின் ஆன்மா' என்று ஸ்ரீஅன்னையால் வருணிக்கப்பெற்ற 'மாத்ரிமந்திர்' என்ற வடசொல்லுக்கு 'அன்னை ஆலயம்' என்று பொருள். எனினும் அதற்கென சிலையோ, வழிபாடோ, பூசனைகளோ இங்கு எதுவும் மேற்கொள்ளப்பெறுவதில்லை. சமய, சமயச்சடங்குகள் கடந்த நிலையில் பிரபஞ்ச அன்னையாகிய மகாசக்தியை உணரும்வண்ணத்தில் உருவாக்கப்பெற்ற இக்கோளவடிவிலான மனஒருமைஅரங்கு 1971ஆம் ஆண்டு ஸ்ரீஅன்னையின் பிறந்தநாளன்று அடிக்கல் நாட்டப்பெற்றுக் கட்டுமானப்பணிகள் மேற்கொள்ளப்பெற்றன. பிரபஞ்சஅன்னையின் நான்கு மகாசக்தியின் செயல்பாடுகளைக் குறிக்கும்வண்ணம் இங்கு நான்கு தூண்கள் அமைக்கப்பெற்றுள்ளன.

மகாலட்சுமி, மகாசரஸ்வதி, மகாகாளி, மகேஸ்வரி, ஆகிய பிரபஞ்ச அன்னையின் செயல் வடிவங்களை ஸ்ரீஅரவிந்தர் உணர்த்தும் வகையில் இம்மண்டபத்தை, முறையே கிழக்கு, மேற்கு, வடக்கு, தெற்கு ஆகிய திசைகளில் நான்கு தூண்கள் தாங்கி நிற்கின்றன.

மாத்ரிமந்திர் சிறிது தட்டையான கோளவடிவிலான ஆலயமாகும். தரைமட்டத்திலிருந்து 29 மீ. உயரத்தில் உள்ள இக்கோளத்தின் விட்டம் 36மீ. முக்கோணவடிவச் சட்டங்களால் ஆன இக்கோளத்தின் புறப்பகுதி, தங்க ரேக்குகள் பதிக்கப்பெற்ற வட்டவடிவத் தட்டுகளால் அமைக்கப்பெற்றுக் காண்போரைக் கவர்கின்றது.

கோளத்தின் உட்புற மேற்பகுதியில் ஒரு பெருங்கூடம் உள்ளது. அதனுள் விக்கிரகங்களோ, படங்களோ, கிடையாது. பன்னிரு பக்கங்களைக் கொண்ட அந்த அறையின் தளப்பகுதியும், சுவர்களும் வெண்சலவைக்கற்களால் ஆனவை. பன்னிரு தூண்களைக்கொண்ட அந்த அறையில் சன்னல்கள் இல்லை. நுழையவும், வெளியேறவும் கூடிய வகையில் இரு வாசல்கள் உண்டு. அறையின் மையத்தில் ஸ்ரீ அன்னையின் சின்னமும், அதன் நடுவில் நான்குபுறமும் ஸ்ரீஅரவிந்தரின் சின்னங்கள் பொருத்தப்பெற்ற பொன்முலாம் பூசிய மேடையின்மீது உருண்டைவடிவிலான ஒளி ஊடுருவக்கூடிய படிகம் ஒன்று அமைக்கப்பெற்றுள்ளது. அதன் நேர் மேற்கூரையிலுள்ள ஆடியின் வழியாகச் சூரிய ஒளிக்கீற்றுகள் உள் புகுந்து படிகத்துள் பிரதிபலிக்கும் அழகு நேரில் தரிசித்து அனுபவிக்கத்தக்கது.சூரியஆற்றலை மின்கலங்களில்சேகரித்து வைத்துச் சூரியஒளி இல்லாத பொழுதுகளில் அப்படிகத்தின் மீது செலுத்தப்பெறும். இப்படிகம் உலகிலேயே மிகப்பெரிய செயற்கைப் படிகமாகும்.



மாத்ரிமந்திரைச் சுற்றி உள்ள பூங்காக்களின் எண்ணிக்கை 12 ஆகும். அது, பராசக்தியின் சத், சித், ஆனந்தம், ஒளி, வாழ்க்கை, ஆற்றல், செல்வம், பயன்பாடு, முன்னேற்றம், இளமை, இசைவு, பூரணச்சிறப்பு ஆகிய பன்னிரு அம்சங்களைக் குறிப்பனவாக அமைகின்றன.

'ஒருவன் தன்னை, தன் இருப்பை, இறை உண்மையை தன் வாழ்வின் உண்மையான நோக்கத்தை அறிய விரும்பினால், தன் ஆன்மாவை, சைத்திய ஜீவனைக் கண்டுகொள்ள விரும்பினால், இறைவனை அடைய விரும்பினால் அவன் அதற்காக ஒருமுனைப்படுதற்காக மட்டுமே இருப்பது மாத்ரிமந்திரின் நோக்கமாகும். பூரணத்தை நாடும் மனிதனின் ஆர்வத்திற்கு இறைவனுடைய பதிலின் அடையாளமாக இருக்கவே மாத்ரிமந்திர் விரும்புகிறது. இறைவனிடம் ஏற்படும் ஐக்கியம், மேன்மேலும் வளர்ச்சியடையும் மனிதகுல ஒருமையாக வெளிப்படுதல் மாத்ரிமந்திர். 'இது ஸ்ரீ அரவிந்தரின் கொள்கைப்படி பிரபஞ்ச அன்னையின் சின்னமாகவே விளங்குகின்றது' என்கிறார் அன்னை. ஆரோவில் ஒரு சமயநிறுவனம் அல்ல. அது சடங்குகளையோ சம்பிரதாயங்களையோ கொண்டதோ, அல்லது எந்த மதத்தினையும் சார்ந்ததோ இல்லை.

விஞ்ஞானமும், மெய்ஞ்ஞானமும் கைகோத்து மானுடகுலம் தழைக்க உழைக்கும் கர்மபூமி, ஆரோவில். 'ஊருக்குழைத்திடல் யோகம்' என்றார் பாரதியார். இங்கு 'உலகிற்குழைத்தலே பரிபூரணயோகமாக'க் கொள்ளப்பெறுகின்றது. போரே இல்லாத பொதுமை காண்பதற்கு ஆன்மிகநெறியில் அறிவியல் வளர்க்கும் ஞான பூமி, ஆரோவில் என்பதால், இங்கும் சோதனைகள் உண்டு. வளர்ச்சி குறித்த பிரச்னைகள் உண்டு. அவைகடந்து மேலே மேலே முன்னேறி வளரும் அனுபவத்தின் சாட்சியம் ஆரோவில்.

உலகத்தின் ஞானபூமியாக விளங்கும் இந்தியா, 'எல்லாரும் அமரநிலை எய்தும் நன்முறையினை உலகிற்களிக்கும்' என்று தீர்க்கதரிசனமாய் முன்மொழிந்த பாரதியாரின் சத்திய வாக்கை மெய்யாக்கும் வகையில் முன்னின்று இயங்கும் ஆரோவில்லுக்கு யாரும் வரலாம்.

<u>நினைவில் கொள்ளவேண்டியவை</u>

1. ஆரோவில் ஒரு சுற்றுலாத்தலமோ, பொழுதுபோக்கிற்குரிய இடமோ இல்லை. ஆன்மிக மையம்.
2. இங்கு எந்த மதத்தினையும் அடிப்படையாகக் கொண்ட வழிபாடோ, பூசனையோ கிடையாது.
3. ஆரோவில்லின் ஆன்மாவான மாத்ரிமந்திருக்குச் செல்ல எந்தவொரு நுழைவுக் கட்டணமும் இல்லை

<u>ஆரோவில்லின் இருப்பிடம்</u>

- சென்னை – புதுச்சேரி கிழக்குக்கடற்கரைச்சாலையில், பெரியமுதலியார் சாவடியிலிருந்து சுமார் 6 கி.மீ. தொலைவில் உள்ளது.
- திண்டிவனம் – புதுச்சேரி நெடுஞ்சாலையில் திருச்சிற்றம்பலம் கூட்டுரோட்டில் இருந்து சுமார் 10 கி.மீ. தொலைவில் உள்ளது.

## <u>ஆரோவில்லைக் காண விரும்புபவர்களுக்கு...</u>

1. பார்வையாளர்கள் மையம் (VISITOR'S INFORMATION CENTRE) உள்ளது. அங்கு ஆரோவில் பற்றிய கண்காட்சி, மற்றும் படக்காட்சி ஆகியவற்றைக் காணலாம். உணவுவிடுதி மற்றும் ஆரோவில்லில் உற்பத்தி செய்யப்பெறும் கைவினைப்பொருட்கள் விற்பனை செய்யும் அங்காடிகள் உள்ளன. மேலும், ஆரோவில் பற்றிய நூல்கள், துண்டறிக்கைகள், கையேடுகள் வழங்கும் சேவை மையங்களும் உள்ளன.





2. அதனைப் பார்வையிடும் அன்பர்களுக்குத் தோட்டத்திற்குச் சென்று மாத்ரிமந்திரைத் தொலைவிலிருந்து பார்வையிட நுழைவுச்சீட்டு வழங்கப்பெறும். அதற்கென எந்தக்கட்டணமும் கிடையாது. அதனைப் பெற்றுக்கொள்வோர், ஆம்பித் தியேட்டர் வரை சென்று தோட்டங்களைப் பார்வையிடலாம்.

3. அடுத்தக் கட்டமாக வரும் ஆன்மிக அன்பர்கள் மாத்ரிமந்திரின் 12 இதழ் அடுக்கு அறைகளுள் அமர்ந்து தியானம் புரிய அனும்திக்கப்பெறுவர்.

4. மைய உள் அறைக்குச் சென்று மன ஒருமையடைய வேண்டுவோர் மாத்ரி மந்திர் அலுவலகத்தில் தொலைபேசி வழியிலோ, நேரிலோ முன்பதிவு செய்துகொண்டு முறையான அனுமதி பெற்றுச் செல்லலாம். மழை நாட்களில் அனுமதி இல்லை. மாத்ரி மந்திர் பகுதியில் நுழையும்போது பூரண அமைதிநிலைக்குத் தயாராகிக் கொள்வது நல்லது.

5. பொதுவாக, ஞாயிற்றுக்கிழமைகளில் காலை 9.30 மணிமுதல் 12.30 வரையிலும் அனுமதி உண்டு. ஏனைய நாட்களில், காலை 9.30 மணிமுதல் மாலை 4.00 மணிவரை.

6. முன் அனுமதி பெற்றவர்கள் மட்டும், குறிப்பிட்ட எண்ணிக்கை அளவிலேயே மாத்ரிமந்திரினுள் செல்ல அனுமதிக்கப் பெறுவதால் முன்கூட்டியே பதிவு செய்துகொள்வது நல்லது. மழை நாட்கள் மற்றும் சில குறிப்பிட்ட தினங்களில் மாத்ரிமந்திருக்குச் செல்ல அனுமதிக்கப்பெறாத நிலையில் முன்கூட்டியே அதற்கான தகவல்களைத் தெரிந்துகொண்டு வருவது நல்லது. முக்கியமாக, சிறப்பு அனுமதி பெற்றுத் தருவதாகவோ, பிற சலுகைகள் செய்வதாகவோ சொல்பவர்களை நம்பி ஏமாறவேண்டாம்.

<u>மேலும் தகவல்களுக்கு...</u>

0413 - 2622268, 0413 - 2622204 ஆகிய எண்களில் தொடர்புகொள்ளலாம்.

**ஆரோவில் தொடர்பான தகவல்களுக்கு** - info@auroville.org.in
**பொதுமக்கள் தொடர்புக்கு** - outreachmedia@auroville.org.in
**ஆரோவில் இணையதளம்** - www.auroville.org

ஆகிய இணையதளங்களைப் பயன்படுத்திக்கொள்ளலாம்.



It is certain that the Tamil people will do all they can to realise human unity.

— Auroville organisation.

Blessings

**15.9.1970 அன்று ஆரோவில் நிர்வாகம் தமிழ் மக்கள் பற்றி வெளியிட்ட அறிக்கைக்கு ஸ்ரீஅன்னை அளித்த ஆசிகள்.**

அந்த அறிக்கையின் இறுதி வாக்கியம் : " . . . மனித ஒருமையை அடைய தமிழ் மக்கள் தங்களால் ஆவன அனைத்தையும் செய்வார்கள் என்பது உறுதி."

*Pages from yester years....*

# TAMILNADU PAVILION IN BHARATNIVAS AUROVILLE

Dr NAVALAR NEDUNCHEZHIAN

*Tamil Nadu Pavilion in BharatNiwas*

*(The foundation stone of TamilNadu Pavilion in Bharatnivas at Aurovile was laid on 28.10.1973.*

*Dr.Kalaigner M.Karunanidhi, Chief Minister of Tamil Nadu came for the purpose, accompanied by the Minister of Education and Tourism. Dr. Navalar V.R.Nedunchezhian who presided over the function. Here we are giving some pictures of the event and the summary of the speeches of the two principal speakers.)*

A great attempt is being made here in this city of unity, this "World City" to a very noble ideal. This same noble idea one can trace back to a thousand years when in this very land of Tamil Nadu, that ancient poet of "Purananooru" declared, "every man is my kinsman ". In the next line he goes on to say, "Theedhum Nandrum Pirar Thara Vara". "Goodness and badness cannot be given to you by others." And then he says "We shall not praise a man because he is big, we shall not despise a man because he is ordinary." What beautiful lines! What noble ideas! Is it not the same ideal that is being given shape here today? This place which is in the junction of two separate States, Pondicherry and Tamil Nadu, is really fit to stand as a symbol not only for the unity of the various States of India, but the unity of the entire mankind. This will be a 'World-City', 'a new city', and people from other countries of the world will come here and give their scientific and technical knowledge to us, and we of this ancient land will be able to impart something of our time- honoured culture and way of life.

Man has advanced considerably in many fields. He has studied Nature, all the manifold aspects of Nature, studied its workings, brought to light its secrets from the hidden depths, minutely studied the fundamentals - the elements, the constituents of the elements- the atoms. He has brought out the hidden great secret energy from the atom. He has reached the moon; in ten years he expects to explore the Mars. So much he has advanced in his outer life; but as yet he does not know himself, what is in himself. He does not understand himself, he does not understand his neighbor, how to have good relations with his neighbor , with others, with people of other States, with the people of other Countries. That is an urgent need and that need will be attended to in this place.

The idea of unity, equality and brotherhood putforth by the poet of 'Purananooru' will take shape here. Each nation will have full freedom to develop in peace its language, its culture, its traditions and its way of life to the full extent and there will be an amalgam of all the people of the world with good-will for each other and full cooperation. We have no hesitation in giving full support to this noble concept being put into practice there and we have already sufficient proof of its success.



## Dr KALAIGNAR KARUNANIDHI

The education minister, our Navalar (ic Thiru Nedunchezian), quoted in his speech those lines from our ancient poet of "Purananooru" which were written a thousand years ago. "Every country, every man is my kinsman". On hearing that, a young friend came to me running and said, "That poet must have been born in his village."

"Well, I do not know for certain whether that poet was born in this place or not! But I said, that beautiful idea. That great declaration was then announced from this land of Tamil Nadu to the whole world." And I say, not only in those ancient days, but today also, the same voice is reverberating in the whole of Tamil Nadu. "In many respects Tamil Nadu remains as a guide to the world. Sri Aurobindo, born in Bengal and having had contact with various western countries perhaps thought that this great idea to be accepted by the world must start from Tamil Nadu.

I came here in the morning and I have seen the various places and projects that are in the process of development. Certainly it is not possible to get the results of this work, a huge attempt on a vast scale, tomorrow or the day World-City. The Banyan Tree is huge and gives shelter to hundreds of persons. But its seed is small. This project is not exactly in the seed-state. It has already put out its tender shoots. There is no doubt that this city shall shine as the guiding light for all the countries of the world at large.

I do know, when the city was started, there were serious misgivings in the minds of several people around. This has been the case from ancient times whenever a new idea, a new invention, a new discovery, a new concept was put forth. And so it was in this case also and many refused to believe in this "New World".

And it was also thought that the growth of this city may affect the development of the surroundings. But on the contrary I am told that these same villagers are new very gladly cooperating in the work of the development of this great project.

Undoubtedly a great future is in store for this project. We see that in the beginning, new ideas are looked upon with suspicion. For example when it was said that the earth was round, people did not accept it. And the same when it was discovered that the earth was rotating round the sun.

I remember when I was a boy, photography had just then come. One commercial photographer came to our village and took photos of some persons. But the majority were against being photographed. My own father was of the opinion, if a photograph is taken of any person, half the life-span of the person would enter into the photo and the person will be left only with the other half of his life-span. My father had to be persuaded and after great difficulty his photo was taken. He lived a long life. So, the suspicions about this new venture also prove, that mankind has yet to get rid of this fear for anything new, the fear of the unknown.

Ref: Sri Aurobindo's action- January 1974



# கனவும்! நனவும்!

சொ. அருணன், இளைஞர்கள் கல்வி மையம், ஆரோவில்.

'எண்ணிய முடிதல் வேண்டும்" என்று நாம் எடுத்துக்கொண்ட தமிழ்மரபு மையத்தின் நோன்பான பாரதி-125 விழா சென்ற டிசம்பர் 2006இல் தொடங்கி, டிசம்பர் 2007இல் இனிதாக நிறைவுற்றது. மகாகவி பாரதியாரைக் குருவாகவும் வழிகாட்டியாகவும் கொண்ட தமிழன்பர்களுக்கு இது ஒரு விழாக்காலம். நூற்றாண்டுவிழாவை அடுத்து, அண்மையில் வந்த 125-ஆவது பிறந்தநாளைக் கொண்டாடும் காலத்தில் வாழ்பவர்கள் பேறுபெற்றவர்கள்.

அவரவர் இயல்புக்கும், வாய்ப்புக்கும் ஏற்பக் கொண்டாடி வரும் **பாரதி 125**-ஆவது விழாவை ஓர் ஆண்டு முழுவதும் அமர்க்களமாகக் கொண்டாடிச் சிறப்புப் பெற்றது, ஆரோவில் தமிழ் மரபு மையம்.

ஸ்ரீஅரவிந்த அன்னையின் கனவு பூமியாகிய ஆரோவில் தமிழ் மரபு மையத்தின் சார்பில் சென்ற ஆண்டு டிசம்பரில் எழுத்தாளர் ஞானபீடம் ஜெயகாந்தன் அவர்களால் தொடங்கி வைக்கப்பெற்றது **பாரதி 125** பிறந்த ஆண்டுக் கொண்டாட்டம். 10.12.2006 அன்று, பாரதியார் சிந்தனைகளை முன்வைத்து, கதை, ஓவியம், பாட்டு, கட்டுரை, எழுத்து ஆகிய துறைகளில் இளையோர்களுக்கான பயிலரங்குகள் நடத்தப்பெற்றன. 11.12.2006 அன்று பாரதி125 விழா, சிறப்பாகக் கொண்டாடப்பெற்றது.

தமிழ்மரபு மையத்தின் சார்பில் அனைவரையும் தில்லைகணபதி வரவேற்றார். அமைதிப் பேரவைத் தலைவர் பேராசிரியர் ந.அர்த்தநாரி தலைமை வகித்தார். திரு. ஜி.வரதராஜன் முன்னிலை வகித்தார். கவிஞர் இரா.மீனாட்சி நோக்கவுரையாற்றினார். சிறப்புவிருந்தினராக வருகை தந்த இசையமைப்பாளர் கங்கை அமரன் வாழ்த்துரை நல்கித் தெய்வகீதம் இசைத்தார். கவிஞர் இரா.மீனாட்சி எழுதிய உதயநகரத்திலிருந்து கவிதைத்தொகுப்பு நூலையும், மகாகவி பாரதியார் கவிதைகளில் புதுச்சேரி என்ற நூலையும் எழுத்தாளர் ஜெயகாந்தன் அவர்கள் வெளியிட, திபெத்தியக் கலாச்சார மையத்தைச் சார்ந்த கல்சாங், மற்றம் தாகூர் கலைக்கல்லூரிப் பேராசிரியர் முனைவர் சிவமாதவன், புதுச்சேரி பாரதியன்பர்கள் அறக்கட்டளைத் துணைத்தலைவர் ஹேமச்சந்திரன் ஆகியோர் பெற்றுக்கொண்டனர்.

பாரதிபாடல்களைப் பாடியும், ஆடியும் மகிழ்வித்தனர் பல்வேறு கலைஞர்கள். மோகனம் கலாச்சார மையமாணவியர் அச்சிரம்பட்டு மணிமேகலை- கார்த்திக் உட்படப் பலரும் வழங்கிய கலைநிகழ்ச்சிகள் சிறப்புற அமைந்தன.

இவ்விழாவைத் தொடர்ந்து, 'வீட்டுக்கொரு பாரதி' என்பதாக, கோட்டைக்கரை பாரதிபுரத்தில் வசிக்கும் மக்களின் ஒவ்வொரு வீட்டிற்கும் ஒரு பாரதியார் கவிதை நூல் வழங்கப்பெற்றது. வில்வநத்தம் கிராமத்தில், திருமதி சேஷம்மாள் வழங்க, பாரதிவனம் காணிநிலத்தில் உருவாக்கம் பெற்றது. குழந்தைகள் புத்தகத் திருவிழாக்காலத்தில் குழந்தைகள் வாசகர் வட்டம் தொடங்கப்பெற்றது. மாதந்தோறும் பாரதியை முன்னிறுத்தி நடைபெற்ற நிலா முற்றக்கூட்டங்களில் எழுத்தாளர்கள் ஜெயகாந்தன், நவபாரதி, சா.கந்தசாமி, பிரபஞ்சன், உ.ராஜாஜி, கவிஞர்கள் ரவிசுப்பிரமணியன், ஆகாசம்பட்டு சேஷாசலம் உள்ளிட்டோர் பங்கேற்றனர். தென்னாப்பிரிக்கப் படைப்பாளர்கள் நிர்மலா, ஜின், வாட்லாப்பா உள்ளிட்ட வெளிநாட்டினரும் பங்கேற்றனர். உள்ளூர் மற்றும் வெளியூர்களிலும், இலக்கிய நலக்காப்பக அமைப்புகளுக்குச் சென்று பாரதிவிழா கொண்டாடி மகிழ்ந்தது, தமிழ்மரபு மையம். மரக்காணம்





தொடங்கி திருமறைக்காடு (வேதாரண்யம்)வரை தொடர்ந்த இலக்கியச் சுற்றுலா மூன்று நாட்கள் நடத்தப்பெற்ற நாட்களில் வேதாரண்யம் சர்தார் வேதரத்னம் நிறுவிய பாரம்பரியச் சிறப்பு மிக்க கஸ்தூர்பா கன்யாகுருகுலத்தில் பாரதிவிழா நடத்தப்பெற்றது.

இவ்வாறு ஆண்டு முழுவதும் கொண்டாடிய பாரதிவிழாவின் 125-ஆவது பிறந்த ஆண்டு நிறைவுவிழா பின்வருமாறு அமைந்தது.

07.12.2007 வெள்ளி அன்று குழந்தைகளுக்கான பாரதிபயிலரங்கு நியூகிரியேஷன் பள்ளியிலும், 08. 12. 2007 சனிக்கிழமை அன்று இளைஞர் கட்கான பயிலரங்கு ஆரோபிருந்தாவனிலும், 2007 டிசம்பர் 9 அன்று பன்னாட்டுக் கருத்தரங்கு மற்றும் பாரதி-125 நிறைவுவிழா பாரத்நிவாஸ் பன்னாட்டு அரங்கிலும் நடைபெற்றன.

**குழந்தைகள் பாரதி**

07.12.2007 அன்று, சின்னஞ்சிறார்களுக்காக கவிதை, கட்டுரை, ஓவியம், நடனம், பாட்டு, நாடகம் முதலிய பயிற்சி வகுப்புகள் ஆரோவில் குயிலாப்பாளையம் நியூகிரியேஷன் பள்ளியில் நடைபெற்றது. பிஞ்சு உள்ளங்களுக்குள் ஒளிந்து கிடக்கும் கலையார்வத்தைத் தூண்டும் விதமாக அமைந்த இந்நிகழ்வில் மதிப்பிற்குரிய கவிஞர் சிற்பி பாலசுப்பிரமணியம் அவர்களும், பேராசிரியர் சேவாரத்னா திரு. ந.அர்த்தநாரி அவர்களும் சிறப்பு விருந்தினர்களாகக் கலந்து கொண்டனர். சக்தி திருமிகு சரஸ்வதி அக்காவின் பாட்டு எல்லாரையும் பாடவைத்து ஆடவும் வைத்துவிட்டது.

கவிஞர் சிற்பி அவர்கள், புதுவை ஸ்ரீஅரவிந்தர் ஆசிரமம, தியான அறைக்குள் இருந்த மௌனப்பொழுதில் தம் மனதில் எழுந்த உணர்வுகளைக் கவிதை வரிகளில் வடித்துத்தந்தார். அந்தப் பாடலுக்கு உடனடியாக சரஸ்வதிஅக்கா இராகம் அமைத்துப் பாடியதோடு குழந்தைகளையும் பாடச்செய்தார். அந்தப் பாடல்,



புருவ நடுவில் ஒரு சூர்யோதயம்
புலன்களில் அரவிந்த உயிரோவியம்
நிறையும் ஆனந்த ஞானோதயம்
நேற்றில்லை இன்றில்லை சாந்திமயம்
அறிவு துயில்கொள்ளும் சரணாலயம்
ஆழ்மனம் விழித்தெழும் விடிவாலயம்!

அரங்கமே அதிர்ந்து ஆடியது அருமை! மதியவிருந்து பள்ளி வளாகத்திலேயே பரிமாறப்பெற்றது. பயிற்சியில் குழந்தைகள் தங்கள் திறமைகளை வெளிப்படுத்தினர். புதுக்கோட்டை மாமன்னர் கல்லூரித் தமிழ்ப் பேராசிரியர் முனைவர் மு.பழனியப்பன், புதுவை பாரதிதாசன் அரசினர் மகளிர் கல்லூரித் தமிழ் விரிவுரையாளர்கள் இரா.குறிஞ்சி வேந்தன், சேதுபதி மற்றும் ஓவிய ஆசிரியர்கள் மாலதி, ஜானகி, இசையாசிரியர் சங்கராபரணன், ஆசிரியர் அருள்ஜோதி,



யாத்ரா சீனிவாசன், இளைஞர்கள் பள்ளி ஆனந்து ஆகியோர் நெறியாளர்களாகப் பங்கேற்றனர். சிறார்கள் பங்கேற்ற சுவையான பட்டிமண்டபமும் நிகழ்ந்தது. அத்தோடு, கவிதை வாசிப்பையும், பொம்மலாட்ட நிகழ்வையும் குழந்தைகள் நடத்திக் காட்டினர்.

விழாவின் முத்தாய்ப்பாக,குழந்தைகளின் கலை நிகழ்ச்சிகள் அரங்கேறின. பங்கேற்க வந்த குழந்தைகள் யாவரையும் பெயருக்கு முன்னர் "பாரதி" சேர்த்தே கூறவேண்டும் என மீனாட்சிஅக்கா வேண்டுகோள் விடுத்தார். அதனைத் தொடர்ந்து எல்லாக்குழந்தைகளும் தமது பெயருக்கு முன்னால் பாரதி பட்டத்தைச் சூட்டிக்கொண்டே முழங்கினர். அதில் ஒரு குழந்தை, தனது பெயரை, "பாரதிபரதன்" என உச்சக்குரலில் கூவியது எல்லாருடைய மனதையும் தொட்டது. நிகழ்ச்சியின் நிறைவாக குழந்தைகள் அனைவருக்கும் சான்றிதழை வழங்கிச் சிறப்புரையாற்றிய கவிஞர் திரு சிற்பி அவர்கள், 'கவிதையை எளிமையாக எழுதுவது எப்படி?' என்பது பற்றிக் கூறி எல்லாரையும் ஒரு நொடிப்பொழுதில் எழுத வைத்துவிட்டார். மேலும் அவர் பேசுகையில் 'குழந்தைகள் உயிர்ப்புடன் திகழ்கிற தலமாக ஆரோவில் திகழ்கிறது. தான் இதுபோன்ற ஒரு பள்ளியில் பயிலஇயலாமல் போய்விட்டதே என்ற வருத்தம் மேலிடுகிறது' என்று குறிப்பிட்டார். விழாவை நியூகிரியேஷன் பள்ளித் தலைமையாசிரியர் திரு சங்கர் அவர்களும், இதர ஆசிரியப்பெருமக்களும் சிறப்புற நடத்தித் தந்தனர்.

### இளைஞர்கள் பாரதி

விழாவின் 2ஆம் நாள் (08.12.2007) ஆரோபிருந்தாவனில் (பல்மைரா) நிகழ்ந்தது. ஆரோவில் இளைஞர்கள், புதுவைப்பல்கலைக் கழக மாணவர்கள், பல்மைராவைச் சேர்ந்த மகளிர் சுயமுன்னேற்றக் குழுவினர் ஆகியோர் இந்நிகழ்வில் கலந்துகொண்டனர். புலர்காலைப் பொழுதிலேயே, இவர்கள் பிருந்தாவன் வனத்திற்குள் கல்விஉலாச் சென்றனர். உலாவின்போது, இலக்கியத்தேனும் பரிமாறப் பெற்றது. உலாமுடிந்ததும் காலைச்சிற்றுண்டி. பிறகு, நிகழ்ச்சிகள் தொடங்கின. இந்நிகழ்வில் சிறப்பு விருந்தினர்களாக, கோவை வேளாண்கல்லூரிப் பேராசிரியர் டாக்டர் லட்சுமி நரசிம்மன், புதுவை தாகூர் கலைக்கல்லூரிப் பேராசிரியர் முனைவர் சிவமாதவன், ஆரோவில் ஆரண்யா சரவணன், வேளாங்கண்ணி ஆசிரியர் சிங்கமுத்து ஆகியோர் கலந்துகொண்டு வழிநடத்தினர். பேச்சு, கட்டுரை, ஓவியம், பாட்டு, சொற்பொழிவு முதலிய தலைப்புகளில் பயிற்சி வகுப்புகள் நடைபெற்றன. இதனோடு காஞ்சிபுரத்தைச்சேர்ந்த திருராஜா அவர்களின் நாணயக் கண்காட்சியும் நடைபெற்றது. உலக நாடுகளில் பலவற்றின் அரிய நாணயங்களைச் சேகரித்துக் காட்சிப்படுத்தியிருக்கும் அவர்தம் ஆர்வத்தை அனைவரும் பாராட்டினர். பல்மைராவில் வசிக்கும் சபீனா அவர்கள் 'கை யோக முத்திரை' குறித்து விரிவுரை நிகழ்த்தி இளைஞர்களுக்கு அதனைச் செய்தும் காட்டினார். மதிய உணவுமுடிந்தபின் பட்டிமண்டபம் நடைபெற்றது. பங்களிப்பு நிகழ்ச்சியில் இளைஞர்கள் மிகச்சிறப்பாகப் பங்கேற்றனர். மாலை நிகழ்வாக, ஆரோவில் திருமதி. சூரியகாந்தி குழுவினர் பக்க வாத்தியங்களுடன் (6 வயது முதல் 18 வயது வரை)12 குழந்தைகள் நடத்திய வீணைக்கச்சேரி சிறப்பாக இருந்தது. வழக்கம்போலவே,



சரஸ்வதி அக்கா தனது பாடல்களால் பாரதியை, அரங்கில் நிறைத்தார். விழாவின் நிறைவாக, கவிஞர் சிற்பியின் துணைவியார் திருமதி ரங்கநாயகி பாலசுப்பிரமணியம் அவர்கள் சான்றிதழ்கள் வழங்கினார். பல்மைராவைச் சேர்ந்த பேராசிரியர்கள் யோர்கன், மைக்கேல் கேய், ஜெர்மானியர் சபீனா, மைக்கேல், தனம் மற்றும் பல்மைராத் தொண்டர்கள் விழா இனிது நிகழ ஒத்துழைப்பு அளித்தனர்.

### அறிஞர்கள் பாரதி

ஞானபீடம் திரு. ஜெயகாந்தன் அவர்கள் தலைமையிலும், அவர்தம் வழிகாட்டுதலின் பேரிலும் அவரால் தொடங்கிவைக்கப்பெற்ற பாரதி-125விழாவின் நோக்கமான 'தமிழின் ஒருலகக் கருத்துணர்வு' எனும் தலைப்பிலான பன்னாட்டுக் கருத்தரங்கம் பாரத்நிவாஸ், சாச்சு அரங்கில், 09.12.2007 அன்று நிகழ்ந்தது. வாழைமரங்கள் கட்டி வரவேற்பு நல்கி, கருத்தரங்கின் பொருளுணர்விற்காக, 30X20 அடி உயரமுள்ள மிகப்பெரிய படம் ஒன்று செய்யப்பெற்றிருந்தது. இதற்கு முன்னரே, வடவேங்கடம் முதல் தென்குமரி வரையுள்ள தமிழ்கூறும் நல்லுலகத்து ஆன்றோர்கள் இத்தலைப்பில் கட்டுரைகளை அனுப்பி வைத்திருந்தனர். இவர்கள் அனைவரும் இவ்விழாவிற்கு அழைக்கப்பெற்றிருந்தனர். இவர்களில் பலபேர் ஆரோவில்லை அறிந்திராதவர்கள். ஆகையினால், ஆரோவில்லைக் குறித்த தகவல்கள் அடங்கிய ஸ்ரீஅன்னையின் குறிப்புரை, விழா அழைப்பிதழுடன் இவர்களுக்கு அனுப்பி வைக்கப்பட்டது. மேலும், போக்குவரத்து வசதிக்காக புதுவை ரோமன்ரோலண்ட் நூலகம் அருகிலுள்ள பாரதி சிலையிலிருந்து யோகா டிராவல்ஸ் பேருந்து கட்டுரையாளர்களை ஆரோவில்லிற்கு அழைத்து வருவதற்காக அதிகாலையிலேயே காத்திருந்தது. அப்பேருந்தில் வந்த கட்டுரையாளர்களுக்குக் காலைச் சிற்றுண்டி வழங்கப்பட்டது. முறையாக விழா காலை 9 மணிக்குத் தொடங்கியது. விழாவானது மூன்று நிகழ்வுகளாக முற்பகல் பன்னாட்டுக் கருத்தரங்கம், பிற்பகலில் குழு அமர்வு, மாலையில் பாரதி-125 நிறைவுவிழா எனப் பகுக்கப்பட்டிருந்தது.

### பன்னாட்டுக் கருத்தரங்கம்

நிறைவாக, பன்னாட்டறிஞர்கள் பங்கேற்ற கருத்தரங்கின் தொடக்கத்தில், திருக்குறளிசை சங்கராபரணன் குழுவினரால் இசைக்கப்பெற்றது. இலங்கை கிருபாபரணன் குழுவினரின் வயலின் இசை பின்னணியாக, ஆரோவில் அருள்வழிக் குழந்தைகளின் யோகாசனக் காட்சிகள் நடைபெற்றன.



ஸ்ரீஅரவிந்த அன்னை வகுத்தளித்த நான்கு மொழிக்கொள்கையின் அடிப்படையில் 'யாதும் ஊரே யாவரும் கேளிர்' எனும் கணியன் பூங்குன்றனாரின் பாடலைத் தமிழில் அமெரிக்காவைச் சார்ந்த கிருஷ்ணா மெகன்ஸி அவர்களும், பிரெஞ்சில் செவாலியே மதனகல்யாணி அவர்களும், ஆங்கிலத்தில் இளைஞர்கள் பள்ளி மாணவி கஸ்தூரி மற்றும் சமஸ்கிருதத்தில் ருஷ்யப் பேராசிரியர் விளாடிமிர் ஆகியோரும் வாசித்தளித்தனர்.

தமிழ்மரபுமைய நிர்வாகியும், மூத்த ஆரோவிலியருமான திருவரதராஜன்



வரவேற்புரை ஆற்றினார். தில்லை கணபதி முன்னிலை வகித்தார். கருத்தரங்க ஒருங்கிணைப்பாளர் கவிஞர் இரா. மீனாட்சி, கருத்தரங்கத்தின் நோக்கத்தை விவரித்தார். காலைஅமர்வுகவிஞர்சிற்பிபாலசுப்பிரமணியம் அவர்களின் தலைமையில் தொடங்கியது. **'ஒருலக உணர்வுடைய வருங்காலத்திற்கு'** எனும் பொதுத் தலைப்பில், யோகி ஓம் பவதாரிணி அம்மையார், **'ஆன்மிகத் தமிழ்'** என்னும் தலைப்பில் உரையாற்றினார். டாக்டர் எம்.எஸ். உதயமூர்த்தி **'சமூகஅறிவியல் தமிழ்'** என்னும் தலைப்பில் உரையாற்றினார். அவர், தம்முடைய இனிய உரையாடலால் அனைவரையும் சிந்திக்க வைத்தார். தலைமை உரையோடு **'கலை, இலக்கியம், தத்துவத் தமிழ்'** எனும் தலைப்பில் கவிஞர் சிற்பி பாலசுப்பிரமணியம் அவர்கள் தாமே பாரதியாக ஆவேசம் கொண்டு தம் ஆழ்மனத்திலிருந்து பேசினார்.

இவ்வாறாக, முற்பகல் நிகழ்வுகள் நிறைவு பெற்றவுடன் மதிய விருந்து அனைவருக்கும் இனிய முறையில் தகுந்த உபசரிப்புடன் வழங்கப்பட்டது. இதற்கு ஆரோவில் தமிழ்மரபு மையத் தன்னார்வத் தொண்டர்கள் பலர் கலந்துகொண்டு உதவினர். உணவு இடைவேளைக்குப் பின்னர் **'ஒருலக உணர்வுடைய வருங்காலத்திற்கு'** தமிழ் தரும் செய்தி பற்றி நான்கு அணியினராகப் பேராளர்கள் கருத்தளித்தனர்.

**'கலை இலக்கியத்தின் கொடை'** எனும் தலைப்பில் புதுவைப் பல்கலைக் கழகத் தமிழியற்புலத் தலைவர் முனைவர் அ.அறிவுநம்பி அவர்கள் தலைமையில் குழுவினர் கருத்தளித்தனர். **'இயற்கையோடிணைந்த வாழ்வு'** என்னும் தலைப்பில் பேராசிரியர் ம.லெ.தங்கப்பா அவர்கள் தலைமையிலும், **'தமிழின் அறிவியல் ஆன்மிகம்'** என்னும் தலைப்பில் மயிலம் தமிழ்க்கல்லூரிப் பேராசிரியர் முனைவர் க.விநாயகம் அவர்கள் தலைமையிலும், **'தமிழின் அறிவியல் தொழில் நுட்பம்'** என்னும் தலைப்பில், புதுவை மொழியியல் பண்பாட்டு நிறுவனப் பேராசிரியர் முனைவர் இரா. சம்பத் அவர்கள் தலைமையிலும் கருத்துகள் அளித்தனர்.

தவத்திரு குன்றக்குடி பொன்னம்பல அடிகளார் அவர்களோடு, அன்னை ஓம் பவதாரிணி அம்மா, திரு ரவிவேதரத்னம் அவர்கள், எம்.எஸ்.உதயமூர்த்தி ஐயா, கவிஞர் சிற்பி பாலசுப்பிரமணியம், அவர்தம் துணைவியார் ஆகியோர் கொண்ட திருக்கூட்டத்தை ந.அர்த்தநாரி, ஜி.வரதராஜன் முதலியோர் வழிகாட்டி மாத்ரிமந்திர் தரிசனத்திற்கு அழைத்துச் சென்றனர். இவர்களுடன் ஆரோவில் தனபால், சிவா, கோதண்டராமன் ஆகியோர் உடனிருந்தனர். தியானம் முடித்து கசிந்த கண்களுடன் நேரடியாக மேடைக்கு வந்தார் அடிகளார். நூல்வெளியீட்டுவிழா தொடங்கியது. கவிஞர் இரா.மீனாட்சி மற்றும் பேராசிரியர் முனைவர் சேதுபதி ஆகியோர் இணைந்து எழுதிய அரவிந்தர் போற்றிய அருந்தமிழ்ச் சான்றோர், சேதுபதியின் சொற்பொழிவாளர் பாரதியார் ஆகிய இருநூல்கள் வெளியிடப் பட்டன. இவற்றைப் புதுவை கபிலன் பதிப்பகம் வெளியிட்டுள்ளது.



உரையரங்கம் துவங்கிற்று. ஆரோவில் லூஜியும், பிரிகெட்டும் வரவேற்புரை நிகழ்த்தினர். சிற்பி மறுபடியும் பாரதியானார். ஆரோவில் மக்கள் மெய்மறந்து இரசித்தனர். தவத்திரு அடிகளார் பேச்சு எல்லாவற்றுக்கும் நடுநாயகமாக அமைந்தது. கருணை மழை பொழிந்து தென்றல் வீசியது. 'பாரத்நிவாஸில் நிகழ்ந்த தமிழ்மரபு சார்ந்த உலகமக்கள் பங்கு கொண்ட கருத்தரங்கம் ஸ்ரீஅரவிந்தர் பாரதி

வருங்காலத் தமிழ் இயக்கங்களுக்கு முன்னோடிகளாக அமைந்து விட்டனர் என்ற முத்திரை பதித்துள்ளது' என்று குறிப்பிட்டுக் கூறினார். கதைசொல்லி விளங்க வைத்து, சிந்திக்க வைக்கும் உரையாக இனித்தது அவர்தம் தமிழ்.



பேராளர்களுக்குச்சான்றிதழ்கள் வழங்கப்பட்டதும் பாரதிக்கு ஞானதீபம் ஏற்றும் நிகழ்வு தொடங்கியது. ஆன்றோர் முதல் குழந்தைகள் வரைக்கும் தொண்டர் குழாம் முன்செல்ல பாரதிசெல்லம்மாளைத் தொழுது ஞானதீபத்தை ஏற்றிப் போற்றினர். மாலை நிகழ்வின் நிறைவாக ஸ்வரம் இளைஞர்களின் இன்னியம் அருமையான சூழலை உருவாக்கி அமைதியுடன் விடைபெற வழி வகுத்தது.



எல்லாருக்குள்ளும் நீக்கமற நிறைந்திருந்த அந்த மூன்று நாள்நிகழ்வுகளும், குறிப்பாக மூன்றாவது நாள் நிகழ்வும் யாவர் நெஞ்சிலும் மறக்க இயலாத மாற்றத்தைத் தந்து விட்டது என்பதை அவரவர்கள் ஊர்சென்று சேர்த்த பின்னர் தாங்கள் வந்து திரும்பிய சேதியையும், நன்றியையும் தெரிவித்துப் பேசிய அவர்கள் பேச்சில் கலந்திருந்த பரவசம் காட்டியது. தொண்டர்கள் காட்டிய பரிவு, ஆரோவில் குழந்தைகளின் அன்பு மழலை, இயற்கையான சூழல், எங்கும் காணும் மனிதநேயம் இவையாவும் அவர்களுக்கு மீண்டும் ஆரோவில் வரும் ஆர்வத்தைத் தந்தது என்பது உண்மை.



இவ்வினிய நிகழ்வுகளை சீனிவாசன் (யாத்ரா), தம்பிதுரை (ஆவணக்காப்பகம்), குணசீலன் (இளைஞர்கள் கல்வி மையம்) ஆகியோர் காட்சிப் பதிவாக்கினர்.

இவ்விழாவைக் கனவிலிருந்து நிகழ்வுவரை நிகழ்த்திக் காட்டிய கவிஞர் இரா.மீனாட்சி அக்கா அவர்களுக்கு ஆரோவில் நண்பர்களும், விழாத் தொண்டர்களும்,நன்றியும்பாராட்டும்தெரிவித்தனர். உணவிலிருந்து உணர்வு மணமிக்க உறுதுணை புரிந்த அத்துணை ஆரோவில் பெருமக்களும் தமிழ் மரபு மையமும் தனது நன்றிகளைப் பெருமையோடு தெரிவித்துக் கொண்டது.

உலகத் தமிழுக்கு ஒரு புது வரவாகவும், ஆரோவில் மொழித்துறையில் எடுத்துள்ள முதல் முயற்சியாகவும் இக்கருத்தரங்கம் அமைந்ததாக அறிஞர்கள் வாழ்த்துத் தெரிவித்தனர். தமிழகச் சான்றோர்கள் பேரறிஞர்கள், ஆய்வு மாணவர்கள் இவர்களுடன் வாழ்வில் பல நிலைகளில் இயங்குகிற பொதுமக்கள் கவிஞர்கள், கலைஞர்கள் இக்கருத்தரங்கினில் கலந்து கொண்டு தங்களுடைய உலகம் தழுவிய அன்புப் பார்வையைப் பதிவு செய்திருக்கிறார்கள். இதை ஒரு பன்னாட்டுக் கருத்தரங்கமாக்கிய சான்றோர் பெருமக்கள் குறிப்பாக, ஆரோவில் நண்பர்கள், விளாதிமீர், (ரஷ்யா) கிருஷ்ணா, (அமெரிக்கா) பௌலெட், (இத்தாலி) பிரிகித், (பிரான்ஸ்) லூயிஜி, (இத்தாலி) மைக்கேல், (ஜெர்மனி) பால்வின்சென்ட், (பிரான்ஸ்) செலஸ்டீன், (இலங்கை) ஆகியோர் குறிப்பிடத்தக்கவராவர்.

**வாழ்க பாரதி! வளர்க பாரதி புகழ்!**

# பாரதி - 125 விழா, சில காட்சிகள்



















காதொளிரும் குண்டலமும் கைக்குவளை யாபதியும் கருணை மார்பின்
மீதொளிர்சிந் தாமணியும் மெல்லிடையில் மேகலையும் சிலம்பார் இன்பப்
போதொளிரும் திருவடியும் பொன்முடிசூ ளாமணியும் பொலியச் சூடி
நீதியொளிர் செங்கோலாய்த் திருக்குறளைத் தாங்குதமிழ் நீடுவாழ்க!

– கவியோகி சுத்தானந்தபாரதியார்

எல்லாரும் அமரநிலை எய்தும்நன் முறையை
இந்தியா உலகிற் களிக்கும் - ஆம்
இந்தியா உலகிற் களிக்கும் - ஆம் ஆம்
இந்தியா உலகிற் களிக்கும் - வாழ்க!

அன்போடு
அழைக்கிறது
ஆரோவில்

பாரதி - 125
நிறைவு விழா

பன்னாட்டுக் கருத்தரங்கம்
தமிழின் ஒருமைக் கருத்துணர்வு

காலை 9.30 மணி முதல்
12.30வரை

1.30 மணி முதல் 4.00 மணிவரை

நிறைவு விழா

மாலை 4.00 முதல் 6.30 மணிவரை

அனைவரும் கலந்து கொள்ள
அன்புடன் அழைக்கிறோம்.

WE ARE THE FUTURE'S
GREATNESS

Greetings from Auroville
to all men of goodwill.
Are invited to Auroville
all those who thirst
for progress and aspire
to a higher and truer life.

- THE MOTHER

ORGANISERS

# INTERNATIONAL SEMINAR
# ON
# ONE WORLD CONCEPT IN TAMIL
# 09-12-2007



நான் நினைக்கின்ற பல நல்லவைகள்
தனது நடைமுறையில் நிறைவேற்றிக்
கொண்டிருக்கும் சகோதரர் கி. [illegible]
அவர்களின் பணிகள் சிறந்தோங்க
நாம் அனைவரும் கூடப் பணிபுரிந்து
ஒத்துழைப்போமாக! நல்வாழ்த்துகள்.

14.10.2007 அன்பன்
சென்னை. த. ஜெயகாந்தன்

# பாரதியார் கண்ட கனவுகள்
# நமது காலத்தில் பலிக்கின்றன!

ஒரு கனவு பூமியில் இருப்பது போல் நான் உணருகிறேன். நமது தேசமே ஒரு கனவு பூமிதான். இந்தத் தேசத்தைக் குறித்துப் பலரும் கனவு கண்டிருக்கிறார்கள். ஆனால் என்னுடைய தாயும் தந்தையும் பிறந்து மடிந்த தேசமிது என்று ஒவ்வொருவரும் உணர்வதாக நமக்கு உணர்த்தியவர் மகாகவி பாரதி. தேசமென்றால் என்ன, மண்ணா? 'தேசமென்றால் மண்ணுகாது மனுஷாளு' என்று தெலுங்கிலே ஒரு கவிதை உண்டு. மனிதர்கள் எதனால் மனிதர்கள்? அவர்கள் கனவு காண்கிறார்கள். அந்தக் கனவு நம் காலத்தில் பலிக்கிறது. கனவு கண்டவர்கள் அவர்கள்; அதன் பயனை அனுபவிப்பவர்கள் நாம். அந்த நன்றியுணர்வு அல்லாமல் வேறு எது நம்மைக் கூட்டியிருக்கிறது? எல்லாரும் அன்னையர்களாகத் தோன்றுகிறபோது நான் எந்த அன்னையை வணங்குவேன்? அனைவருக்கும் இந்தப் பூமியே தாய். ஈன்று புரந்து நம்மை வாழ்விக்கிறது.

இந்தத் தாயை அவர்கள் எப்படி உணர்ந்தார்கள்? அவர்கள் காலத்தில் அந்தத் தாயின் நிலை என்ன? ஆயிரம் ஆயிரம் ஓவியர்கள், பாரதத் தாயைப் படமாக வரைந்தார்கள். எலும்பும் தோலுமாக சதை சுற்றிலும் வத்தலும் தொத்தலுமாக்க் குழந்தைகள், பஞ்சத்தில் அடிபட்ட ஒரு தாய் மாதிரி அதைப் பார்த்ததும் பாரதியார் வெகுண்டெழுந்தார். 'இதுவா பாரததேவி, இல்லை, இல்லை. அவள் சிங்கத்தின்மீது ஆரோகணித்திருப்பாள். கையில் திரிசூலம் ஏந்தியிருப்பாள். வெள்ளைக்காரர்கள் வந்ததால் கங்கையும் இமயமும் எங்கே போயிற்று? அவளை அலங்கார பூஷிதையாக அதே மாதிரி பராசக்தியாக என் முன் வரைந்து காட்டு' என்று கட்டளையிட்டார் அந்தக் கவிஞர்.

இந்த தேசத்தில் தெய்வங்களுக்கா குறைச்சல்? எங்கு திரும்பினாலும் தெய்வம். அதற்குமேல் எல்லாவற்றிலும் தெய்வத்தைப் பார்க்கிற திருவுள்ளம் படைத்த மக்கள். எல்லாவற்றிலும்! இருக்கிற தெய்வம் போதாதென்று ஒரு புதிய தெய்வத்தை உருவாக்கினார் பாரதியார். அந்தத் தெய்வத்திற்குப் பெயர் சுதந்திரதேவி. அது ஒரு புதிய தெய்வம். பாரதியாரால் உண்டாக்கப்பட்ட தெய்வம். எந்த நிலையிலும் அவளை நாங்கள் தொழ மறக்க மாட்டோம். 'இதம் தரும் மனை' நமக்கு மனையே இதுதான். - எது இதம் தருகிறதோ அதுவே, நமது இருப்பிடம். அப்படிப் பார்த்தால் இது ஒரு தாய்வீடு மாதிரி இருக்கிறது. புதிதாக வந்தது மாதிரி எனக்கு இல்லை. இங்கேயிருந்து போய்விட்டு வந்தமாதிரி இருக்கிறது. ஏனென்றால் அவ்வளவு இதம் தருகிறது. இதை நீங்குவது என்றால் அதுவே எவ்வளவு இன்னல் தரும்?

இதந்தரு மனையின் நீங்கி
இடர்மிகு சிறைப் பட்டாலும்
பதம்திரு இரண்டும் மாறிப்
பழிமிகுந்து இழிவுற்றாலும்
விதந்தரும் கோடிஇன்னல்
விளைந்து என்னை அழித்திட்டாலும்
சுதந்திரதேவி நின்னைத்
தொழுதிடல் மறக்கி லேனே!

அந்தச் சுதந்திரதேவியின் புத்திரர்கள் நீங்கள்.

ஒரு ருஷ்ய எழுத்தாளன் சொன்னான், 'நாங்கள் எல்லாம் டால்ஸ்டாயின் ஓவர்கோட்டிலிருந்து வந்தோம்' என்று சொன்னான். அது மாதிரி நாங்கள் சொல்ல வேண்டும் என்றால், பாரதியார் கட்டிய தலைப்பாகையை அவிழ்த்து உதறினார்



ஞானபீடம்
**ஜெயகாந்தன்**

பாருங்கள், அதிலேயிருந்து வந்தவர்கள் நாங்கள். இதைச் சிலபேர் உணர்வார்கள். சிலபேர் உணர மறுப்பார்கள். அதை, உணர்வதும் உணர மறுப்பதும் மனிதர்களின் போக்கு. இரண்டையும் வரவேற்கின்ற உள்ளம் நமது உள்ளம். 'எந்தரோ மகானுபாவலு' - யார் யாரெல்லாம் வணங்கத்தக்கவர்களோ, அவர்களுக்கெல்லாம் வணக்கம். எப்படி வணக்கத்தைச் சொல்லிக் கொடுக்கிறார்கள், பாருங்கள். ஆகவே, ஒவ்வொரு குழந்தைகளையும் நான் பாரதியாராகவே பார்க்கிறேன். ஒரு நிலைக்குப்போய்விட்டால், ஆண், பெண், மொழி, தேசம், இவைகளெல்லாம் அற்று எல்லோரையும் ஒன்றாகச் சங்கமிக்க வைக்கிற, வீடோ, காடோ, பொந்தோ, புதரோ அதுதான் அன்னையின் இல்லம், அல்லவா? அந்த அன்னைக்குத்தான் எத்தனை வடிவங்கள்?

நான் என்னை ஒரு காலத்தில் நாத்திகன் என்று நினைத்துக்கொண்டிருந்தேன். ஏனென்றால், நமக்கு முதலில் தெரிந்தது கடவுள்தானே. அதனை, ஏதேதோ காரணங்களால், மறுக்கவும், மறக்கவும் முயன்றது உண்டு. எல்லாம் பழையதாக இருந்தது. வேதம் புதுமை செய் என்று கட்டளையிட்டு, அதைப் புதுமை செய்து காட்டியவர் பாரதியார். கடவுளை எப்படியெல்லாம் காட்டியிருக்கிறார். இரும்பைக் காய்ச்சி உருக்குகின்ற தெய்வம்; எந்திரங்களை வகுக்கின்ற தெய்வம்; கரும்பைச்சாறு பிழிந்திடும் தெய்வம்; கடலில் மூழ்கிநன் முத்தெடுக்கிற தெய்வம்; எண்ணெய், பால்நெய் கொணர்ந்திடு தெய்வம்; தெய்வங்கள் இவர்கள்தாம் என்று வேதம் புதுமை செய்து, கடவுளைக் கண்ணெதிரே காட்டி- இல்லை, கண்ணெதிரே உள்ளவர்களையெல்லாம் கடவுளாகக் காட்டி- அதுதானே புதுமை- இப்படியாகக் கடவுளைக் கற்பித்தார் அவர். நம்பினால் நம்பு. நம்பாவிட்டால் போ. பாடம் படிக்கவேண்டாமா? நம்புவதும் நம்பாததும் அவரவரது சூழலைப் பொறுத்தது. கவிஞர் கண்ணதாசன் ஒருமுறை சொன்னார், நான் என்ன செய்வேன்? நான் நாத்திகனாயிருக்கவேண்டும் என்பது ஆண்டவனின் திருவுள்ளம் போலும். அதிலே எவ்வளவு பொருள் பொதிந்து இருக்கிறது பாருங்கள்.

'பாரதியார் அதைக்கொடு, இதைக்கொடு" என்று கேட்கிறார். எதற்கு? அவர் விளக்கம் சொல்லிவிடுகிறார். 'மாநிலம் பயனுற வாழ்வதற்கு'. பாட்டும் செய்யுளும், கோப்பது எதற்கு? இல்லாததைக் காட்டுவதற்கு அல்ல, 'காட்டும் வையப்பொருள்களில் உண்மை கண்டு சாத்திரம் தேர்வதற்கு'. கேட்டதன்றி கேளாமையிலே விழியெதிர் காணும் தெய்வமாக விளங்குபவர்கள் மனிதர்கள். உங்களையெல்லாம் காண்கிறபோது தெய்வதரிசனம் கிடைக்கிறது. மனிதர்கள் அல்லாமல் வேறு யார் தெய்வம்? காணிநிலம் பராசக்தியிடம் கேட்டார் பாரதியார். நாம் கேளாமலேயே கிடைக்கிறது, பாருங்கள். இந்தக் காட்டுவழியில் நின்று நம்மைக் காப்பவர் யார்? ஆகவே, கடவுளைக் கண்டுகொள்வது இந்த மண்ணில் பிறந்தவர்களுக்கு ரொம்பச் சுலபம். இவையெல்லாம் விட்டுவிட்டு எனக்கெங்கே வருவது? தாயைத் தொழாதவர்களுக்கு மற்ற தாயரை எப்படித் தெரியும்? தாயையே தொழுதுகொண்டிருக்க முடியுமா? உறவுகளிலேயே இருக்கிற விசித்திரம் என்ன? ஒன்று நான் உங்களைப் பிரிவது, அல்லது நீங்கள் என்னைப் பிரிவது. பிரிவு எங்கே நிகழ்கிறது? இந்த நாடகமேடையில் நடக்கிறது. நடித்துவிட்டுப்போகிறவர்கள் போய்விடுகிறார்கள். அதுமாதிரி எஞ்ஞான்றும் எப்போதும் இணையாய் இணைந்து பிரியாமல் இருப்பவர்கள் நாம். அதனால்அல்லவோ, என்னில் குடி கொண்ட பாரதிக்கு எவ்வளவு மதிப்பிருக்கிறது?

கடவுளை நம்பாதவனுக்கு அன்பு கடவுள்; அறிவு கடவுள். தொழத்தெரியாவிட்டால், கற்று என்ன பயன் என்று கேட்கிறது, தமிழ்ப்பாடல். எதை என்று நீங்கள் தீர்மானம் செய்து கொள்ளுங்கள். 'கற்றதனால் ஆய பயன்என்கொல்? தொழாஅர்எனின்' என்று தமிழ் பயிலும்தோறும் அதிலும் பாரதியிடம் வருகிறபோது, நமக்குத் தெய்வதரிசனம் கிடைக்கிறது. அதுமாதிரி, நம் தேசத்தில் கற்றவர்கள் எல்லாம் காணாதவர்களாக இருக்கிறபொழுது, பாமரர்களிடம் போய்க் கடவுளைத் தேடுகிறார். அவர், சேவகனை, மனைவியை, காதலியை, வேலைக்காரனை, எல்லாரையும் கண்ணன் என்று சொன்னார். நான் இப்படிப் புரிந்து கொண்டேன். 'வேலைக்காரன், தாய், தந்தை, எல்லாரிலும் கண்ணனைக் காண்க.'

வித்தை நன்கு கல்லாதவன். என்னுளே வேதநுட்பம் விளங்கிடச் செய்தனை இதை எனக்காகவே சொன்னாரோ? அவர் முற்றிலும் கற்ற பண்டிதர். கண்ணனைப்பற்றி என்னென்ன சொல்கிறாரோ, அதெல்லாம் பெரும்பகுதி அவர். அவர்க்கு எல்லாக் கலையும், எல்லாத்தொழிலும் தெரியும். ஆனால் நமக்குச் சொல்லித்தருகிறார்.

திண்ணை வாயில் பெருக்க வந்தேன் - எனைத்
தேசம் போற்றத்தன் மந்திரி ஆக்கினாய்.

மந்திரி ஆனவர்களுக்கெல்லாம் இந்த ஞாபகம் இருக்க வேண்டும். இதை மறத்தல் ஆகாது. அடிக்கோடிட்டுச் சொல்கிறார் விவேகானந்தர். அதை மறந்துவிடல் ஆகாது. மறப்பதற்கா படிக்கிறோம்? தகுந்த நேரத்தில் வந்து வந்து பக்கத்தில் வந்துநிற்கிறது எதுவோ, அதற்குப் பெயர் குரு வாக்கு. அப்படி நம்முடைய வளர்ச்சி, தாகம்- ஒரு சினிமாப்பாடல்- சினிமாப்பாடலிலும் கவிதைகள் உண்டு- தண்ணீரில் மூழ்கிக்கொண்டே தாகம் என்கிறாய்- அது மாதிரி இருக்கிறது இன்று நம்முடைய நிலைமை. தண்ணீர் இல்லாத காலத்தில் ஒரு தாகம் இருந்தது. அது என்ன? 'என்று தணியும் எங்கள் சுதந்திர தாகம்?' கனவு - அது கைகூடுகிற பொழுது, அது பலிக்கிறபொழுது, என்னென்ன விபரீதங்கள் நேர்கிறது. கனவு கனவாகவே இருந்திருக்கக்கூடாதா என்ற கவலைகூட வருகிறது. அது கைகூடுகிறபொழுது அதற்கு அவ்வளவு பிரச்சினைகள். கற்பனை பண்ண முடியாத விபரீதங்கள். அவர் என்னென்னவோ பண்ணினார். அந்தக் காலத்துத் துன்பத்தையே சொன்னார். ஆனந்த சுதந்திரம் அடைந்துவிட்டோம் என்று சொன்னார். அது திர்க்க தரிசனம் என்பதற்கு அடையாளம் சொல்கிறேன். அப்போது சுதந்திரம் எல்லாம் வரவில்லை. அவர் இறந்துபோனதே 1921இல். அதற்குமுன்னாலே அவர் பாடுகிறார்- 'ஆனந்த சுதந்திரம் அடைந்துவிட்டோம் என்று ஆடு' அவர் ஆடுவதோடு மற்றவர்களையும் ஆடச் சென்னார். அந்தக் காலத்தில் ஆடினால் பைத்தியம் என்று பெயர். அதனால்தான் அவருக்கு அந்தப் பெயர் வந்தது. பித்தம். என்ன பித்தம், மானுடப்பித்தம், தமிழ்ப்பித்தம், விடுதலைப்பித்தம்.

முதல் வரி என்ன தெரியுமா? ரொம்பப் பிடித்தது-

பார்ப்பானை ஐயரென்ற காலமும் போச்சே

சுதந்திரம் என்றால் முதலில் அவனுக்காகவே கொடு.

பாரதியாரைத் தவிர, பாரதியாரோடு பழகியவர்களையெல்லாம் பார்த்துப் பழகுகிற பாக்கியம் எனக்குக் கிடைத்திருக்கிறது. அதிலே தலையாயவர் பாரதிதாசன். அவர் ஐயர் என்றுதான் சொன்னார். பாரதியாரைக் குறிப்பிடும்போதெல்லாம் 'ஐயர்' என்றுதான் சொல்லுவார். நான் கேட்டேன். சும்மாயிருக்க மாட்டேன். ஐயரே சொல்லியிருக்கிறார், 'பார்ப்பாரை ஐயர் என்ற காலமும் போச்சே' என்று.அவர் ஒன்றும் பார்ப்பார் அல்லர். ஐயர் என்றால் பெரியவர், தலைவர் என்று அவர் காலத்திலேயே சொன்னார். என்னவோ, அவர் காலத்தில் ரொம்பக் கஷ்டப்பட்டார் என்று சொன்னால் நம்பாதீர்கள். கவிச்சக்கரவர்த்தி அவர். புவியால் அல்ல, கவியால் சக்கரவர்த்தி ஆனவர். சொல்லேர் உழவர். அவர் எதற்கோ பயந்துகொண்டு வந்ததாகத் தப்பாகச் சொல்லுவார்கள். அவரவர் நிலைமையில் இருந்து பார்த்தால் அப்படித்தான் தோணும். பயந்தவர்களுக்கு யாரைப் பார்த்தாலும் பயந்தவர்கள் மாதிரிதான் தெரியும்.

அவருக்குப் பிடிக்காத விஷயங்களில் ஒன்று, பயம். 'பயமெனும் பேய்'. இவன் பேயென்றால் பயப்படுகிறான். அவர் பயமே ஒரு பேய் என்கிறார்.



பயமெனும் பேய்தனை அடித்தே - பொய்ம்மைப்
பாம்பைப் பிளந்துயிரைக் குடிப்போம்

என்கிறார். பொய்ம்மைப் பாம்பு என்றால் நம்மிடம் இருக்கலாமா, அது? அதைப் பிளந்து உயிரைக் குடிப்போம். ஆகவே, பொய்யின் மீதும்-

பொய்யெது, மெய்யெது என்று ஆராய்ச்சி பண்ணிக்கொண்டிருந்தால், பொய்யே மெய்யாய்த் தெரியும், மெய்யே பொய்யாய்த் தெரியும். மெய்யென்று இந்த உடம்புக்குப் பெயர். இதைவிடப் பொய் உண்டோ?

தேகம் பொய் என்று உணர் தீரரை என் செய்வாய் மாயையே-

அவர் எல்லாவற்றையும் கேள்வி கேட்கிறார். மிரட்டுகிறார்.விதியை - மாயையை,

என்னைக் கெடுக்க எண்ணம் கொண்டாய் கெட்ட மாயையே-நான்
உன்னைக் கெடுப்பது உறுதி

'மாயையைக் கெடுப்பேன்' என்கிறார். 'கிருதயுகம் கொணர்வேன்' என்கிறார். இதெல்லாம் அல்லவா தெய்வச் செயல்கள். ஆகவே, எல்லாரையும் அன்னையாகப் பார்க்கிற நமக்கு இவ்வாறெல்லாம் சேர்த்து, இந்தக் காலத்தில் நமக்கு ஒரு அன்னையாக இருப்பவர், நமக்குத் தரிசிக்க வாய்ப்புக் கிடைத்ததே, நான் அரவிந்த அன்னையைப் பார்த்திருக்கிறேன். அந்தக் காலத்திலேதான் தெரிகிறதே, நான் ஒரு நாஸ்திகனாக இருந்திருக்கிறேன் என்று நினைத்துக்கொண்டிருக்கிறேன்.

ஆகவேதான், எல்லாவற்றிற்கும் ஒரு நேரம் வரும். எங்கே போய்விடுகிறது. இந்தப் பூமியே நம்முடையது. இந்த மண்ணையே பூமியாக வணங்குபவர்களுக்கு அப்புறம் மனம் என்று ஒரு கோயில் வேண்டியிருக்கிறது. மண், போத மாட்டேன் என்கிறது. 'பொன்னால் உனக்கொரு கோயில் புனைவேனே' - என்கிறார் பாரதியார், மனதுக்கு. மனத்தில் நிறுத்திக்கொள்வதற்குத்தான் - இந்த மனத்திலே குடியேறுவதற்குத்தான், கவிதையாகவும், இசையாகவும், கலையாகவும், தமிழாகவும் - எனக்கு எப்படிப் பரிச்சயம் என்று சொல்லவேண்டுமல்லவா?

தாலாட்டுப் பாடுகிறபோது எங்கள் அம்மா பாடி நான் கேட்டிருக்கிறேன், பாரதியார் பாடல். எங்கள் வீட்டில் பழக்கம் அதுதான். இன்றைக்கும் எங்கள் வீட்டில் குழந்தை விழித்துக்கொண்டால், 'எந்தையும் தாயும்' பாடுவோம். ஆகவே, பாரதியார் நமது குலதெய்வம் மாதிரி. நாம் எந்தக் குலத்தில் இருந்தவர்களானாலும் சரி, நமக்கெல்லாம் குலதெய்வம், பாரதியார். காலில் நகம் முளைத்த நாளாய் எனக்குப் பாரதியாரைத் தெரியும். யாராவது பார்த்திருக்கிறீர்களா, இந்த அளவிற்குக் குழந்தைகளோடு நெருங்கி?

'வன்னப்பறவைகளைக் கண்டு மனத்தில் மகிழ்ச்சி கொள்!' மாடு என்றால் என்ன? நாய் என்றால் என்ன? குருவி என்றால் என்ன? என்றெல்லாம் சொல்லிக் கொடுத்துவிட்டு, மெல்ல வருகிறார்-

வடக்கே இமயமலை - பாடத்துக்கு வந்துவிட்டாரா? ஏனென்றால், இமயமலையின் அடிவாரத்தில் வாழ்ந்தவர்கள்கூட, அந்த மலையின்மீது நாம் கொண்டாடுகிற உரிமையும் சொந்தமும் கொண்டாடியதாக வரலாறு இல்லை. மன்னும் இமயமலை எங்கள் மலை - இது உணரவேண்டிய உண்மை. மன்னு இமயமலை, எங்கள் மலை - ஏன் தெரியுமா? எது எது உயர்ந்ததோ, அதெல்லாம் தமிழர்களாகிய எங்களுக்குச் சொந்தம்.

மன்னும் இமயமலை எங்கள் மலை - ஏனெனில்,

இந்த மாநிலம் மீது இதுபோல் பிறிது இ(ல்)லை
இன்னறு நீர்க் கங்கை யாறெங்கள் ஆறு

- காவிரி இல்லை. அது அடிக்கடி வற்றிப்போகும். இதற்குப் புராணமே உண்டு. இது வற்றாத நதி. ஏன்? சிவன் தலையில் இருந்து வருகிறது. கடவுள் வாழ்வது எதனால்? நாங்கள் எழுதிய கதைகளால். கங்கை, வரமாட்டேன் என்றுசொல்லிவிட்டாள். 'நான் வந்தால் பூமியில் என்னைத் தாங்குவதற்கு ஆளில்லை. ஒரு சக்தி இல்லை' என்று கொக்கரித்தாள். 'நான் இருக்கிறேன்' என்று தன் சிரம்மீது வைத்ததாகப் புராணக்கதை (ஒன்று உண்டு).

கதைகள் பொய்யெனக் கண்டோம். அதையும் சொல்லிவிடுவோம். கதைகள் பொய்தான். அதில் சத்தியம் துயில்கிறது. உண்மை ஒளிந்திருக்கிறது. காணமுடியாத கண்களுக்குக் கடவுளைக் காட்டென்றால், ஒரு கணபதியைத்தான் படம்போட்டுக் காட்டமுடியும். அதற்கப்புறம் சொல்லால் காட்டியிருக்கிறார்கள். இது இன்னும் சுவையாக இருக்கிறது. அந்தக் காரியத்தை மிக அற்புதமாகச் செய்தவர் மகாகவி. வேறு யாரையும்விடச் சிறப்பாக.

'எதை விரும்புவது என்று எனக்கு என்ன தெரியும்? உனக்குத்தான் தெரியும். எனக்கு எது வேண்டும்? என்று நீதான் கொடுக்க வேண்டும். அம்மா மாதிரி.' எனவே, கடவுளைத் தாய் நிலையில் வைப்பது. ஆகவே, அவர் கேட்டதெல்லாம் நமக்காக.



பஞ்சமும், நோயும், நின் மெய்யடியார்க்கோ ?

- எங்கள் குழந்தைகளுக்கா பஞ்சமும் நோயும்?

பாரினில் மேன்மைகள் வேறினி யார்க்கோ ?
தஞ்சமடைந்தபின் கைவிடலாமோ ?
தாயுந்தன் குழந்தையைத் தள்ளிப் போமோ ?
அஞ்சலென்று அருள்செயும்கடமை இல்லாயோ ?

கோபம் வந்து விடுகிறது.

ஆரியநீயும் நின்அறம் மறந்தாயோ ?

அம்மாவுக்கு எப்படியிருந்தாலும் கோபம் வராது. குழந்தைகளுக்குச் சோறு இல்லையென்றால் கோபம் வந்துவிடும். கடமையை நீ மறந்தாயோ? ஆகவே, இந்த மக்களைத் தாயுள்ளம் கொண்டு பார்த்த ஒரு கவிஞர், எல்லாவற்றையும் தாய் மாதிரி புகட்டிய கவிஞர். அறிவைப் புகட்டினார். தமிழர்களுக்கெல்லாம் பாலாறே எடுத்துப் புகட்டினார். வேதம் புதுமை செய்தார். எல்லாரையும் அமரநிலை ஆக்கினார். அந்த நன்மார்க்கத்தை இந்தியா உலகுக்கே தரவேண்டும் என்று உணர்த்தினார். அது உறுதியாக! ஆம் இந்தியா உலகிற்கு அளிக்கும்! ஆம் ஆம் ஆம் இந்தியா உலகிற்கு அளிக்கும்!

அப்புறம் அடிக்கடி நான் வியப்பது உண்டு. எங்கெங்கோ இருந்து சில கேள்விகள் வரும் அதற்குச் சில பதில்கள் வரும். பாரதியாரைப் படித்தால் உங்கள் மனத்திலுள்ள சந்தேகம் எல்லாம் போய்த் தைரியம் வரும்; அச்சம் தீரும்; ஆண்மை ஓங்கும்.

இந்த ஊருக்கு நான் பலதடவை வந்திருக்கிறேன். மணக்குள விநாயகர் தரிசனம் பண்ணியதில்லை. நான்தான் சொன்னேனே ஏன் என்று? இப்போது அவர்மீது தனிக்காதல் வருகின்றது. ஏனென்றால் பாரதியாருடைய பாடல் பெற்ற ஸ்தலம் நேரடியாக ஒன்று உண்டென்றால் மணக்குளவிநாயகர்தான். விநாயகர்நான்மணிமாலையைப் படியுங்கள். இசை தெரியாதவர்கள் வாய்விட்டுப் படியுங்கள்; இசை வந்து விடும். தமிழும் இசையும் அந்த மாதிரிக் கலந்திருக்கிறது. வேறு மொழி அந்த மாதிரி இருக்கிறதா என்று தெரியாது.

இங்கே வந்து நீங்கள் சொன்னீர்கள். மேற்கத்திய இசையா? ஐயையோ! என்ன அற்புதமாக இருந்தது. மேற்கு என்று நினைக்காதீர்கள். கிழக்குதான் அங்கேயும் ஒளிந்து கொண்டிருக்கிறது. சில பேர் மேற்கு வழியாகக் கிழக்குக்கு வருவார்கள். எப்படியிருந்தால் என்ன? அது மாதிரி நம்முடைய கலைகள்! அதனால்தான் உலகம் அதை ஒப்புக் கொள்கிறது. எனக்குச் சங்கீதத்திலே ஈடுபாடு வந்தது முதலில் மேற்கத்திய இசை கேட்டு. அப்புறம் பார்த்தால் இதுவேறு அதுவேறு அல்ல. கவிதை ஒன்றுதான் மொழி வேறு அது மாதிரி எல்லா மொழிகளையும் நாம் நேசிக்கிறோம். இந்த உலகெலாம் வந்து ஒளிர்வதற்கான ஓர் இடம், நமது தேசபக்தி குறைந்தது என்று நினைக்கிறீர்களா? நம்தேசபக்தி அளவிடற்கரியது. எல்லா தேசங்களையும் நேசிக்கிற ஒரு தேசபக்தி. எல்லா மொழிகளையும் நேசிக்கிற ஒரு மொழி. நமக்குப் பகைமை உண்டோ? பாரதிதாசன் 'எமது பகைவர் எங்கோ ஒளிந்து மறைந்தனர்' என்கிறார். அதெல்லாம் கிடையாது, நமக்குப் பகைமையே கிடையாது. ஏனென்றால் பகைவருக்கு அருளுகிற நெஞ்சம் நம்முடைய நெஞ்சம். இந்த அன்பை 'அன்பென்று கொட்டு முரசே, அதில் யார்க்கும் விடுதலை உண்டு' அதனால் எஜமானருக்கும் விடுதலை உண்டு என்றுதான் சொல்கிறார். எஜமானர்களும் அடிமைகள்தானே? பெரிய அடிமைகளுக்குச் சின்ன அடிமைகள்.

அப்புறம் இன்னொன்று சொல்லியிருக்கிறார் அவர், இந்த தேசத்தில் யார் அடிமைப்பட்டிருப்பது? ஏன் பெண்களை அவர் தெய்வமாகப் பார்த்தார்? இந்த தேசத்தில் அடிமைப்படாதவர்கள் பெண்கள்தான். அவள் புருஷன்தான் அடிமைப்பட்டான் சமூகத்துக்கு. அவள் அதிகபட்ச அடிமை அவள் புருஷனுக்குத்தான். பூமியில் எவர்க்கும் இனி அடிமை செய்யோம், பரிபூரணனுக்கே- எங்கேனும் அடிமை செய்ய வேண்டுமா இல்லையா ஒருவர்? ஆகவே, இந்தப் பெண்களே நமக்குச் சுதந்திர உணர்ச்சியைத் தந்தவர்கள். ஒரு சிவாஜிக்குச் சுதந்திர உணர்ச்சி வந்தது யாரால்? 'வலிமை சேர்ப்பது தாய்முலைப்பால்' என்று சொல்கிறாரே அ்தன் அர்த்தம் என்ன? எதற்கும் அடிமைப்படாதவர்கள்.

இவர் வந்து பிரித்து வைக்கிறார். உங்களுக்கும் இந்த நல்ல பலன் வரட்டும். கற்புநிலை என்று சொல்லவந்தால்- இது என்ன பெண்களுக்கே தனிச்சொத்தாக இருக்கிறது. இருவருக்கும் பொதுவாக வைத்துக் கொள்ளலாமே? அது சிறப்பல்லவா? அதுவும் ஆண்களின் சூழ்ச்சி என்று சொன்னால் என்ன வம்பாயிருக்கிறதே? இல்லை. இல்லை. ஒருபோதும் இருக்க முடியாது. ஆண்கள் சூழ்ச்சி அவ்வளவு ஆழமுடையதாக இராது. இதெல்லாம் பாரதியைப் படிக்கப்படிக்க ஏற்படுகிற தெளிவு. என்ன சொல்கிறார்? அதை நாமும் கற்றுக் கொள்ளக்கூடாதா? அந்தப் பண்பு நமக்கும் வரக்கூடாதா? நீங்கள் அடிமைகளாகவே இருக்கிறீர்களே. 'தமிழா தமிழா' என்றுதான் தலையில் அடித்துக் கொண்டாரே ஒழிய, 'தமிழச்சியே தமிழச்சியே' என்று அவர் ஓரிடத்திலாவது சொன்னது உண்டா? யாராவது அழகாய் இருந்தால் எனக்குப் பொறுக்க மாட்டேன் என்கிறது. 'தமிழச்சியை விட இன்னொருத்தி அழகாய்இருக்கிறாள் என்றால் என் மனது பொறுக்கமாட்டேன் என்கிறதடா தம்பி'. இதற்கு என்ன உணர்வு என்று பெயர்? தமிழுணர்வு! கற்றவர்களுக்கு உலக உயர்வு வரவேண்டும் என்று அர்த்தம். நம்மைத் தெய்வ நிலையாக்கல். எல்லாரையும். கல்லை வைரமணி ஆக்குதல் போல், கல்லிலேயிருந்துதான் வைரமணி வரும்.

ஆகவே பாரதியாரைக் குழந்தைப் பருவத்திலேயிருந்து நாம் பழக்கம் கொள்ள வேண்டும். நமக்கு நினைவு தெரிவதற்கு முன்னாலேயே நம் நினைவாகப் பாரதியார் பதிந்து விடவேண்டும். அதற்கெல்லாம் தாய்மார்கள்தான் உகந்த கருவி. யாராவது சொன்னால் பொய் கூடச் சொல்லி விடுவோம். ஏனென்றால் நம் வீட்டிலே எதுவுமே இல்லை என்று ரொம்ப காலத்துக்கு முன்பே கண்டுபிடித்து விட்டோம் என்று நினைத்துக் கொண்டு உலகெலாம் போய் அவமானப்பட்டவர்கள் நாம். ஆகவே, பெண்மக்களைச் சரியாக மதிக்க வேண்டும். அவர்களை இன்றைக்கும் சிறப்பாக மதிப்பதற்கும்- ஏதோ பரந்த மனம் என்று நினைக்காதீர்கள். சத்தியம் அவ்வாறுதான் இருக்கிறது. பராசக்தியின் வடிவமாக, எல்லாப் பெண்களையும் பார்க்கிற பார்வையை மகாகவி பாரதிதான் தமிழுக்குத் தந்திருக்கிறார். அந்தப் பார்வை இன்னும் போய்விடவில்லை என்பதற்கு அத்தாட்சி இந்த அன்னை பூமி. அது எப்படி முடியும்? ஆயிரம் சண்டை வரும். ஐயோ அம்மாவும் பிள்ளையும் சண்டைபோடவில்லை என்றால் அது ஒரு உறவா? அவர்கள் மனம் புண்படவில்லை என்றால் அவர்களுக்கு மனம் இருக்கிறதாகவே நமக்குத் தெரியாமல் போய்விடும். அடிக்காத அம்மா உண்டா? ஆனால் யாரும் காயப்படுத்திக் கொள்வதில்லை. என் அம்மா என்னை அடித்ததே இல்லை. அந்த 52 வயதுக்கு அப்புறம். என்னை அடித்தாள். எனக்கு 52 வயது. அய்யய்யோ வலிக்கலே, என்று சொன்னேன். நீ எப்போதும் அப்படித்தான் சொல்வாய் எனக்குக் கை எரிகிறது என்று சொல்வாள். ஆக ஓர் அன்பினால்தான் இதெல்லாம் நடக்கிறது.

ஆகவே, பாரதியாருக்குத் தாயைப் பார்ப்பதற்கான சந்தர்ப்பம் இல்லை. அங்கு தெரிகிறது. எழுதினால் எல்லோருக்கும் கடிதம் கிடைத்து விடும். நீங்கள் வைத்த இடத்தில் போய்த் தேடிப் பார்த்தால்தான் கிடைக்காது. தேடுங்கள் நிச்சயமாகக் கண்டடைவீர்கள். அப்படிக் கண்டடைந்த தாய்மார்கள் இந்தத் தேசத்தில் இன்னும் இருக்கிறார்கள். இன்னும் நிறையப் பேர் இருக்கிறார்கள். அவர்கள் வடிவமாக நீங்களெல்லாம் இருக்கிறீர்கள் என்பதனால்தான் உங்களையெல்லாம் பார்த்தவுடன் வணங்கத் தோன்றுகிறது.

இந்த ஒரு மாலைநேரத்தில் உங்களுடன் கொஞ்சநாழி அவர்கள் ஆடவும் பாடவும் உட்கார்ந்து கேட்டுக் கொண்டிருந்தால் இன்னும் நன்றாக இருந்திருக்கும். இன்னும் நல்ல நேரமாக இருந்திருக்கும். இருந்தாலும் சில சடங்குகள் இருக்கிறதே. அதிலே ஒருவர் பேச வேண்டும். இவ்வளவு நேரம் உட்கார்ந்திருக்கிறேன். என்னைப் பேசவே சொல்லவில்லை என்று நானே நினைத்துக் கொள்வேனோ? என்னவோ?

ஆக, பேசுவதல்ல, உங்களோடு இருத்தலே எனக்கு மகிழ்ச்சியைத் தருகிறது. ஒரு கனவு உலகத்தில் சஞ்சரிப்பது போல இருக்கிறது. இந்தக் கனவு நீடூழி வாழ்க. இந்தக் கனவு தெய்வீகக் கனவு அன்னது வாழ்க.

உலகெலாம் பெரும் கனவு
அதிலே உண்டு உறங்கி இடர்செயும்
கலக மானிடப் பூச்சிகள்

என்ன அடைமொழி பார்த்தீர்களா? அதற்கிடையில் மனிதனைப் புகழ்ந்திருக்கிறாரே, இருந்தாலும் அப்புறம் அவருக்குத் தெரிந்திருக்கும் அல்லவா? சில தினங்கள் உயிர்க்கு அமுதாகி- யார்? 'திலகவாள் நுதலார் தரும் மையல்'. மையல் என்றால் என்ன சொல்வது? அந்த அம்மா தருகிற மையல் யார் தருவார்? வணங்கக்கூடியவர். மையலென்றால் நீங்கள் மயங்கி விழுந்து விடவேண்டும் ஐயா. அப்படிப்பட்ட தெய்வீகக் கனவு. அது வாழ்க.

ஆகவே உலகை சாஸ்வதம் ஆக்குவது எது- சந்தேகமேயில்லை அன்புதான். திரும்பத் திரும்பப் பிறப்பது, பிறவா வரம் தருவாய் என்றெல்லாம் பாடுகிறார்களே அது எதற்குத் தெரியுமா? பிறந்தால் சாகவேண்டுமே என்ற பயம்தான். 'இந்த ஜன்மத்தில் விடுதலை உண்டு.' இந்த உறுதியோடு இந்த மண் வாழ்க்கையை நேசித்தல். அவர் அங்கே போய் அந்த மண்ணில் எட்டயபுரம் புழுதியில் விழுந்து விழுந்து புரள்வாராம். ஏனென்றால் அது தாய்மண். இப்படி நேசிப்பது. மனிதன் தன்னையறிந்தல்ல தன்னையீன்ற மண் பெறாதவர்களுடையதாய்த்தான் இருக்க முடியும் என்கிற நம்பிக்கையோடு இந்த அன்னையில்லத்திற்கு, இந்தத் தாய்வீட்டிற்கு வந்து தனயர்களோடும் தம்பிமார்களோடும் எந்த வயதிலிருந்தாலும் தாய்களோடும் இந்தக் குழந்தைகளோடு இருந்து பார்த்து அந்த அன்னையைத் தரிசிக்க முடிகிறது. அன்னையர்களின் விசுவரூபத்தைப் பலர்வடிவங்களில் இங்கே பார்க்க முடிகிறது. என்னை அழைத்த அன்னைக்கு முதல் வணக்கம்.

இதற்குத் தகுந்த துணை யாரென்று பார்த்தேன். தம்பிதான் தகுந்த துணை. தம்பிதான். 'பூமிக்கு என்னை அனுப்பினாள் அந்தப் புதமண்டலத்திலும் எனக்குத் தம்பிகளுண்டு.' ஆகவே, தம்பிகள் ஏராளம். இவளைத் தாயென்று கொண்டால் நமக்கு எவ்வளவு சகோதரர்கள்? எவ்வளவு சகோதரிகள்? எவ்வளவு செல்வம்? எவ்வளவு குடிகள்? எவ்வளவு கலைகள்? ஆஹாஹா! மண்ணுலகத்திலே எத்தனை இன்பம். இது மேலும் மேலும் தலைமுறைதோறும் வளரவேண்டும் இந்த வாழ்க்கையை நேசிக்க வேண்டும். வாழ்க்கையை வெறுக்கும்படியாகவோ புலம்பும்படியாகவோ ஓர் இடத்திலும் சொல்லவில்லை.

எத்தனை கோடி இன்பங்கள் வைத்தாய் இறைவா

அவரையாபோய் வருத்தப்பட்டார் என்று சொன்னீர்கள்? அவர் ஏதாவது வருத்தப்பட்டிருப்பார் என்றால் நமக்காக வருத்தப்பட்டிருப்பார். என்ன, வயிற்றுக்குச் சோறில்லாமல்,

வயிற்றுக்குச் சோறிடல் வேண்டும்.
இங்கு வாழும் மனிதருக்கு எல்லாம்.

இந்தக் கவலை யாருக்கு வரும்? அந்தக் கவலையைப் படைத்த ஒரு கவிஞர். எனவே, அவர் மனம் மகிழும்படியாக நாம் வாழுதல் வேண்டும். வாழ்கிறோம். அந்த அடையாளத்தை நான் பார்க்கிறேன். அன்று வாழ்ந்த பாரதியை விட இன்று வாழ்கிற பாரதி எனக்குத் தெளிவாகத் தெரிகிறார். அவரது போதனைகள் இன்றைக்கு மிகமிக எல்லாக் காலத்துக்கும் relevence to all time for Indians எல்லாக் காலத்துக்கும் நமக்கு வேண்டியது. அந்தந்தக் காலத்துக்கே இடவேண்டிய கட்டளையைத் தொகுத்து அப்போதே தந்திருக்கிறார். ஒவ்வொரு காலத்துக்கும் புதிதாகப் புதிதுபுதிதாகப் புரிகிறது. அன்பு-சுதந்திரம் அடைந்தது. 'இன்ப சுதந்திரம் நின்இன்னருளால் பெற்றதன்றோ? அன்பற்ற மாக்கள் அதைப் பறித்தால் காவாயோ?' என்று இன்றைக்கு என்றைக்கோ வரப்போகிற ஆபத்துக்கா கலங்கி நிற்பது? இந்தக் கலக்கத்தால் துவண்டு விடுவதில்லை. அதிக வலுப்பெறுவது பராசக்தியின் ஆசியைப் பெறுவது-பாரதத்தை உலகஅரங்கில்- நான் ஒருமுறை யாராவது ஏதாவது சொன்னால் அதற்குப் பதில் அப்போதே தோன்றும்; தேசியத்திலே திராவிடம் உண்டு. திராவிடத்தில் தேசியம் உண்டா? என்று நான் பேசி விட்டேன். அந்த இயக்கத்தைச் சேர்ந்த ஒருவர் சொன்னார் 'தேசிய கீதத்திலே திராவிடம் வருகிறது' என்றார். நல்ல வாய்ப்புக் கொடுத்தேன்; அதைச் சொல்லாமல் விட்டு விட்டீர்கள். 'நீராரும் கடலுடுத்த' பாடலில் வருகிறது. அது எப்படி இல்லாமல் போகும்? கவிஞன் வாக்கிலே அந்த சத்தியம் எப்படி வெளிப்படாமல் போகும்? 'திகழ் பரத கண்டமதில்' வருகிறதா இல்லையா? ஆகவே வேற்றுமைகள் நம் மனத்தில் வந்தால்கூட நம் வாக்கில் வராது. அது சத்தியமே பேசும். அப்படிப்பட்ட சத்திய வாக்குகளின் புதல்வர்கள் நீங்கள். அதற்கென்று தனியாகக் கிளாஸே வேண்டாம். அதற்கென்று நீங்கள் சந்தோஷமாக இருங்கள். பாரதி உங்கள் பக்கத்தில் வந்து சந்தோஷமாக உட்கார்ந்து கொண்டிருப்பார். மனத்தில் மகிழ்ச்சி கொள்ளுங்கள்.

வேத வாழ்வு என்பது என்ன? சந்தோஷமாக வாழ்வது. அப்படி ஒரு வேத வாழ்க்கையை பல சான்றோர்கள் அரவிந்தர், அன்னை இன்னும் பலபேரை எல்லாம் இந்த ஒருவடிவத்தில் என்னால் காண முடிகிறது. ஏனென்றால், இவர்தான் தமிழின்மூலம் நமக்கு எல்லாவற்றையும் கொடுத்திருக்கிறார். தமிழின் குரு. அந்தத் தமிழ்தான் இன்று உலகெலாம் வழங்கி வருகிறது. தமிழர்கள் வாயில் இருந்து பிறந்து வருகிறது பாருங்கள் இதுதான் தமிழ். அதிலும் இந்த ஊர்த் தமிழ் எனக்கு ரொம்பப் பிடிக்கும். 'மக்கள் பேசும் மழலை.' இந்தியக் கலை எங்கேயிருக்கிறது? என்று கண்டுபிடித்தோம். மெட்ராஸிலே இஸ்துக்கினு போறதிலே இருக்கிறது அது. அதற்கு இலக்கியத்தில் இடம் வேண்டும் என்று வாதிட்டு,

வழிமொழிந்தவர் மகாகவி பாரதி. என்னென்ன புதுமைகள் நீங்கள் காண்கிறீர்களோ, அதில் நீங்கள் என்னென்ன விபரீதங்கள் கண்டாலும் எல்லாவற்றிற்கும் பாரதியாரே பொறுப்பு.

கார்ட்டூன் போடுவதற்குப் பாரதியார்தான் பொறுப்பு. பத்திரிகை நடத்துவதற்கும் பாரதியார்தான் பொறுப்பு. உரைநடையின்மூலம் இலக்கியம் சமைப்பதற்குப் பாரதியார்தான் பொறுப்பு. சாதாரண மக்களைக் கதாநாயகர்கள் ஆக்குகிற பொறுப்பு பாரதியாருக்குத்தான்.

ராஜாக்களை எல்லாம் கிண்டல் பண்றதிலே அவரைப் போல மன்னர் கிடையாது. சின்னச்சங்கரன் கதை படிக்கவேண்டும். சிரிக்காமல் யாராவது படித்தால் நான் பரிசு தருகிறேன். ஆகவே அவர் பல்துறைக்கும் வழிகாட்டியானவர். அதனால்தான் நான் அவரை குரு என்று சொன்னேன். நமக்கெல்லாம் குரு, அவருக்குப் பிறகு தமிழில் எழுதவந்தவர்களுக்கெல்லாம் அவர்தான் குரு. அவரைத் தாண்டிப் போக யாரும் இல்லை. அவருடைய கனவுகளை அனுபவித்தே தீர வேண்டும். பெருங்கனவுஅது, தீராக் கனவு, மாறாக்கனவு. நாமுள்ளவரை அவருடைய கனவுகள் நமக்கு வழிகாட்டிக் கொண்டே இருக்கும்.

விசையுறு பந்தினைப் போல் உள்ளம் வேண்டியபடி செலும் உடல் வரும். தசையினைத் தீசுடினும் சிவசக்தியைப் பாடும் நல்அகம் வரும். ஆகவே, தந்தையிடத்தில் நல்ல வாக்குகள் கேட்டு நல்ல வழிநடக்கச் சித்தமாயிருக்கிற உங்களுக்கு பாரதியின் அருளால் எதிர்காலம் மிகப் பிரகாசமாக இருக்கும். உங்கள் அனைவரையும் பாரதியின் பெயரால் வாழ்த்தி, வந்து கொண்டே இருப்பேன். இதைக் கடக்காமல் எங்கள் ஊர் போக முடியாது. அதுமட்டுமல்ல. இதுதான் எங்கள் ஊரே. இங்கேயே வந்து விடலாமா என்றுகூட நான் நினைத்தேன். இப்பொழுது என்ன தோன்றுகிறது, இங்கேயேதான் இருக்கிறேன்.

வருவதும் போவதும் வாழ்க்கை. முடிவதல்ல, வணக்கம்!

திரு.ஜெயகாந்தன் கடலூர் மஞ்சக்குப்பத்தில் பிறந்தவர். வாழும் பாரதியென மதிக்கப்படும் இவர் தமிழ் இலக்கியத்தின் அனைத்துத் துறைகளிலும் தனித்த முத்திரை பதித்தவர். பாரதியுகம் போல ஜெயகாந்தன் யுகம் எனச் சொல்லும்வண்ணம் ஓர் எழுத்துப் பரம்பரையை உருவாக்கிய குருநாதர்; சாகித்ய அகாடெமி விருது, சோவியத் யூனியன் நேருவிருது, ஞானபீடவிருது மற்றும் பத்மபூஷண் முதலான விருதுகள் பெற்றவர்.

வாழ்வின் இணைந்த மேலான சில நாட்கள்
என் இவ்வாழ்வில் பதிவான நாட்களைக்
கருதுகிறேன்.
அன்புத்துணை கவிஞர் இரா. மீனாட்சி
ஆற்றி வரும் அரும்பணிகளை முன்னரே
அறிவேன். ஆயினும் வாய்த்தக்க பணிகளை இன்று
நேரில் காணும் பேறு பெற்றேன்
என்றும் அவர் பணிகளுக்குத் துணை நிற்பேன்.
என் மனையை இதுவந்த மகிழ்ச்சி சொல்ல
வொண்ணாதது என்னதையும் பதிவு செய்கி
றேன்.

அன்புடன்
[signature]
10.12.07



# உலகமே ஓர் ஆரோவில்லாக மாறவேண்டும்!

## கவிஞர் சிற்பி பாலசுப்பிரமணியம்

பேரன்புக்குரிய பெரியோர்களே, மகாகவி பாரதியாருடைய 125-ஆவது பிறந்தநாளை மிகப்புதுமையான முறையில் ஆரோவில்லிலே கொண்டாடக்கூடிய வகையில் கவிஞர் மீனாட்சி அவர்களும், திரு. வரதராஜன் அவர்களும், திரு. அர்த்தநாரி அவர்களும், சேதுபதி அவர்களும் - இவர்களெல்லாம் இணைந்து ஒரு புதுமையான முறையிலே இந்த நிகழ்ச்சியை நடத்திக்கொண்டிருக்கிறார்கள். அதற்கு அடையாளமாகப் பின்புலத்திலே இருக்கக்கூடிய அந்தக்காட்சி அமைந்திருக்கிறது. உலக நலத்தை நேசித்த கவிஞர்கள், சிந்தனையாளர்கள், அருளாளர்களுடைய படங்கள் நமக்கு முன்னால் காட்சியளிக்கின்றன.

'தீங்கின்றி நாடெல்லாம் திங்கள் மும்மாரி பெய்ய வேண்டும்' என்று ஆசைப்பட்ட ஆண்டாள்;

'அகர முதல எழுத்தெல்லாம் ஆதி பகவன் முதற்றே உலகு' என்று தொடக்கக் குறளிலேயே உலகைப்பற்றிச் சிந்திக்க வைத்த வள்ளுவப் பெருந்தகை;

அதனைத் தொடர்ந்து, 'மலர்களிலே பல நிறம் கண்டேன்; ஒவ்வொரு மலரிலும் ஒவ்வொரு விதமான சிந்தனையைக் கண்டேன்' என்று சொல்லுகின்ற அன்னையினுடைய திருவுருவம் அமைந்திருக்கிறது.

அதற்கு அடுத்தாற்போல் அரவிந்த மகாமுனிவருடைய திருவுருவம் அமைந்திருக்கிறது. 'எல்லாரும் அமரநிலை எய்தும் நன்முறையை இந்தியா உலகிற்களிக்கும்' என்று பாரதியார் சொன்னதே, 'அரவிந்தர் மூலமாக இந்தியா அளிக்கும்' என்பதாகத்தான். - அந்த அரவிந்தருடைய திருவுருவம் இங்கே அமைந்திருக்கிறது.

'பிறருக்காக உழைக்கிறவர்களே வாழ்கிறவர்கள் மற்றவர்களெல்லாம் செத்தாருள் வைக்கப்படும்' என்று திருவள்ளுவர் சொல்லியிருக்கிறார். - அந்தக் கருத்தைத்தான் பின்னாலே விவேகானந்தர் சொன்னார். அவர், உலகம் முழுவதும் ஒன்று என்ற கருத்தினாலேதான் உலகைத் தன்னுடைய ஆளுமையினால் ஆட்கொண்டார். Brothers and Sisters என்று அமெரிக்காவிலே அழைத்தவுடனேயே உலகம் அவர் வசப்பட்டது. அப்படி உலகத்தைத் தன்னுடைய உள்ளத்தால், சொல்லால் ஈர்த்துக் கொண்ட விவேகானந்தருடைய திருவுருவம் அமைந்திருக்கிறது.

ஔவையார்;- ஔவையாருடைய சிந்தனைகளும் உலகம் முழுவதும் இன்று பரவியிருப்பது நமக்கு ஆச்சர்யமாக இருக்கிறது. பிலடெல்பியாவிலே இருக்கக்கூடிய ஓர் அரங்கத்தில் ஔவையாருடைய வாக்கியம் பொன்மொழியாகப் பொறிக்கப்பட்டிருக்கிறது.'கற்றது கையளவு கல்லாதது உலகளவு' என்று அவர் சொன்ன வாக்கியத்தை, ஆங்கிலத்தில் மொழிபெயர்த்து அமைத்துள்ளனர். சான்பிரான்ஸிஸ்கோவில் இருக்கக்கூடிய ஒரு பொறியியல் கல்லூரியில் இந்த வாக்கியம் பொறிக்கப்பட்டிருக்கிறது. அந்த வாக்கியத்தைப் பார்த்தபின்தான் பிலடெல்பியாவிலும் அதை எடுத்துப் பொறித்திருக்கிறார்கள். அப்படி உலகச்சிந்தனையோடு பேசிய ஔவையார் படம் இருக்கிறது.

அடுத்து, கருணையே கண்களில் ததும்பக்கூடிய ஞானத்திருவுருவமாக ரமண மகரிஷி அமர்ந்திருப்பதைப் பார்க்கிறோம்.

திருவண்ணாமலையில், ஆசிரமம் அமைத்த தொடக்க நாட்களில் வெறும் கூரை மட்டுமே இருந்த நாட்களில்- யோக அனுபவங்களை அவர் கற்றுக் கொடுத்துக் கொண்டிருந்த நாட்களில் மின்சார விளக்குக் கூட இல்லை. ஆகவே இருளில் மூழ்கியிருந்தது ஆசிரமம். அதைத் திருடர்கள் முற்றுகை இட்டார்கள். முற்றுகை இட்ட திருடர்கள், 'நிறைய சாமியார்கள் இருக்கிறார்கள்; பணம் இருக்கும்' என்று வந்திருந்தார்கள். கையிலே தடி; ஆளுக்கொரு அடி; ரமணருக்கும் சேர்த்து. அதன்பிறகு தேடித்தேடிப் பார்த்தார்கள்; ஐந்து ரூபாய்கூட அவர்களுக்கு அகப்படவில்லை. பணம் அகப்படவில்லை. இந்த நிலையில் ஊரிலிருந்தவர்கள் இந்தச் செய்தியைக் கேள்விப்பட்டு ஓடிவந்து திருடர்களைக் கட்டிப் போட்டார்கள். ரமணர் அவர்களைப் பார்த்து அந்தக் கட்டுகளை அவிழ்த்து விடச் சொன்னார். அதற்குப் பிறகு அந்தத் திருடர்களிடத்திலே, "நாங்கள் சமைத்த உணவு மிச்சம் மீதி இருக்கிறது; சாப்பிட்டு விட்டுப் போங்கள்" என்று ரமணர் சொன்னார். அப்படி ஒரு கருணையே வடிவமாக இருக்கக்கூடிய ரமண மகரிஷியைப் பார்க்கிறோம்.

தாகூர்- 'குறுகிய சிந்தனைகளாகிய பாலைவனத்தின் பிளவுகளிலே, என்னுடைய அறிவு என்ற பெருவெள்ளமானது அணைந்து போகாத இடம் எதுவோ- அந்த இடத்தில் என்னுடைய நான் விழித்தெழுவதாக!' என்று பேசிய தாகூர் இருக்கிறார். எல்லா உயிர்களையும் அரவணைத்த கருணை வள்ளலாக விளங்கக்கூடிய இராமலிங்கர் இருக்கிறார். 'எப்பாலும் எப்பதமும் எங்கணும் நான் சென்றே தப்பாது நின் அருட்புகழை இயம்பிடல் வேண்டும்' என்று சொன்ன வள்ளல் பெருமானுடைய திருவுருவம் அமைந்திருக்கிறது.

எல்லாவற்றிற்கும் மையப்புள்ளியாக மகாகவி பாரதியார் விளங்குகின்றார். அவருடைய பெயரைச் சொல்லி, அவர் வழியிலே நின்று, ஓருலகச் சிந்தனைகளைப் பற்றி எண்ணுவதற்காக நாம் கூடியிருக்கின்றோம்.

இந்த அற்புதமான அவையிலே அருமையான கருத்துக்களையெல்லாம் நம்முடைய சிந்தனையாளர் நாளும் நலம் பெறச் சிந்திக்கக்கூடிய சிந்தனையாளர் எம்.எஸ்.உதயமூர்த்தி அவர்கள் எடுத்துச் சொன்னார்கள். மேலைநாடெல்லாம் கண்டவர். அங்கிருக்கிற வாழ்க்கையையெல்லாம் பார்த்து வந்தவர்; அதனால் அலுப்பும் சலிப்பும் அடைந்து இந்தியாவிற்கு வந்து திரும்பி வந்து இந்த மக்களைக் கடைத்தேற்ற வேண்டும் என்பதற்காக மக்கள் இயக்கத்தை நடத்திக் கொண்டிருக்கக்கூடிய எம்.எஸ். உதயமூர்த்தி அவர்கள், ஆன்மீக நெறிவழிப்பட்ட கல்வியும், வாழ்வும் அமைந்தாலொழிய நம்முடைய நாட்டிற்கு எதிர்காலம் இல்லை என்ற கருத்துக்கு அவர்கள் வந்திருக்கிறார்கள்.

இவற்றையெல்லாம் சிந்திப்பதற்கு மகாகவி பாரதி நமக்குக் காரணமாக இருக்கிறார். காலையிளம் பரிதியைப் பற்றி அவர் தொடங்கி இந்தப் புதுவை நகரைப் பற்றி அவர் பேசுகிற பொழுது,

"காலையிளம்பரிதி வீசும் கதிர்களிலே
நீலக்கடல் ஓர்நெருப் பெதிரே சேர்மணிபோல்
மோகனமாம் சோதி பொருந்தி முறைதவறா
வேகத் திரைகளினால் வேதப் பொருள்பாடி
வந்து தழுவும் வளஞ்சார் கரையுடைய
செந்தமிழ்த் தென்புதுவை எனும்திருநகரம்"

என்று இந்த நகரத்தை அவர் வருணித்திருக்கிறார். இந்த நகரிலே அவர் பத்தாண்டுகள் வாழ்ந்திருக்கிறார். அந்தப் பத்தாண்டுகளிலே புதுவை மண் அவருக்கு நிறைய அனுபவங்களைத் தந்தது.



'எனக்கு முன்னர் சித்தர் பலர் இருந்தாரப்பா,
நானும் ஒரு சித்தன் வந்தேன் இந்த நாட்டில்'

என்று அவர் சொன்னதற்குக்காரணமே,புதுவைமண்தான்.இங்கே.அத்தனைசித்தர்களை அவர் சந்திக்கக்கூடிய வாய்ப்பு ஏற்பட்டது. 'குவலயத்து விழிபோன்ற யாழ்ப்பாணத்தானையும்' சந்தித்திருக்கின்றார்.

'ஞாயிற்றைச் சங்கிலியால் அளக்கலாமோ ?
ஞானகுரு புகழினை நாம் வகுக்கலாமோ ?'

என்று பேசிய குள்ளச்சாமியை இங்கே சந்தித்திருக்கின்றார். இப்படி எத்தனையோ சித்தர்களை அவர் சந்தித்த மண் இது. அப்பொழுது அரவிந்த மகாயோகி இந்தப் புதிய சிந்தனைகளை உருவாக்கிக்கொண்டிருந்த காலத்தில் அவரோடு தோளோடு தோள்நின்று தோழமை பூண்டு இந்த இயக்கத்தினால் தானும் பயன் பெற்றவராக விளங்கியவர் மகாகவி பாரதி. அப்படிப்பட்ட மகாகவி பாரதியை உள்வாங்கிய, அரவிந்தருடைய சிந்தனைச் செழுமையை வளர்த்த இந்தப் புதுவை மண்ணை நான் முதலில் வணங்கி என்னுடைய உரையைத் தொடங்குகின்றேன்.

மகாகவி பாரதி உலக ஒருமைப்பாட்டை நோக்கித் தன்னுடைய பயணத்தை எப்படி மேற்கொண்டார்? உதயமூர்த்தி அவர்கள், 'எப்படியெல்லாம் நம்முடைய சமுதாயத்தைச் சீர்திருத்த வேண்டும்' என்று சொன்னார்கள். அதுபோல நம்முடைய மண்ணிலிருந்து,நம்முடைய சமுதாயத்திலிருந்து பாரதியாருடைய பயணம் தொடங்குகிறது. திரும்பத் திரும்பப் பார்க்கிறபொழுது அவருக்குத் தெரிகிறது. ஒருலக மனப்பான்மையை உருவாக்குவதற்கு முன்னால் முதலில் வீட்டைச் சரியாக வைத்துக் கொள்வோம் என்று அவருக்குத் தோன்றுகிறது. வீடு எப்படியிருக்கிறது? மனைவியை அல்லது பெண்ணை அடிமையாகக் கருதக்கூடிய சமூகமாக இந்தியச் சமூகம் இருந்து வருகிறது. அதனால் அவருடைய முதற்பயணம்-Gender Equality-ஆண், பெண் சமத்துவம் என்ற குடும்பநிலையிலேயிருந்து தொடங்குகிறது.

"ஆணும் பெண்ணும் சமமெனக் கொள்வதால்
அறிவில் ஓங்கி இவ்வையம் தழைக்குமாம்"

உலகம் தழைக்க வேண்டுமானால் எல்லாத் துறைகளிலும் ஆண் பெண் சமம் என்ற கருத்து உருவாக வேண்டும். சில நாடுகளிலே இப்பொழுது ஆண்கள் பெண்களுக்குச் சமமானவர்கள் அல்லர் என்ற இயக்கம்கூட வளர்ந்து வருகிறது. 'ஆணும் பெண்ணும் சமமெனக் கொள்வதால் அறிவில் ஓங்கி இவ்வையம் தழைக்குமாம்'. 'மாதர் தம்மை இழிவு செய்யும் மடமையைக் கொளுத்துவோம்'. 'பாரதி அறுபத்தாறிலே' பாரதி தன்னுடைய சிந்தனைகளைப் பற்றிப் பேசுகிறபோது இதைச் சொல்லுவார்;

"பெண்ணுக்கு விடுதலை என்று ஆங்கோர் நீதி பிறப்பித்தேன்". - 'நானொரு நீதியை உலகுக்குப் பிறப்பிக்கிறேன்'. அதனால்தான் பாரதியைப் பற்றிப் பேசுகிறபோதெல்லாம் நம்முடைய சிந்தனையாளர் ஜெயகாந்தன், 'என்னுடைய குரு' என்று பேசுகின்றார். 'குருபீடத்தில் இருந்து நான் அந்த அருட்கதைகளைப் பெற்றுக் கொள்கிறேன்'என்று சொல்லுவது போல. 'பெண்ணுக்கு விடுதலை என்று ஆங்கோர் நீதி பிறப்பித்தேன். இதற்குரிய பெற்றி கேளீர்! மண்ணுக்குள் எவ்வுயிரும் தெய்வமென்றால் மனையாளும் தெய்வமன்றோ ? மதிகெட்டீரே! முட்டாள்களே! அறிவிலிகளே!' என்று ஆண்களாகிய நம்மைப் பார்த்துச் சொன்னார். 'மண்ணுக்குள் எவ்வுயிரும் தெய்வமென்றால் மனையாளும் தெய்வமன்றோ ? மதிகெட்டீரே!' என்று அந்த அடித்தளத்தில் இருந்து பாரதியாருடைய பயணம் தொடங்குகிறது.

வெளியிலே வந்து பார்த்தால் ஜாதிவேறுபாடுகள், மத வேறுபாடுகள், இனவேறுபாடுகள் மண்டிக்கிடக்கின்றன; தேச விடுதலைக்கு மட்டுமல்ல, மனிதருடைய மனவிடுதலைக்கும் ஆன்மிக விடுதலைக்கும் அடிப்படையாக இருப்பது; இந்தப் பேதங்களைத் தகர்க்க வேண்டியது என்று அடுத்தபடிக்குப் பாரதியார் பயணம் செய்கிறார்.

விடுதலைப்போரிலே ஈடுபட்டு நின்றபொழுது சமுதாய விடுதலை நோக்கிலே குறிப்பிட்டு அடுத்ததாக நம்மிடையே இருக்கிற பிளவுகள் பேதங்கள் ஆகியவற்றை அகற்ற வேண்டும் என்ற கருத்தைப் பேசுகிறார்.

குழந்தைகளுக்குச் சொல்லுகிறபோது கூட, சாதிக்கொடுமைகளை எதிர்த்து நிற்க வேண்டும் என்று குழந்தைகளுக்கு இந்த போதனையைச் செய்கிறார். அப்புறம் அடுத்ததாக வருகிறபொழுது மதம்; இப்பொழுது பார்த்தீர்களானால் இந்தியாவின் நிலைமையைப்பற்றி அவர்கள் சொன்னார்களே, அரசியல்வாதிகள் என்று சொன்னார்களே, அரசியல்வாதிகள் மதம் பிடித்தவர்களாக இருக்கிறார்கள் என்பது மட்டுமல்ல. ஆளுக்கொரு மதத்தை வைத்துக்கொண்டு விளையாட்டுக் காட்டிக் கொண்டிருக்கிறார்கள். மதத்தீவிரவாதம்

எல்லையில்லாமல் வளர்ந்திருக்கிறது நம்முடைய நாட்டிலே. குறிப்பாகச் சொல்லப்போனால் இந்தியாவிலே இரண்டு மாபெரும் சமூகங்களாக இருக்கிறவர்கள் இந்துக்களும் இஸ்லாமியர்களும். இந்த உண்மையை நாம் மறைக்க முடியாது; மறுக்க முடியாது. இவர்களுக்கிடையே ஒற்றுமை இருந்தாலன்றி இந்தியா பலம் வாய்ந்த இந்தியாவாக இருக்க முடியாது என்பதில் திட்டமான, தெளிவான கருத்து பாரதியாருக்கு இருந்தது.

பாரதியார் ஒரு தாயின் மணிக்கொடியை உருவாக்கினார். அது வேறு யாரும் உருவாக்கிய கொடியல்ல! பிறர் உருவாக்கிய கொடிகளிலிருந்து பாரதியார் சில சீர்திருத்தங்களை பாரதியார் செய்தார். மேடம் காமா உருவாக்கிய கொடியிலிருந்து, மகாத்மா காந்தி ஒரு கொடியை உருவாக்குவதற்கு முன்னால் பாரதியார் ஒரு கொடியை உருவாக்கினார்.

தாயின் மணிக்கொடி பாரீர்; -அதைத்
தாழ்ந்து பணிந்து புகழ்ந்திட வாரீர்"

என்று அவர் பாடியது அவர் உருவாக்கிய கொடியை. அந்தக் கொடி எப்பேர்ப்பட்டது? என்று கேட்டால் அது மதியாது- காற்று எவ்வளவு மட்டு மிகுந்து அடித்தாலும் அது அதை மதியாது உறுதிகொள் மாணிக்கப்படலம். நல்ல சிவப்புக் கொடி. 'மாணிக்கப் படலம்.' சிவப்புநிறமான கொடி. அந்தக் கொடியிலே இரண்டு பக்கங்களிலும் இரண்டு சின்னங்கள் வரையப்பட்டிருக்கின்றன. நடுவிலே 'வந்தேமாதரம்' என்ற பொன்மொழி பொறிக்கப்பட்டிருக்கிறது.

என்ன சின்னங்கள் அமைக்கப்பட்டிருந்தன?

இந்திரன் வஜ்ஜிரம் ஓர்பால்; எங்கள் துலுக்கர் இளம்பிறை ஓர்பால்.

- எங்களுடைய இஸ்லாமியர்களுக்குரிய இளம்பிறை அது அவர்களுக்குரியதல்ல; எங்களுக்கும் உரியதுதான். இந்த இந்திரன் வஜ்ஜிரம்; அது எங்களுக்கு உரியதல்ல அது அவர்களுக்கும் உரியதுதான். தேசியக்கொடியிலே இந்த இரண்டு சின்னங்களும் இருக்க வேண்டும் என்று 'இந்திரன் வஜ்ஜிரம் ஓர்பால் எங்கள் துருக்கர் இளம்பிறை ஓர்பால். மந்திரம் நடுவுறத் தோன்றும்' என்று பாடுகிறார். அது என்ன மந்திரம்? 'வந்தேமாதரம்'.

'மந்திரம் நடுவுறத் தோன்றும் அதன் மாண்பினை வகுத்திட வல்லவன் யானோ?' 'இந்த 'வந்தேமாதரம்' என்ற மந்திரத்தினுடைய சிறப்பை என்னால் சொல்ல முடியுமா?' என்று பேசுகிறார்.

அப்படியானால் இரண்டு பெரும் சமூகங்கள், அல்லது வெவ்வேறு பிரிவாக இருக்கக்கூடிய சமூகங்களான- சீக்கியர்களாக இருந்தாலும் சரி, சமணர்களாக இருந்தாலும் சரி, பௌத்தர்களாக இருந்தாலும் சரி அல்லது யூதர்களாக இருந்தாலும் சரி அத்தனைபேரும் ஒன்றுபட்டு இந்தியாவைக் காக்க வேண்டும் என்று அவர் கருதினார். பின்னாலே நம்முடைய தேசியக் கொடியை உருவாக்கிய அரசியல்வாதிகள் இந்தக்கருத்தை முதலிலே வைத்தார்கள். அதாவது, மேலே இருக்கக்கூடிய காவிநிறம் இந்துக்களுக்களுடையது. கீழே இருக்கக்கூடிய பச்சைநிறம் இஸ்லாத்தைக் குறிப்பிடக்கூடியது. நடுவே இருக்கிற வெள்ளை நிறம் மற்ற அனைத்து மதங்களையும் குறிப்பிடக்கூடியது என்றுதான் முதலிலே தேசியக்கொடியை உருவாக்கினார்கள். பின்னாலே இதுஒரு சச்சரவாக வந்துவிடக்கூடாது என்று கருதி அதற்குத் 'தியாகம்' என்றும் 'தூய்மை' என்றும் 'பசுமை' என்றும் பின்னாலே விளக்கம் கொடுத்தார்கள். முதலிலே அமைத்த விளக்கம் இதுதான்.



இந்த மூன்றும் அமைந்திருக்கக்கூடிய கொடியைப் பற்றிப் பஞ்சாபிலே இருக்கக்கூடிய சீக்கியரிடத்திலே ஒருவர் சொன்னார்; 'காவிநிறம் இந்துக்களைக் குறிக்கக்கூடியது. பச்சைநிறம் இசுலாமியரைக் குறிக்கக்கூடியது. நீங்களெல்லாம் போனால் போகட்டும் என்று வெள்ளைநிறத்தில் ஆயிரம் மதங்களோடு உங்கள் மதமும் இருக்கிறது. உங்களுடைய சீக்கிய மதத்திற்கு இடமே இல்லை' என்று சொன்னார். அந்த, தேசபக்திமிகுந்த பகத்சிங்கைத் தோற்றுவித்த, லாலாலஜபதிராயை உருவாக்கிய, ரத்தவெள்ளத்திலே,

அந்த அமிர்தசரஸிலே இருக்கக்கூடிய, அந்த மிகக்கொடிய கொலைகளெல்லாம் நிகழ்ந்த, பஞ்சாபிலே இருக்கக்கூடிய தேசபக்தனாகிய பஞ்சாபி சொன்னான்: 'ஏன் இல்லை; நாங்களும் இந்தக் கொடியில் இருக்கிறோம்.'

'எல்லோருடனும் ஒன்றாகத்தானே இருக்கிறீர்கள்?'

'இல்லை, அந்தக் கொடியைத் தாங்கி நிற்கக்கூடிய கம்பம் நாங்கள். உறுதிவாய்ந்த கம்பம் நாங்கள்' என்று அந்தச் சீக்கியன் சொன்னான்.

அந்தமாதிரியான பண்புகளை உருவாக்கக்கூடிய ஒரு சிந்தனைதான் நமக்குத் தேவை. அதனால்தான் பாரதியார் குழந்தைகளுக்குப் பாடிய ஆத்திசூடியிலே கூட அனைத்து மதங்களையும் பற்றிப் பேசினார்.

கருநிறங்கொண்டு பாற்கடல்மிசைக் கிடப்போன்
மகமது நபிக்கு மறையருள் புரிந்தோன்
ஏசுவின் தந்தை எனப்பல மதத்தினர்

வணங்கக்கூடிய தெய்வத்தை ஒரு பிரார்த்தனை கீதமாக அமைத்தார் பாரதியார். யாரையும் ஒதுக்காது, விலக்காது, புறக்கணிக்காது, அந்த main stream என்று சொல்லக்கூடிய அந்த ஓடையிலே கொண்டு வந்து சேர்க்க வேண்டும் என்பது பாரதியாருடைய சித்தாந்தம்.

அறிவிலே தெளிவு, நெஞ்சிலே உறுதி;
அகத்திலே அன்பினோர் வெள்ளம்;
பொறிகளின்மீது தனியர சாணை ;
பொழுதெலாம், நினது பேரருளின்
நெறியிலே நாட்டம்; கரும யோகத்தில்
நிலைத்திடல், என்றிவை அருளாய்!

என்று வேண்டிக் கொண்ட பாரதியார், 'குறிகுணம் ஏதும் இலதாய் உளதாய் குலவிடு தனிப்பரம் பொருளே' - குறிகுணம் ஏதும் இல்லாததாக, குறிகுணம் வேண்டும் என்று விரும்பினால் உள்ளதாக - 'குறிகுணம் ஏதும் இலதாய் உளதாய் குலவிடு தனிப்பரம்பொருளே' என்று சமய ஒருமைப்பாட்டை வலியுறுத்தினார். ஒரு சமூகம் உயர்ந்து உயர்ந்து வரவேண்டுமானால் அதன் பெண்ணடிமைத்தனத்திலே இருந்து மீண்ட சமூகமாக, பால் சமத்துவம் உள்ள சமூகமாக அமைந்திருக்க வேண்டும். சாதி முதலான வேறுபாடுகள் அற்ற சமூகமாக இருக்க வேண்டும். மூன்றாவதாக மதவேறுபாடுகளுக்கு இடையிலே இணக்கம் காண்கிற சமுதாயமாக இருக்க வேண்டும்.

அடுத்தது, பொருளாதார ஏற்றத்தாழ்வு; பொருளாதார ஏற்றத்தாழ்வு இருக்கிற சமூகத்திலேயே ஒற்றுமை இல்லையென்றால் உலகச்சமுதாயத்தை எப்படி உருவாக்க முடியும்? ஆகவே பொருளாதார ஏற்றத்தாழ்வு இருக்கின்ற அந்தச் சமூகத்தை ஒழிக்க வேண்டும் என்பதற்காக பாரதியார் சொன்னார்: 'நான் முடித்து விடுவேன்';

வயிரமுடைய நெஞ்சு வேணும்; அது
வாழும் முறைமையடி பாப்பா

என்று குழந்தைகளுக்குச் சொன்ன பாரதியார், 'என்னால் முடியும்' என்று சொன்னார்.

அதனால், 'வீணைசக்தி, பராசக்தி உன்னுடைய அருளை நம்பி உன்னிடத்திலே சில வரங்கள் கேட்கிறேன்.

நின்னைச் சிலவரங்கள் கேட்பேன். அவை
நேரே இன்றெனக்குத் தருவாய்

- 'நேரே' என்றால், 'அப்புறம் தருகிறேன்; நாளைக்குத் தருகிறேன்' என்று சொல்லாதே. 'நேரே இன்றெனக்குத் தருவாய்' என்று ஆரம்பித்து, 'என்னுடைய வாழ்க்கை என்பது வேடிக்கை மனிதர்களுடைய வாழ்க்கையைப்போல் நான் என்னுடைய வாழ்க்கையை அழித்துக் கொள்ள மாட்டேன்' என்று வரிசையாக இதையெல்லாம் சொல்லிக்கொண்டே வருகிற பாரதியார், கடைசியிலே சொல்லுகிறார்: 'நான் அற்புதங்கள் செய்கின்ற ஆற்றலை எனக்குக் கொடு! ஒரு மந்திரவாதி மாதிரி செயல்படுகிற ஆற்றலை எனக்குக் கொடு!

கல்லை வைரமணியாக்கல், செம்பைக்
கட்டித் தங்கமெனச் செய்தல்,

-கூழாங்கல்லை நான் தொட்டால் அது மாணிக்கக் கல்லாக மாறிவிட வேண்டும். செம்பை நான் தொட்டால் அது தங்கமாக மாறி விட வேண்டும். புல்லை நான் தொட்டால்,

-புல்லை நெல்லெனப் புரிதல்

புல்லை நான் தொட்டால் அது நெற்பயிராய் மாறிவிட வேண்டும். உலகம் முழுவதும் புல் இருக்கிறது. ஆகவே, எல்லாவற்றையும் நெல்வயலாக மாற்றிவிடுதல்; எனவே புல்லை நெல்லெனப் புரிதல்,

பன்றிப் போத்தைச் சிங்க ஏறாக்கல்

-பன்றியைச் சிங்கங்களாக மாற்ற வேண்டுமாம்! நம்மைப் பற்றி அவருக்கு என்ன அபிப்ராயம் இருக்கிறதென்று பாருங்கள்!

'இந்த மாதிரியான காரியங்களெல்லாம் செய்வதற்கு எனக்கு வலிமை கொடு! இவற்றையெல்லாம் செய்வதற்கு எனக்கு வலிமை கொடு!

வையத்தலைமை எனக்கு ஈவாய்!

என்று கேட்டார். 'உலகத்துத் தலைமைப் பொறுப்பை என் கையிலே கொடு. அதை நான் பார்த்துக்கொள்கிறேன். இந்த உலகம் உன்கையில் இருக்கிறபோது அது சரியில்லாமல் இருக்கிறது. என் கையிலே கொடு; நான் சரியாகச் சமைக்கிறேன்' என்று சொல்கிறபோது, 'ஏழைகளைத் தோழமை கொள்வான்; செல்வம் ஏறியார் தமைக்கண்டு சீறிவிழுவான்' என்று சொல்லுவார். இப்போது இவர் எந்தக் கட்சி என்பதைப் பேசுகிறார். அதுமட்டுமல்ல உலகத்தினுடைய மேன்மையான செய்கைகளெல்லாம் ஏழைகளுக்குப் போய்விட வேண்டும். சாதாரண மக்களுக்கு, உலகத்தினுடைய பெருமை மிக்கவை எல்லாம் எளியவர்களிடத்திலே பங்கிடப்பட வேண்டும் என்ற விருப்பத்தை அவர் தெரிவித்தார்.

அதனுடைய விளைவுதான், 'காக்கைச் சிறகினிலே' என்ற, நந்தலாலா பாட்டுக் கூட! 'காக்கைச் சிறகினிலே நந்தலாலா' என்று கண்ணனைப் பாடுகிறார். இதற்கு முன்னால் பாடியவர்களெல்லாம் எப்படிப் பாடியிருக்கிறார்கள் கண்ணனைப் பற்றி? நீலமேகம் போன்றவன், நீலக்கடல் போன்றவன் என்றெல்லாம் அழகுள்ள பொருட்களாக இருப்பதை அவருடைய நிறமாகச் சொல்லியிருக்கிறார்கள். இவர் என்ன பண்ணினார்? அருவெறுப்பான காட்சியளிக்கக் கூடிய- ஒருவரை அவமதிக்க வேண்டும் என்று சொன்னால் காக்காய் மாதிரி இருக்கிறான் என்பார்கள். அப்படி இகழ்ச்சியாகச் சொல்லக்கூடிய காக்கைக்கும் ஒரு பெருமையைக் கொடுக்கிறார். கண்ணன் நிறமே காக்கை நிறம்தானப்பா!

காக்கைச் சிறகினிலே நந்தலாலா நின்றன்
கரியநிறம் தோன்றுதையே நந்தலாலா

என்று பாடுகிறார். அதேமாதிரி மந்திரங்களில்தான் தெய்வம் இருக்கிறது என்பது இல்லை.

கேட்கும் ஒலியிலெல்லாம் நந்தலாலா நின்றன்
கீதம் இசைக்குதடா நந்தலாலா

- அவர் ஒரு கட்டுரையே எழுதியிருக்கிறார். அந்தக் கட்டுரையிலே வீதியில் கேட்கிற ஒலிகளை எல்லாம் வரிசைப்படுத்துகிறார். என்னென்னவோ ஓசைகள் கேட்கின்றன, அதைக் கவிதையிலேயும் எழுதியிருக்கிறார்.

மண்ணுலகத்துநல் ஓசைகள் காற்றெனும் வானவன் கொண்டு வந்தான்
பண்ணிலிசைத்த ஒலிகள் அனைத்தையும் பாடி மகிழ்ந்திடுவோம்

என்று ஒரு பாட்டு. என்னென்ன ஒலிகள் வருகின்றன என்பதைச் சொல்லுகிற பொழுது அந்த ஒலிகளினுடைய வரிசையிலே சமூகத்தின் குறுக்கு வெட்டையே காற்றின்மூலம் காட்டி விடுகின்றார். ஒவ்வொன்றையும் சொல்லிக்கொண்டு வருகிறவர், காற்று பல செய்திகளைக் கொண்டு வருகிறது.

நண்ணி வருமணியோசையும்-பின்னங்கு நாய்கள் குலைப்பதுவும்
எண்ணுமுன்னே அன்னக்காவடிப் பிச்சையென்று ஏங்கிடுவான் குரலும்

காற்றிலே வருகின்றது. அந்தச் செய்தியிலே, வீதிக்கதவை அடைக்கின்ற ஓசை கேட்கிறது. அதற்கு முன்னாலே அன்னக்காவடிப் பிச்சை என்று ஏங்கிடுவோன் குரல் கேட்கிறது. சமூகத்தினுடைய பண்பாட்டை அதில் சொல்கிறார்.

வீதிக் கதவை அடைப்பதும் கீழ்த்திசை விம்மிடும் சங்கொலியும்

- இதற்கு இருபொருள் சொல்லலாம். ஒன்று, எல்லாவற்றையும் பார்த்துக்கொண்டு இறைவன் இருக்கிறான் என்று அந்தக் கோயிலிலே இருந்து வருகிற சங்கொலி; இன்னொன்று அந்தத் திருவல்லிக்கேணியின் வழியாகத்தான் இறுதி ஊர்வலங்கள் போய்க்கொண்டு இருக்கும். ஆகவே, அந்தச் சங்கொலி என்றும் கொள்ளலாம். வாழ்க்கையினுடைய முடிவும் தொடக்கமும்; இவையெல்லாம் பற்றிக் கவலைப்படாமல் மழலை அழும் குரல், அப்போது பிறந்த குழந்தை ஒன்று அழுகிறது. இறுதி ஊர்வலம் போகிற சங்கினுடைய ஒலி. இதையெல்லாம் பற்றிச் சொல்லி,

..மதலையழுங்குரலும்,
ஏதெது கொண்டு வருகுது காற்று எண்ணில் அகப்படுமோ ?

என்று அந்தக் காற்று கொண்டு வருகிற செய்திகளையெல்லாம் அவர் பேசுவார். அதுமாதிரி இந்தக் காக்கைச்சிறகினிலே என்ற பாடலிலேயும், தெய்வத்தை வருணிக்கின்ற அந்த நேரத்தில்,

கேட்கும் ஒலியினெல்லாம் நந்தலாலா நின்றன்
கீதம் இசைக்குதடா நந்தலாலா

-அதற்குப் பிறகு ஒரு Extreme- எல்லை கடந்த நிலைக்குப் போகிறார்,

தீக்குள் விரலை வைத்தால் நந்தலாலா நின்னைத்
தீண்டும் இன்பம் தோன்றுதடா நந்தலாலா.

கண்ணன் எப்படியிருக்கிறான்? என்று கேட்டால், 'ஒரு கொள்ளிக்கட்டையைக் கையிலே பிடித்தது மாதிரி இருக்கிறான்' என்று சொல்வது போல அவர் பேசுகிறார். ஆனால் அவர் சொல்லுவதினுடைய கருத்து என்ன? இன்பங்களில் மட்டும் அல்ல, துன்பங்களிலும் இறைவன் இருக்கிறான்.

தீக்குள் விரலை வைத்தால் நந்தலாலா நின்னைத்
தீண்டும் இன்பம் தோன்றுதடா நந்தலாலா

என்று பேசினார். அந்தக் கடவுளைப் பற்றிய பாடலிலேயும் கூட உலகத்திலே ஒதுக்கப்பட வேண்டிய, புறந்தள்ளப்பட வேண்டிய, மிக இழிவாகக் கருதப்பட வேண்டிய எதுவும் இல்லை; மண்ணாங்கட்டி முதற்கொண்டு அனைத்தும் மதிப்பிற்குரியவை; உலகத்தில் இருக்கக்கூடிய அனைத்துச் செடிகொடிகளும் வணங்கத்தகுந்தவை.

அதைத்தான் ஆரோவில் நமக்குச் சித்திரித்துக் காட்டிக்கொண்டிருக்கிறது. ஒருலகம் என்ற சித்தாந்தத்தினுடைய ஒரு சின்னப்பதிப்பாக விளங்கக்கூடியது ஆரோவில். இந்த ஆரோவில்லிலே நடைபெறுகிற பரிசோதனைகளே நாளைய உலகம் எவ்வாறு அமைய வேண்டும் என்பதன் ஒரு பரிசோதனையாக அமைந்திருக்கிறது. இந்த வகையில் பொருளாதார சமத்துவம் ஏற்பட வேண்டும் என்பதையும் வலியுறுத்தினார். அதன் எல்லை கடந்த நிலைதான்,

இனியொரு விதிசெய்வோம். அதை எந்த நாளும் காப்போம்.
தனியொருவனுக்கு உணவில்லை எனில் ஜெகத்தினை அழித்திடுவோம்!

இது தமிழ் மரபு. புறநானூற்றுபாடல் ஆசிரியன் ஒருவன் சொன்னான். 'இந்த வீதியிலே போனால் இழவு இசைக்கருவிகள் ஒலிக்கின்றன. அந்த வீதியிலே போனால் திருமண வீட்டினுடைய இசைக்கருவிகள் ஒலிக்கின்றன. வாழ்க்கை எப்படியெல்லாம் எல்லைகளை உடையதாக இருக்கிறது? .ஒருபக்கம் அழுகையாக இருக்கிறது. ஒரு பக்கம் ஆனந்தமாக இருக்கிறது. எல்லோரும் ஆனந்தமாக இருந்தால் என்ன? கடவுளே எல்லோரும் ஆனந்தமாக இருந்தால் என்ன? என்று கேட்டுவிட்டு அந்தப் புலவன் சொன்னான்.

படைத்தோன் மன்றஅப் பண்பிலாளன்

என்று அந்தக் கவிஞனுக்குக் கோபம் வந்தது. அந்தக் கோபமும் அந்த ஆத்திரமும் மனித வாழ்க்கையில் பார்க்கிறபொழுது எந்தச்சிந்தனையாளனுக்கும் தோன்றும். அந்தச் சிந்தனையாளன் அப்படி நினைத்தான். அந்தச் சிந்தனையாளனுடைய அந்தக் கருத்தை எடுத்துக் கொண்டுதான் திருவள்ளுவர் பேசினார்:

இரந்தும் உயிர்வாழ்தல் வேண்டின் பரந்து
கெடுக இவ்வுலகுஇயற்றியான்

என்று எதிரொலித்தார். அந்தக் குரலைத்தான் பாரதியார் எதிரொலித்தார்.

இனியொரு விதிசெய்வோம் அதை எந்த நாளும் காப்போம்;
தனியொருவனுக்கு உணவில்லையெனில் ஜெகத்தினை அழித்திடுவோம்!

வறுமைக்கோடுகளை இந்த நாட்டிலே இருந்து எந்தத் தடையமும் இல்லாமல் அழிக்க வேண்டியது ஒரு சமூகத்தினுடைய உருவாக்கத்திற்கு இன்றியமையாதது. தேசிய ஒருமைப்பாடு. இதெல்லாம் ஏற்பட்டாலும். நமது ஊரிலே இருக்கிற வழக்கம் என்னவென்றால் காவிரித் தண்ணீரைக் கர்நாடகா தர மறுக்கிறது. அதேமாதிரி முல்லைப் பெரியாறு அணையிலே! 'முல்லைப் பெரியாறு அணையிலேயே இன்னொரு அணையைக் கட்டுவோம்; தண்ணீரே வரவிடமாட்டோம்' என்று ஆனந்தமாகச் சொல்லுகிறார், அச்சுதானந்தன்; 'அங்கிருந்து ஒரு சொட்டுத் தண்ணீர்கூடத் தரமாட்டோம்' என்று அவர்கள் சொல்லுகிறார்கள். ஆனால் நாம் எல்லாரும் சேர்ந்து இந்தியர்கள் என்று சொல்லிக் கொள்கிறோம். அதனால்தான் ஒரு கவிஞர் எழுதினார். 'பகத்சிங்கும், அதுமாதிரி இருக்கக்கூடிய பெரிய புரட்சியாளர்களும் இரத்தம் சிந்தி எழுதிய சுதந்திரத்தைத் தண்ணீரில் தொட்டு நாம் அழித்து விடுவோமோ?' என்று எழுதுகிறார். அப்படித்தான் இருக்கிறது. நம்முடைய சமூகத்தின் சூழ்நிலை அப்படி இருப்பதைத்தான் நாம் பார்க்கிறோம். மொழியால் பிளவு, நாட்டின் மாநிலங்களினுடைய எல்லைகளால் பிரிவு என்றெல்லாம் அமைந்திருப்பதைப் பார்க்கிறோம். இதற்கும் பாரதியார் ஒரு விடை கண்டார்.

பாரதியாருடைய தேசியப் பாடல்களை உண்மையிலேயே நமது நாட்டினுடைய தேசிய கீதமாக அமைத்திருக்க வேண்டும். வேறு பாடல் இருக்கிறது. ஆனால் பாரதியார் பாடல்கள் தேசியப்பாடல்களாக மதிக்கப்படவேண்டிய, போற்றப்படவேண்டிய தகுதி உடையவை. தேசிய ஒருமைப்பாடு என்பது அதற்குள்ளே பொதிந்திருப்பதைப் பார்க்கிறோம். **தாயின் மணிக்கொடி பாரீர்!** என்கிற பாடலில், **கம்பத்தின் கீழ் நிற்றல் காணீர்!** என்று அந்த வீரர்களைப் பற்றிச் சொல்லி, **காணரும் வீரர் பெருந்திருக்கூட்டம்.** காண்பதற்கரிய ஒரு காட்சி அந்தக் கொடியின் கீழ் அணிவகுத்துநிற்கிறது.

**நம்பற்குரியர் அவ்வீரர் தங்கள்**
**நல்லுயிர் ஈந்தும் கொடியினைக் காப்பர்**

- திருப்பூர்க் குமரனைப் போல! அப்படி நிற்கிறவர்களில், பலவகையானவர்கள் நின்று கொண்டிருக்கிறார்கள், அங்கே! இப்படிச் பேசும்போது மாநிலங்களுக்கிடையே உள்ள ஒற்றுமையைச் சித்திரித்துக் காட்டுவதைப் பார்க்கிறோம்.

**செந்தமிழ் நாட்டுப் பொருநர்- கொடுந்**
**தீக்கண் மறவர்கள், சேரன்றன் வீரர்**

-தமிழர்கள் இருக்கிறார்கள்; தெலுங்கர்கள் இருக்கிறார்கள்; கன்னடர்கள் இருக்கிறார்கள்.

**கன்னடர், ஒட்டியரோடு போரில்**
**காலனும் அஞ்சக் கலக்கும் மராட்டர்**

- சிவாஜி பிறந்த மண்ணினுடைய மராட்டியர்கள் இருக்கிறார்கள்.

**பொன்னகர்த் தேவர்கள் ஒப்ப-நிற்கும்**
**பொற்புடையார் இந்துஸ்தானத்து மல்லர்**
**பூதலம் முற்றிடும் வரையிலும்- அறப்**
**போர்விறல் யாவும் மறப்புறும் அவரையும்**
**மாதர்கள் கற்புள்ள வரையும் - பாரில்**
**மறைவரும் கீர்த்திகொள் ரஜபுத்ரவீரர்**

இவர்கள் இருக்கிற காலம் வரை இவருடைய புகழும் இருக்கும். ரஜபுத்திர வீரர்கள் என்று சொல்லவருகிற நேரத்தில் மாதர்கள் கற்புள்ளவரையிலும் என்று ஏன் சொல்கிறார்? ரஜபுத்திரவீரர்கள் படைநடத்திவருகிறபோது, (பகைவர்களிடமிருந்து தப்பிக்க) ரஜபுத்திரப் பெண்கள் கிணற்றில் விழுந்து (தங்கள் கற்பைக் காப்பாற்றிக் கொள்வதற்காக) இறந்து போனார்கள். அதனால்தான், மாதர்கள் கற்புள்ள வரையில் இவர்களுடைய புகழ் இருக்கும் என்று பாடுகிறார்.

**பஞ்சரதத்துப் பிறந்தோர் -முன்னைப்**
**பார்த்தன் முதற்பலர் வாழ்ந்தநன்னாட்டார்**

பல பெரியவர்கள் வாழ்ந்த பஞ்சாப் என்று சொன்னால், அவருக்கு எப்போதும், அர்ச்சுனனும் பீமனும் ஞாபகத்துக்கு வருவார்கள். புராணமரபின்படி. இப்படிப்பட்டவர்களையெல்லாம் சொல்லி இவர்கள் எல்லாம் சேர்ந்து காக்கிற கொடி என்று தாயின் மணிக்கொடியைப் பேசுகிற நேரத்திலே தேசிய ஒருமைப்பாட்டினுடைய சித்திரம் நம்முடைய மனதிலே உருவாவதைப் பார்க்கிறோம். எனவே,

இப்படி வீட்டிலிருந்து தொடங்கி, நாட்டினுடைய ஒருமைப்பாட்டிற்கு வந்து, அதற்குப் பிறகு உலகத்தை நோக்கிச் செல்லுகின்றார் பாரதியார்.

அப்படிச் செல்கின்ற நேரத்திலே தனக்கு அந்த ஆற்றல்கள் வேண்டுமென்பதற்காக, மண் பயனுற வேண்டும்- வானகம் இங்கு தென்படல் வேண்டும் என்கின்றார். அரவிந்தருடைய சித்தாந்தமும் இதுதான்.

மண் பயனுற வேண்டும்
வானகம் இங்கு தென்பட வேண்டும்.
உன்னைக் கோடிமுறை தொழுதேன்
வையத் தலைமை எனக்கு அருளாய்!

என்று, உலகத்தினுடைய தலைமை தனக்கு வேண்டும் என்று கேட்பது எதற்கு?

காணி நிலம் வேண்டும் - பராசக்தி
காணி நிலம் வேண்டும் - அங்குத்
தூணில் அழகியதாய் நன்மாடங்கள்
துய்ய நிறத்தினதாய் - அந்தக்
காணி நிலத்தினிடையே ஓர்மாளிகை
கட்டித் தரவேண்டும்- அங்குக்
கேணியருகினிலே தென்னைமரக்
கீற்றும் இளநீரும்
பத்துப் பனிரெண்டு தென்னை மரம்
பக்கத்திலே வேணும் - நல்ல
முத்துச் சுடர்போலே நிலாவொளியும்
முன்பு வரவேணும் - அங்குக்
கத்துங் குயிலோசை சற்றேவந்து
காதிற்பட வேண்டும் - என்றன்
சித்தம் மகிழ்ந்திடவே - நன்றாய்இளந்
தென்றல் வரவேணும்.
பாட்டுக் கலந்திடவே அங்கேயொரு
பத்தினிப் பெண்வேணும் -எங்கள்
கூட்டுக் களியினிலே கவிதைகள்
கொண்டு தரவேணும் - அந்தக்
காட்டு வெளியினிலே நின்றன்
காவலுற வேணும்! எதற்காக?
என்றன் பாட்டுத் திறத்தாலே இவ்வையத்தைப்
பாலித்திட வேணும்.

'உலகத்தைக் காக்கிற தொழில் உனக்கு வேண்டாம். அதை நான் பார்த்துக் கொள்கிறேன். எங்களைக் காக்கிற தொழிலை நீ செய்து கொண்டிரு' என்று காணிநிலம் என்ற பாட்டிலே பாரதியார் பேசுகிற ஓர் அருமையைப் பார்க்கிறோம்.

இங்கே, பாரதி விழா மூன்று நாட்களாக நடைபெறுகிறது. நேற்று ஒன்பது சிறு குழந்தைகள் வீணை வாசித்தார்கள். வீணைதான் தெரிந்தது. அந்தக் குழந்தைகள் வீணைக்கடியிலே இருந்தார்கள். வீணைக்கருகில் இருக்கிற சின்ன வீணைகள் அவர்கள் எல்லாம். அப்போது எனக்குத் தோன்றியது-

வெள்ளைத் தாமரைப் பூவில் இருப்பாள்
வீணை செய்யும் ஒலியில் இருப்பாள்

என்று சொன்ன மகாகவியினுடைய கனவை கவிஞர் மீனாட்சி அவர்களும், மற்றவர்களும் எப்படி உருவாக்கிக் கொண்டிருக்கிறார்கள் என்பதைப் பார்த்தேன். அப்படித்தான் பாரதியார் சொன்னார்.

"நல்லதோர் வீணை செய்தே அதை நலங்கெடப் புழுதியில் எறிவதுண்டோ ?
சொல்லடி சிவசக்தி என்னைச் சுடர்மிகும் அறிவுடன் படைத்து விட்டாய்" -

நீ ஒரு தப்புப் பண்ணி விட்டாய். என்னை மிகவும் அறிவாளியாகப் படைத்து விட்டாய்.

"சுடர்மிகும் அறிவுடன் படைத்து விட்டாய்.

வல்லமை தாராயோ ?" எதற்கு?
"மாநிலம் பயனுற வாழ்வதற்கே!"

- 'உலகம் செழிக்க, ஊர் செழிக்க, மக்களெல்லாம் இன்புற்று வாழ, அன்புற்று வாழ அந்த வலிமையை எனக்குக் கொடு' என்று.

போரில்லா உலகம் இருக்கவேண்டும் என்ற ஒரு கனவை அவர் கண்டார். முதல் உலகப்போர் அவர் காலத்தில் நடந்தது. அப்பொழுது பத்திரிகையிலே சின்னச்சின்னக் குறிப்புகளாக அந்தக் காட்சிகளை எல்லாம் எழுதினார்.

அப்பொழுது அதில் சொல்லுகிறார், 'ஐரோப்பாவிலே மக்கள் ஒருவரையொருவர் கொன்று அழித்துக் கொள்வது எனக்குச் சம்மதமன்று. உங்களுக்குத் தெரியும் நான் சுயராஜ்ஜியத்தை விரும்புகிறவன். வெள்ளைக்காரர்களை எதிர்த்துப் போராடுகிறவன் என்று. எனக்குத் தெரியும். அங்கே மடிகிறவர்கள் வெள்ளைக்காரர்கள் என்பதும் எனக்குத் தெரியும். ஆனால் உயிர்கள் ஒன்றையொன்று மக்கள் ஒருவரையொருவர் கொன்று கொண்டு இறந்து போவது எனக்குச் சம்மதமன்று' இப்படி, பாரதியார், உயிர்க்கருணையினுடைய ஊற்றாக இருந்து, போருக்கு எதிரான குரலைக் கொடுக்கிறார். அதையே குழந்தைகளுக்கும் எடுத்துச் சொல்கிறார். உடன்பிறந்தார்களைப் போலே உலகில் மனிதர் எல்லோரும். சகோதரத்துவம், பிரெஞ்சுக் கொள்கை இருக்கிறதே அந்தக் கருத்தைச் சொல்கிறார்.

"உடன்பிறந்தார்களைப் போலே இந்த
உலகில் மனிதர் எல்லாரும்
இடம் பெரிதுண்டு வையத்தில் - இதில்
ஏதுக்குச் சண்டைகள் செய்வீர் ?"

எதற்காகப் போரிட்டு மாய்கிறீர்கள்?

"பாருக்குள்ளே சமத்தன்மை தொடர்பற்றும்
சகோதரத்தன்மை"-

- யோசித்துப் பாருங்கள். சின்னக் குழந்தைக்கு எவ்வளவு பெரிய விஷயத்தைச் சொல்லுகிறார். - அவன் ஜெர்மானியன், அவன் பிரெஞ்சுக்காரன், அவன் இங்கிலாந்தைச் சேர்ந்தவன் என்ற வேறுபாடுகள் இருக்கலாம். தொடர்பற்றும் சகோதரத்தன்மை;



யாருக்கும் தீமை செய்யாது புவி
எங்கும் விடுதலை செய்யும்;

புவியை, உலகை, விடுதலை செய்யும் தத்துவத்தைக் குழந்தைகளுக்குப் போதிக்கிறார். அதனுடைய உச்சிதான் மணக்குள விநாயகரைப் பற்றி அவர் பாடிய பாடல்;

"பேசாப் பொருளைப் பேசநான் துணிந்தேன்
கேட்கா வரத்தைக் கேட்கநான் துணிந்தேன்"

என்று ஆரம்பித்து இந்த உலகத்தில் இருக்கிற அனைத்து உயிர்களும்,

"மண்மீதுள்ள மக்கள்பறவைகள்
விலங்குகள் பூச்சிகள் புற்பூண்டு மரங்கள்
யாவுமென் வினையால் இடும்பை தீர்ந்தே
இன்பமுற்று அன்புடன் இணங்கி வாழ்ந்திடவே
செய்தல் வேண்டும் தேவ தேவா
ஞான ஆகாசத்து நடுவே நின்றுநான்
பூமண்டலத்தில் அன்பும் பொறையும்
விளங்குக துன்பமும் மிடிமையும் நோவும்
சாவும் நீங்கிச் சார்ந்தபல் லுயிரெலாம்
இன்புற்று வாழ்க என்பேன்"

- நீ என்ன செய்யவேண்டும்?

"-இதனைநீ
திருச்செவிக்கொண்டு திருவுளம் இரங்கி
அங்ஙனே ஆகுக என்பாய் ஐயனே!"

மணக்குள விநாயகருக்கு இவர் ஒரு Order (கட்டளை) செய்கிறார். பராசக்தியைப் பாடினாலும், மணக்குளவிநாயகரைப் பாடினாலும், அல்லது எந்தத் தெய்வத்தைப் பாடினாலும், காளமேகப்புலவர் பெருமாளிடம் 'உன்னிலுமே நான் அதிகம்' என்று பாடியதுபோல், 'அனைத்திலும் தான் அதிகம்' என்ற உணர்வோடு பாடுவதைப் பார்க்கிறோம். அந்த அடிப்படையில்தான், 'யாரும் பேசாத பொருளைப் பேசுகிறேன்; யாரும் கேட்காத வரத்தைக் கேட்கிறேன். அனைத்துயிர்களும், அன்புற்று வாழவேண்டும் என்பது என்னுடைய ஆசை. புல்லும் புழுவும் மனிதர்களும் ஒன்று பட்டு வாழவேண்டும் என்பது என்னுடைய ஆசை. அந்த ஆசையை உன்னிடத்தில் வரமாகக் கேட்கிறேன். அதனை நீ திருச்செவிக்கொண்டு 'அங்ஙனே ஆகுக' - நீ கேட்ட வரமெல்லாம் கொடுத்தேன் என்று சொல்லிவிடு' என்று அவருக்கு ஒரு வேண்டுகோளை வைக்கிறார்.

இந்த வேண்டுகோளினுடைய ஒரு வடிவம்தான் ஆரோவில். இங்கே சின்னஞ்சிறு செடிகளிலிருந்து, மலர்களிலிருந்து, - இங்கு வந்தாலே ஒரு ஆனந்தம், - பசுமையாகக் கொண்டாடிக் கொண்டிருக்கக்கூடிய ஒரு காட்சியைக் காணுகிறோம். உலகம் ஒன்று என்ற சித்தாந்தத்தை ஒரு சின்னச்சிமிழாக ஆரோவில் நமக்கு எடுத்துக்காட்டிக் கொண்டிருக்கிறது. இந்த ஆரோவில், பாரதியினுடைய கனவை, மகான் அரவிந்தருடைய கனவை, அன்னையினுடைய கனவை நிறைவேற்றிக் கொண்டிருக்கிறது. உலகமே ஓர் ஆரோவில்லாக மாறவேண்டும் என்ற நம்பிக்கையைத் தெரிவிக்கும் இந்த விழாவில் பங்கு கொண்டு பேசக்கூடிய வாய்ப்பைத் தந்த அனைவருக்கும் நன்றி.

கவிஞர் சிற்பிபாலசுப்பிரமணியம், கோவை மாவட்டம் ஆத்துப்பொள்ளாச்சி எனும் கிராமத்துக் கவிதை நதி. கோவை பாரதியார் பல்கலைக்கழகத் தமிழ்த்துறையின் முன்னாள் தலைவர்; சிறந்த கவிஞர்; தேர்ந்த தமிழ்ப் பேராசான்; நல்ல மொழிபெயர்ப்பாளர்; மொழிபெயர்ப்புக்காகவும், தமது கவிதை நூலுக்காகவும் இருமுறை சாகித்ய அகாடெமி விருதுபெற்றவர். ஆண்டுதோறும் தமது அறக்கட்டளையின் சார்பில், கவிஞர்களுக்குச் 'சிற்பி விருது' வழங்கிச் சிறப்பிக்கும் புரவலர். தற்போது சாகித்ய அகாடெமி-தமிழ்க்குழுவின் ஒருங்கிணைப்பாளரான இவர், பாரதிதாசன் முதலாப் பாரதியன்பர்களின் பாராட்டுகள் பெற்ற பாரதிநேயர்.



**ஆரோவில்லின் அனுபவங்கள்!**
**மகான் அரவிந்தரின் ஆன்மிக வெளிச்சம்!**
**அன்னையின் ஆன்மிக ஒளிவெள்ளம்!**
**அனைத்தையும் அனுபவித்து உணரமுடிந்தது.**

**சகோதரியார் திருமதி கவிஞர் மீனாட்சி அவர்கள், அரவிந்தரின் ஆன்மிக உலகத்திற்கு அழைத்து வந்ததிற்கு மிக்க மகிழ்ச்சி! நன்றி!**
**சகோதரியாரின் ஆன்மிக, இலக்கியப் பணிகள்**
**சிறப்புக்கும் பாராட்டுக்கும் உரியவை!**
**எல்லா வகையிலும் பணிகள் சிறக்க**
**நல்வாழ்த்துக்களுடன்**
**என்றும் வேண்டும் இன்ப அன்பு!**

**– தவத்திரு பொன்னம்பல அடிகளார்**

# உண்மையான ஆன்மிகம் இங்கே ஒளிர்கிறது!

### தவத்திரு குன்றக்குடி பொன்னம்பல அடிகளார்

இந்த இனிய வேளையில் பாரதியின் விழா. பாரதியின் பன்முகப் பரிணாமங்களைப் பார்த்துப் பழக்கப்பட்ட, பயின்ற நெஞ்சங்கள் இங்கு ஏராளம். அன்புணர்வினால், பாரதியாரையும் அரவிந்தரையும் ஆராதிக்கிற உள்ளங்கள் ஏராளம். இந்த நிலைப்பாட்டில்தான் இன்றையச் சமூகச்சிக்கல்களை, பாரதியாரின் கவிதைத்தடத்தில், அரவிந்தரின் ஆன்மிக வெளிச்சத்தில் உலகம் உற்றுநோக்கவேண்டும், என்ற கவலையோடுதான் மானுடம் சிந்தித்துக் கொண்டிருக்கிறது.

உலகம் போட்டிகள் நிறைந்தது. இந்த உலகத்திலும் நிறையப் போட்டிகள். அதிலும் எல்லோரும் வெற்றிபெறும் ஒரே போட்டி, மாறுவேடப்போட்டி. நித்தம் நித்தம் மனிதர்கள் பலமுகங்களில் மாறுவேடப் போட்டிகளில், பறவைகளாக, விலங்குகளாக, மாண்டவர்களாக, ஆண்டவர்களாக, ஏன், கடவுளர் வேடங்கூடப் போட்டுவிட்டோம். மனிதர் வேடம் எப்போது போட இருக்கிறோம்? வேடந்தரிக்காத மனிதரைப் பார்க்கும்போது மட்டுந்தான், மனிதர் வேடம் உண்மையாய்ப் போடமுடியும். இந்த நிலைப்பாட்டில்தான் ஆன்மிகம் எல்லாத் தளங்களிலும், ஆழமாய்ச் சிந்தித்துப் பார்க்கிறது. வெறுப்புள்ள இடத்தில் அன்பாய், மனக்காயமுள்ள இடத்தில் மனிதர்களுக்கு மன்னிப்பாய், சந்தேகம் உள்ள இடத்தில் உறுதியாய், ஏமாற்றம் உள்ள இடத்தில் நம்பிக்கையாய், இருள் உள்ள இடத்தில் ஒளியாய், கவலையுள்ள இடத்தில் மகிழ்ச்சியாய், மனிதத்தைப் புனிதப்படுத்தும் பணியில், தம்மையே அர்ப்பணித்துக்கொண்ட அரவிந்தரையும், அரவிந்தர் வழியில் நடந்த அன்னையின் அருளையும் சிந்தித்துப் போற்றவேண்டிய இந்த மண்ணிலேதான் நின்று கொண்டு, அந்தப் புனிதத்தையும், மனிதப்புனிதத்தையும் செதுக்குவதற்காய் ஆன்மிகத்தைத் தம் தடத்தில் ஒரு புதிய பாதையைக் காட்டிவிட்டுச் சென்றிருக்கிற அரவிந்தரின் ஆன்மிக வெளிச்சத்தை உள்வாங்கிக்கொண்டு, கவிதை வெளிச்சமாய் வெளிக்காட்டிய பாரதியைச் சிந்திக்கிற நேரமிது.

நம் அன்பிற்கும் பாராட்டுக்கும் உரிய கவிஞர் சிற்பி அவர்கள் பாரதியின் தோற்றத்தை, பிறப்பை அருமையாகச் சொன்னார்கள். உலகத்தின் எல்லா மூலையிலும் தமிழ் இருக்கிறது. ஆனால் தமிழனின் மூளையில் மட்டுமே தமிழ் இல்லை என்று வேதனையோடு சொன்னார்களே, அந்தத் தமிழ் தவமிருந்து பெற்ற குழந்தைதான் பாரதி. தமிழ்த்தவமாய்ப் பாரதி வந்தார். அந்தப்பாரதியின் தோற்றத்தைக் கவிஞர் சிற்பியின் கவிதை வரிகளில் சொன்னால்,

மதுரைக்கு நேர்கிழக்கே
மழைபேயாக் கானலிலே
காலம் கையேந்தி மடிப்பிச்சை கேட்டு நம்
மண்ணழுத காரணத்தால்,
பருவ மழையாய்ப் பந்தலிட்டு வந்தவன் பாரதி என்று சொன்னார்கள்.

உலகம் எதற்காக ஏங்கித் தவித்ததோ, அந்த ஏக்கத்தை நீக்குவதற்காகவே தோன்றிய காலைக் கதிரவனாய், கவிதைச் சூரியனாய் வந்தார் பாரதி. ஆன்மிகக் கதிரவனாய் வந்தார் அரவிந்தர்.

புதுச்சேரி மண்ணுக்கே இருக்கக்கூடிய தனிச்சிறப்பு, ஆரோவில் தன்னைப் பெருமைப்பட்டுக் கொள்கிறது. இங்கிருக்கக்கூடிய அயல்தேசத்து மனிதர்கள்கூட, அயலவர்கள் அல்லர், நம் நண்பர்கள்; உறவுகள்; பெருமைப்பட்டுக் கொள்கிறார்கள், ஆரோவில் தமிழ் மண்ணில் இருக்கிறதே என்று. ஆனால், நம்மவர்கள் அயலகத்தில் தமிழர்கள் என்று காட்டிக்கொள்வதில் வெட்கப்படுகிறார்கள். இந்த நிலைப்பாடு இருக்கிற மண்ணிலேதான்,

'யாதும் ஊரே யாவரும் கேளிர்' என்ற தமிழ் மந்திரத்தை, உலகத்திற்குத் தந்தது தமிழகம். இங்கேதான் நாம் சிந்தித்துப் பார்க்கவேண்டும். வெள்ளையர்களைச் சுருட்டிப்போடுகிற சுனாமிகளைத் தன் கையில் தஞ்சம் வைத்திருந்தது புதுவை மண். அதிலும் குறிப்பாக, விடுதலைப் புயல்கள் மையங்கொண்டிருந்தன, இந்தப் புதுச்சேரியிலேதான். விடுதலைப் புயல்களைப் பத்திரமாகப் பாதுகாத்த பெருமை, புதுச்சேரிக்கே உண்டு. எல்லாவிழிகளுக்கும், ஆன்மிக வெளிச்சத்தையும், விடுதலை வெளிச்சத்தையும், விழிக்கும் வெளிச்சவிழிகளாய் ஆக்கிக் காட்டியதுதான் புதுச்சேரியின் பாதை. இந்தப் பெருமையை எண்ணித்தான், இன்றைக்கு அற்புதமாய் இரு நூல்கள் வெளியிடப் பெற்றிருக்கின்றன.

ஒன்று, சொற்பொழிவாளர் பாரதியார். பெரும்பாலும் நாம் பார்த்துப் பார்த்துப் பழக்கப்பட்டது, பாரதியை, ஒரு கவிஞராய்! பெரும்பாலும் பார்த்துப் பார்த்துப் பழக்கப்பட்டது, பாரதி என்கிற கட்டுரையாளரை. ஆனால், பாரதி மகத்தான சொற்பொழிவாளர் என்று நம்முடைய சேதுபதி பட்டம் தந்திருக்கிறார்.

நினைத்துப் பார்க்கவேண்டும். இன்றைக்கு அரங்குகள் எப்படி இருக்கின்றன? _

ஒரு தலைவர் எல்லா மேடையிலும் நீண்ட நேரம் பேசினார். அவர் பேச்சைக்கேட்டு அலுத்துச் சலித்துப் போன ஒரு தொண்டன் சொன்னான், "எல்லா நேரமும் உங்கள் பேச்சைக் கேட்டு அலுத்துச் சலித்துப்போனோம். உங்களை நம்பி எந்தப்பிரயோசனமுமில்லை. "நாளையிலிருந்து நீங்கள் நினைத்தால் எங்களுக்கு ஒரு நன்மையைச் செய்யலாம்." "என்ன நன்மை?" என்று தலைவர் கோபமாய்க் கேட்டார். "நாளையிலிருந்து உங்கள் பேச்சை 5 நிமிடத்திற்குள் முடித்துக்கொண்டால், அதுவே நீங்கள் எங்களுக்குச் செய்கிற பெரிய நன்மை" என்றான். மறுநாளும் தலைவர் பேசினார். 5 நிமிடத்திற்குப் பதில் வழக்கம்போல், 50 நிமிடம் பேசிவிட்டார். மேடையை விட்டுத் தலைவர் இறங்கியவுடன் தொண்டன் கேட்டான்- 'நேற்றுத்தானே எங்களுக்கு வாக்குறுதி தந்தீர்கள். அதற்குள் காற்றில் பறக்க விட்டுவிட்டீர்களே' என்று. தலைவர் கோபமாய்த் தன்னுடைய உதவியாளரைத் திரும்பிப் பார்த்தார். 'இன்றைக்கு நம்முடைய உரையை 5 நிமிடம்தானே தயார்செய்யச் சொன்னேன். ஏன், 50 நிமிடத்திற்குத் தயாரித்தாய்?" உதவியாளர் தலைவரின் காதருகே இரகசியமாய்ச் சொன்னார். "இன்றைக்கு உங்கள் பேச்சை 5 நிமிடத்திற்குத்தான் தயாரித்திருந்தேன். மேடையில் பத்துப் பேர்கள் இருந்தார்கள். பத்துப் பேர்களுமே படிக்கட்டும் என்று 10 படிகள் எடுத்து வைத்திருந்தேன். அந்த 10 படிகளையும் நீங்கள் திரும்பத் திரும்பப் படித்துவிட்டீர்கள். அதனால்தான் 5 நிமிடப் பேச்சு, 50 நிமிடம் ஆகிவிட்டது" என்றார்.

இந்தச்சமூகத்தின் சூழலில்தான், என்னபேசுவது, எதைப்பேசுவது, எப்படிப்பேசுவது என்று சமூகத்தின் தலைவர்கள், எல்லாத் தளங்களின் தலைவர்களும், அச்சப்பட்டுக்கொண்டிருக்கிற சூழலில்தான், பாரதி போன்றோர் துணிந்து பேசினார்கள். ஏகாதிபத்தியத்திற்கு அஞ்சாது, 'நாமார்க்கும் குடியல்லோம்' என்று அப்பர்பெருமான் முழங்கியதைப்போலத் துணிந்து முழங்கினார்கள். எட்டயபுரத்தில் அந்த இளஞ்சூரியன் உதித்தது. அந்த இளஞ்சூரியனின் முழு வெப்பமும் எட்டயபுரத்துக்குள் அடைந்துவிட, முடிந்துவிட முடியாது. உலகமுழுமைக்கும் அந்த உதயஞாயிற்றின் ஒளிவெள்ளம் தேவை.

அந்த நிலைப்பாட்டில்தான், சமஸ்தானத்தின் நாற்காலிகளைத் தாங்கிப்பிடிக்கிற பலத்தோடு வாழ்ந்துவிட விரும்பவில்லை. இந்தியாவின் விடுதலையைத் தாங்கிப்பிடிக்கிற பலத்தோடு அந்தத் தோள்கள் வளர்ந்தன. அதனால்தான் அந்தத் தோள்களைத் தாங்கிப்பிடிப்பதற்கு, எந்தத் தோள்களும் இல்லாத சூழ்நிலை பாரதியின் கடைசிக் காலத்தில் பார்க்கமுடிந்தது. பாரதியாரின் இறுதி யாத்திரை, அது உண்மையாக இருந்தால், வெட்கப்படவேண்டும், வேதனைப்பட வேண்டும். லட்சம் வார்த்தைகளுக்குச் சொந்தக்காரர், பேசாமொழியாய் மௌனத்தைப் பேசிக்கொண்டு படுத்திருக்கிறார். தன் உள்ளங்கையில் உலகத்தை உருட்டிப்பார்த்தவர், அமைதியாய்ப் பாடையின் உள்ளங்கையில் படுத்துக்கிடக்கிறார். அவரது மரண யாத்திரையில் சுமந்து செல்பவர்கள் எத்தனை பேர்? விரல்விட்டு எண்ணத்தக்க அளவில் குறைந்துபோய் இருக்கிறார்கள்.

இந்த நிலைப்பாட்டில்தான் சமூகச்சிக்கல்கள் தொடர்ந்து கொண்டிருக்கின்றன. இன்னமும் நாம் நம்மை மேம்படுத்துகிற மனிதத்தின் நிலையை மேம்படுத்துகிற திசை நோக்கி, மனிதர்களை மதிக்கிற திசைநோக்கிப் பயணிக்க மறுக்கின்றோம். ஏன், பதவி நாற்காலிகளைத் தாங்கிப் பிடிப்பதற்கே நம்முடைய தோள்கள், பல்லக்குகளைச் சுமப்பதற்கே நம்முடைய தோள்கள் பழக்கப்பட்டுவிட்டன. மனித குலத்தை மேம்படுத்துவதற்குப் பாரதியின் கவிதை வெளிச்சத்தில் ஆழமாய்ச் சிந்திக்க வேண்டியவர்களாய் இருக்கின்றோம். இன்றைக்கு எப்பொழுதும் ஒரு குறைபாடு, நம்முடைய கண்களுக்கு நம்முடைய குறைபாடுகள் தெரியாத குறைபாடு. அடுத்தவர்கள் குறைகளை, அடுத்தவர்களின் கறைகளை, குற்றங்களை நம்விழிகள் முப்பரிமாணத்தோடு படம்பிடித்துக் காட்டுகின்றன.

நண்பர்களாய்ப் பழகியவர்கள், இரண்டுபேர். நண்பரின்மீதே வழக்குப் போட்டார், நண்பர். எதற்காக?

நண்பரில் ஒருவர் ரொட்டி வணிகம் செய்கிறார். இன்னொருவர் வெண்ணெய் வியாபாரம் செய்கிறார். வெண்ணெய்க் கடைக்காரர் மீது ரொட்டிக் கடைக்காரர் வழக்குப் போட்டார். "நான் தினந்தோறும் இவரது கடையில் அரைக் கிலோ வெண்ணெய் வாங்குகிறேன். அந்த அரைக்கிலோ வெண்ணெயில் சரியாக 50 கிராம் குறைத்துத் தருகிறார்" என்று வழக்குப் போட்டவர் ரொட்டிக்கடைக்காரர். நீதிமன்றத்தில் வழக்கு விசாரணைக்கு வந்தது. வெண்ணெய்க் கடைக்காரரை நீதிபதி கோபமாய்க் கேட்டார். "தினந்தோறும் எப்படிக் குறைத்துத் தரலாம்?" என்று கேட்டார். வெண்ணெய்க் கடைக்காரர் சொன்னார்- "ஐயா, நான் படிக்காதவன். எனது கடையில் அரைக்கிலோ வெண்ணெயை நிறுத்துத் தருவதற்கு எந்த எடைக்கல்லையும் வைத்துக்கொள்ளவில்லை. நான் தினந்தோறும் அரைக்கிலோ வெண்ணெயை விற்றுத் தருவதற்கென்று அரைக்கிலோ ரொட்டித்துண்டைத்தான் பயன்படுத்துகின்றேன். இந்த ரொட்டித்துண்டில் அரைக்கிலோ எனப் போடப்பட்டிருக்கிறது. இப்போது நீங்கள் நிறுத்துப்பாருங்கள். இந்த அரைக்கிலோ என்று போடப்பட்ட ரொட்டித்துண்டுக்கும், என்னுடைய அரைக்கிலோ வெண்ணெய்க்கும் எடை சமமாக இருக்கும். இந்த அரைக்கிலோ ரொட்டித்துண்டை இவர் கடையில்தான் வாங்குகிறேன் ஐயா!" என்றார். தாம் தினந்தோறும் 50 கிராம் ரொட்டித்துண்டைக் குறைவாகக் கொடுத்துவிட்டு, வெண்ணெய்க்காரர் மீது வழக்குப்போடுவது போலவே நமது சமுதாயம் நடந்துகொண்டிருக்கிறது.

நம்முடைய அபிலாசைகள், ஏக்கங்கள், பேராசைகள் இவைகளே நம்மைச் சுற்றிச் சுற்றிச் சுழன்றடித்துக் கொண்டிருக்கின்றன. இந்த நிலைப்பாட்டில்தான் உண்மையான மனிதத்தை மேம்படுத்துகிற திசையில் பாரதி பயணம் செய்தார்.

இன்று அருமையாகச் சொன்னார்கள், கவிஞர் சிற்பி அவர்கள். பாரதி செல்வத்திற்கு அடிமையாக வில்லை. செல்வாக்கிற்கும் விலைபோகவில்லை. வறுமை அவரைக் கூறுபோட்டது. அவர் மனைவியோடு வாழ்ந்ததைவிட, அவர் வறுமையில் வாழ்ந்ததுதான் அதிகம். வறுமையிலும் வள்ளலாக வாழ்கிறார். தனக்கென ஏதும் இல்லாது வாழும் வாழ்க்கைதான் வள்ளல்தன்மை வாழ்க்கை. அந்த வாழ்க்கைதான், அவர் குருதியோடு, ஊனோடு, உயிரோடு, கலந்திருந்தது.

அந்தப் பாரதி செட்டிநாட்டுக்கு வந்தார். செட்டிநாட்டுச் செல்வர்கள் அவனது கவிதையில் நனைந்துபோய், பாராட்டி அவருக்கு முழு நூறுரூபாய் நோட்டாகத் தந்தார்கள். அடிமை தேசத்தில் சற்றே சிரித்துவிட்டு, 'சாகா வரம்பெற்ற என் கவிதைக்கு இந்தக் காகிதம்தான் பரிசா? என்று சுக்கல் சுக்கலாகக் கிழித்துப்போட்டுவிட்டார். பாரதி செல்வத்துக்கு அடிமையாகவில்லை. செல்வாக்குக்கு அடிமையாகி விடவில்லை.

சென்னைக்கு, காந்தி வருகிறார். தடைகளைத் தாண்டிச் சந்தித்த பாரதி, அவரிடம் கேட்கிறார். "இன்று மாலை திருவல்லிக்கேணிக் கடற்கரையில் ஒரு பொதுக்கூட்டம். அதற்கு நீங்கள் தலைமை தாங்கவேண்டும்." காந்தியடிகள் உதவியாளரை அழைத்து நாட்குறிப்பைப் பார்க்கச் சொல்கிறார்.

உதவியாளர், "இன்று வைத்துக்கொள்ள முடியாது. நாளை வைத்துக்கொள்ளலாமா?" என்றபோது, பாரதி சொல்கிறார்- "சாரி மிஸ்டர் காந்தி, அந்தப் பொதுக்கூட்டம் இன்றே நடைபெறும். நானே அதற்குத் தலைமை தாங்குகிறேன். நீங்கள் தொடங்கிய இயக்கத்தை நான் ஆசீர்வதிக்கிறேன்!" என்று சொல்லிவிட்டு, சிங்கநடையிட்டு வெளியே வந்தார். அதிர்ந்துபோய், மகாத்மா காந்தி கேட்கிறார்- "யார் இவர்?" என்று. அருகே இருப்பவர் சொன்னார், "இவர்தான் எங்கள் தேசியக் கவி" என்று. இவர் பாதுகாக்கப்பட வேண்டியவர். பத்திரப்படுத்திவையுங்கள்!" நாமோ பாரதியையும் பாதுகாக்கத் தவறிப்போனோம். காந்தியடிகளையும் பாதுகாக்கத் தவறிப்போனோம்.

இந்தச் சமூகத்தில்தான் பாரதியின் கவிதை வெளிச்சம், அரவிந்தரின் ஆன்மிகவெளிச்சத்தை உள்வாங்கிக் கொண்டுதான் சமூகத்திற்கு அடையாளம் காட்டியது. பாரதி சடங்குகளைத் தூரயெறிந்தார். அதனால்தான்தான் சார்ந்திருந்த சமூகத்தின்மீதுகூடக் கோபம் கொண்டு சபிக்கிறார். ஆன்மிகம் என்றால் நம்மில் பலருக்கு அச்சம். மனைவி மக்களை மறந்து உறவுகளைத் துறந்து, சுற்றத்தை இழந்து வாழ்வதுதான் ஆன்மிகம் என்று பலரும் நம்பிக்கொண்டிருக்கிறார்கள். அதன்விளைவுதான், ஆன்மிகமென்றால் அஞ்சித் தூரமாய் விலகிப்போகிற மக்கள், எது உண்மையான ஆன்மிகத்தடம்? அரவிந்தர் காட்டினாரே, 'நீயும் வாழவேண்டும். உலகமும் வாழவேண்டும். மழை பொழிவதுபோல மக்களுக்குப் பயன்படுவதுதான் ஆன்மிகத்தின் ஒளி. உதயஞாயிற்றின் ஒளியைப்போல, எல்லாவுயிர்க்குலமும் வாழ வழிகாட்டுவதுதான் உண்மையான ஆன்மிக ஒளி."

சுவாமி விவேகாநந்தர், துறவறத்திற்குச் செல்வதற்குமுன்பு தன் தாயிடம் அனுமதி கேட்கிறார். "அம்மா நான் துறவியாக வேண்டும்". அம்மா சொல்கிறார்- "மகனே போய்க் கத்தியை எடுத்துவா" என்று. இவரும் கத்தியை எடுத்து வருவார். இவர் கத்தியை எடுத்துவருவதை அவர் அம்மா கூர்ந்து கவனிப்பார். "மகனே, பிறகு பார்க்கலாம்" என்று சொல்லிவிடுவார். இப்படிப் பலதடவைகள். கடைசியாய் ஒரு கட்டத்தில் அவருடைய தாயார் "மகனே நீ துறவியாகிவிடலாம்" என்று அனுமதி தந்துவிடுகிறார். அப்போது விவேகாநந்தப் பெருமான் தன் தாயாரிடம் கேட்கிறார்- "அம்மா நான் துறவியாகவேண்டும் என்று கேட்கிறபோதெல்லாம், நீங்கள் கத்தியை எடுத்துவரச் சொல்வீர்களே, பிறகு பார்க்கலாம் என்று சொல்வீர்களே, இப்படியாகச் சொல்லிக் கடைசியாக அனுமதி தந்தீர்களே, இந்தக் கத்திக்கும் நான் துறவியாவதற்கும் என்னம்மா சம்பந்தம்?" என்று கேட்டார். தாயார் விளக்கம் தந்தார். "மகனே, நீ கத்தியை எடுத்துவா என்று தொடக்கக்காலத்தில் சொன்னபோது எடுத்து வந்தாய். அப்போதெல்லாம் கத்தியின் ஆபத்தான கூர்மையான பகுதி என்னை நோக்கியும், கத்தியின் பாதுகாப்பான கைப்பிடிப்பகுதி உன்னைநோக்கியும் இருக்குமாறு எடுத்துக்கொண்டுவந்தாய். இப்படித்தான் பலமுறைகள் எடுத்துவந்தாய். கடைசியாய்ச் சிலமுறைகள்தான் கத்தியின் ஆபத்தான கூர்மைப்பகுதி உன்னைநோக்கியும், பாதுகாப்பான கைப்பிடி உள்ள பகுதி என்னை நோக்கியும் இருக்கும்படி எடுத்துவந்தாய். மகனே துறவறம் என்பது ஆபத்தைத் தனக்கும் பாதுகாப்பைப் பிறருக்கும் வழங்குவது. அந்த வாழ்க்கைக்கு நீ பக்குவப்பட்டுவிட்டாய். பழக்கப்பட்டுவிட்டாய் என்பதால்தான் நான் உன்னைத் துறவறத்திற்கு அனுமதித்தேன்" என்றார். இதைத்தானே நமது தமிழ்வேதம் சொன்னது,

துறந்தார்ப் பெருமை துணைக்கூறின் வையத்து
இறந்தாரை எண்ணிக் கொண்டற்று என்று.

நீ எப்படி இருக்க விரும்புகிறாய்? எந்த நிலைப்பாட்டில் இருக்க விரும்புகிறாய்? துறவியாக இருக்க விரும்புகிறாயா? இருந்துகொள். ஆனால் துறந்துவாழ். இல்லறத்தாராக இருக்கவிரும்புகிறாயா? இருந்துகொள். எப்படி வாழவேண்டும்? இளையான்குடி மாறநாயனாரைப்போல, இல்லறத்தில் வாழவேண்டும்.

ஆன்மிகம் என்பது துறந்து செல்வதல்ல, உலகியலோடு கலந்து வாழ்ந்து, தான் வாழாமல் தாம் வாழப் பழகுவது. நான் வாழாமல் நாம் வாழப் பழகுவது. அப்படி வாழ்கிற ஆன்மிகத் தடத்தின் வெளிச்சத்தைத்தான், அரவிந்தர் உலகத்திற்குக் காட்டினார். அதுவரை ஆன்மிகம் என்பது எங்கோ கானகத்தில் தனிமைத்தவத்தில் இருந்துகொண்டு, எல்லா உறவுகளையும் உதறிஎறிந்துவிட்டு, அனைத்தையும் விட்டுவிட்டு வாழ்வதுதான், ஆன்மிகத்தடம் என்று நம்பிக்கொண்டிருந்தவர்கள் மத்தியில், எல்லா உறவுகளோடும் கலந்து வாழ்ந்து உலகம் மேம்பட வாழ்வதுதான், உண்மையான ஆன்மிக வெளிச்சம். அத்தகு உண்மையான ஆன்மிக வெளிச்சத்தைத்தான் பாரதி பலஇடங்களில் காட்டுகிறார். '**ஊருக்கு உழைத்திடல் யோகம்**' என்று சொல்கிறார். '**பிறர் துன்பந்தன்னைப் பார்க்கப்பொறாதவன் புண்ணிய மூர்த்தி**' என்று சொல்கிறார். பிரார்த்தனைகளில் அவர் வைக்கிற பிரார்த்தனை சிறப்பாக அமைகிறது.

விநாயகப்பெருமானை, வீதிகளில் வைத்துக்கொண்டு, சண்டையிடுவதல்ல. எப்படிப்பட்ட பிரார்த்தனை?

மண்ணில் உள்ள மக்கள் பறவைகள்
விலங்குகள் பூச்சிகள் புற்பூண்டு மரங்கள்
யாவும்என் வினையால் இடும்பை தீர்ந்தே
இன்பமுற்று அன்புடன் இணங்கி வாழ்ந்திடவே
செய்தல் வேண்டும் தேவ தேவா!

இந்த உலகத்தின் உயிர்க்குலத்தின் துன்பம் நீங்கவேண்டும். ஆனால், அது உன் அற்புதத்தால் மட்டும் நிகழ்ந்துவிடக்கூடாது. அதற்கு என் மனித முயற்சியும் இணைந்து நடைபெறவேண்டும். என் முயற்சியால் இந்தத் துன்பங்கள் நீங்க வேண்டும். அதற்கு நீ அருள்க தேவ, தேவா! மனித முயற்சியும் தெய்வநம்பிக்கையும் இணைந்து செயல்படுவதுதான் உண்மையான ஆன்மிகத் தடம் என்று பாரதி காட்டினார்.

இலர் பலராகிய காரணம் நோற்பார் சிலர்
பலர் நோலா தவர்

ஏன் வறுமை வாழ்கிறது? இத்தனை வருமான வரிச்சட்டங்கள் வந்துவிட்டன. அந்நியச்செலாவணி பற்றி ஆயிரமாயிரம் ஆய்வுக்கருத்துகள். எத்தனை சட்டங்கள் திட்டங்கள் வந்தபிறகும் இந்தத் தேசத்தில் அழிக்கமுடியாத நிரந்தரக்கோடாய் வறுமைக்கோடு வாழ்ந்துகொண்டிருக்கிறது. இலவசங்கள் வறுமையை மாற்றமுடியவில்லை. என்ன காரணம்? திருவள்ளுவர் சொல்கிறார்-இலர் பலராக இருப்பதற்குக் காரணம் - நோற்பார் சிலர்.- நோன்புநோற்பவர்கள் குறைவு. எப்படி நோன்புநோற்பது? தனிமைச்சிறையில் இருந்துகொண்டு நோன்பு நோற்பதா?

சிலர் நினைக்கிறார்கள், உண்ணாவிரதம் இருந்தால் மிகச்சிறந்த தவம் என்று. ஏற்றுக்கொள்வோம். 100கோடி மக்கள் தொகையை எட்டிவிட்ட இந்தியதேசத்தில் மூன்றுவேளையும் சேர்ந்து உண்ண முடியாதவர்கள், 40கோடிக்கு மேல் இருக்கிறார்கள். அவர்கள் தவசீலர்கள் ஆகிவிட மாட்டார்களா? வாய்பேசாது அமைதியாக இருப்பது தவம் என்று சிலருக்கு நம்பிக்கை. எத்தனை குழந்தைகள் பிறக்கின்றபோதே தம்மைப்பெற்ற தாயைக்கூட அம்மா என்று அழைக்கமுடியாமல் ஊமைகளாகப் பிறந்துவிடுகின்றன. பிறகு அவை தவம் செய்தவை ஆகிவிடாதா? சிலருக்கோ பிரமச்சரியம் மட்டுமே தவம் என்பது நம்பிக்கை. கானகத்தில் எத்தனையோ வன விலங்குகள் தங்கள் காதல் இணையைவிட்டுப் பிரிக்கப்பட்டு, மனிதர்களால் வளர்க்கப்படுகின்றன. பிறகு அவை அமரத்துவம் பெற்றுவிடாதா? எது நோன்பு? எது தவம்? எந்த நோன்பு வறுமையை மாற்றும்? தமக்கென வாழாமல் பிறர்க்கென யார் வாழ்கின்றார்களோ, அவர்கள் தான் நோன்பு நோற்றவர்கள். அவர்கள்தான் தவசீலர்கள். அந்தத் தவசீலர்களால்தான் வறுமை மாறும் என்று சொல்லுகிறார், திருவள்ளுவர்.

அப்படிப்பட்ட தவத்தைத்தான் பாரதி உலகத்திற்கு அறிவித்தார். 'பிறர் துன்பந்தன்னைப் பார்க்கப்பொறாதவன் புண்ணிய மூர்த்தி' என்றார். அந்தப்புண்ணியங்கள் பெருக வேண்டும். அதனால்தான் எந்தச் சமுதாயத்தின் தடத்தில் நின்று அவர் பேசுகிறார்? சமுதாயம் ஒட்டுமொத்தமும், 'பாவத்தைப் போக்குவது எது? புண்ணியத்தைத் தருவது எது? மறுமைக்கு ஒதுக்கீடு எது?' என்று கேட்டபோது ஒரேவரியில், எல்லாத்தளமும் சேர்ந்து சொன்னது, 'கோயிலைக் கட்டு கும்பாபிஷேகம் நடத்து. புண்ணியத்தைத் தேடு. வைகுண்டத்தில் இடம்பிடி' என்று. அதற்கு மறுதலையாய் அந்தத் தளத்தில் நின்று உச்சத்தில் சொன்னார் பாரதி கோயிலைக் கட்டுவதும் கும்பாபிஷேகத்தைச் நடத்துவதும் புண்ணியமல்ல! அன்னசத்திரம், கட்டலும் ஆலயம் பதினாயிரம் நாட்டலும் புண்ணியமல்ல. ஆங்கோர் ஏழைக்கு எழுத்தறிவித்தல் புண்ணியம் கோடி என்று சொன்னார். அந்தத் துணிவை இன்றைக்கு நம் சமூகம் பெற்றிருக்கிறதா? அதுதான் கேள்விக்குறியாக இருக்கிறது. ஆலயங்கள் எப்படி இருக்கின்றன? ஆன்மிகத் தலங்கள் எப்படி இருக்கின்றன? அரவிந்தர் காட்டிய பரிபூரண அமைதி ஆன்மிகத் தளத்தை ஆக்கிரமித்திருக்கிறதா? கேள்விக்குரியதாக இருக்கிறது.

ஒரு தேவாலயத்திற்குள் கறுப்பு மனிதன் உள்ளே நுழைந்தான். அவனை ஒரு பாதிரியார் தடுத்து நிறுத்தினார். கோபமாய்ச் சொல்லி விட்டுப் போனான், 'நான் ஆண்டவனிடம் முறையிடுவேன்' என்று. இரண்டு மாதம் கழித்து அதே தேவாலயத்திற்குள் அதே கறுப்பு மனிதன் நுழைந்தான். பாதிரியார் கேட்டார், 'ஆண்டவனிடம் முறையிட்டு விட்டாயா?' என்று. 'ஆண்டவனிடம் முறையிட்டேன்' என்று அந்த மனிதன் சொன்னவுடன் பாதிரியார் அதிர்ந்து போனார். 'ஆண்டவன் என்ன சொன்னார்?' என்று கேட்டார். அவன் சொன்னான், 'நானே அங்கு நுழையமுடியவில்லை. உனக்கு எதற்கப்பா வீண் வேலை? என்று கடவுள் சொன்னார்.' இன்று கடவுளே கண்முன்னே காட்சி தந்தாலும் கூட பூசாரி

புரோகிதர்களைப் பார்த்து விட்டால் கடவுளை, 'ஓரமாய் உட்கார்' என்று சொல்லிவிட்டு அவர்களையே கடவுளாக வழிபடுகிற நிலை.

இன்று மாத்ரிமந்திரைப் பார்த்தவுடன் கேட்டார்கள். 'ஆன்மிகம் எப்படி இருக்கிறது?' என்று. 'உண்மையான ஆன்மிகம் இங்கே உறைகிறது' என்று சொன்னேன். இப்பொழுதெல்லாம் பூசாரிகள் இல்லாமல் கடவுளைப் பார்க்க முடியாது. ஆனால் பூசாரிகள் இல்லாமல் கடவுளைப் பார்க்கமுடியும் என்று சொன்ன அரவிந்தரின் வெளிச்சம்தான் உலகம் முழுவதற்கும் தேவைப்படுகிறது. இந்த நிலைப்பாட்டில் பல செய்திகளை நாம் கூறலாம். அருமையான இரண்டு அற்புதமான நூல்கள் பாரதியைத் தெரிந்து கொள்ள, அவனைப் பற்றித் தெரியாத பல பக்கங்களை இன்றைக்கு அருமையாய் நம் சேதுபதி அவர்களும், அருமைக்குரிய சகோதரியார் மீனாட்சி அவர்களும் வெளியிட்டிருக்கிறார்கள். அதிலும் குறிப்பாக அரவிந்தரைப் பற்றி நாம் இங்கு வந்தபிறகு தெரிந்த உண்மை, 'அவர்களின் பிறந்ததினமும் இந்தியாவின் விடுதலைநாளும் ஒரேதினம்' என்பது. எந்த விடுதலைக்காக தன் வாழ்க்கையைத் தொடங்கினாரோ, அந்த விடுதலையை அவர் ஆன்மிக வெளிச்சத்திற்கு வந்தபிறகும் மாறாத உணர்வோடு இருந்தபோது அவர் பிறந்தநாளன்றே இந்தியதேசம் விடுதலை பெற்றபோது அவர் கூறிய வார்த்தைகளை எண்ணிப் பார்க்கிறபோது மெய்சிலிர்க்கிறது. பாரதி அதே தளத்தில்தான் சொன்னார்.

இந்தியாவின் விடுதலை மாத்திரம் முக்கியமல்ல. ஆன்மிக வெளிச்சமும் தேவை. ஆனால் அந்த ஆன்மிக வெளிச்சம் எப்படி இருக்க வேண்டும். ஒருசமத்துவ சமூக அமைப்புக்கு வழிகாட்ட வேண்டும். அதனால்தான் **'வேதம் புதுமை செய்'** என்றார். நாங்கள் கடவுளை நெருங்குவதற்கே ஜாதிகள் குறுக்கிட்டுக் கொண்டிருக்கின்றன ஆனால் பாரதி **'காக்கை குருவி எங்கள் ஜாதி'** என்று சொன்னார். ஒரு சர்வ சமய நல்லிணக்கத்தை அவருடைய பாடலிலே பார்க்க முடிகிறது. இன்றைக்கு அந்த ஒருலகக் கருத்தைத்தான் ஆரோவில் தனது தாரகமந்திரமாய் எடுத்துக் கொண்டிருக்கிறது. இந்தியா விடுதலை பெற்றபோது, அரவிந்தரின் ஆன்மிகக் கனவைப்போல அரசியல் கனவும் நனவாகியது. இந்தியாவின் விடுதலை வெளிச்சம் அதன் எல்லாப் பக்கங்களையும் ஒருசேரத் தழுவியதா? என்று கேட்டால், அதுவும் கேள்விக்குறியே!

இந்திய ஏழைமக்கள், இந்தியாவின் விடுதலையைக் கொண்டாடிக் கொண்டிருக்கிற அதேநேரத்தில் எல்லைப்புறத்தில் அவலநிலை. சமயத்தின் பெயரால், மதத்தின் பெயரால், மிகப்பெரிய பூசல்கள், பிணக்குகள், வீட்டுக்குள் பங்காளிகளுக்குள் சண்டை வந்தால், குறுக்குச் சுவர் எழுப்பினால் போதும் பிரச்சனைகள் தீர்ந்து விடும் என்று இயல்பாய் நம் வீட்டுக் கணக்குப் போடுவதைப் போல, நாட்டுக்கும் ஒரு கணக்குப் போட்டார்கள். எல்லைப்புறத்தில் ஒரு பெரிய கோட்டைக் கிழித்துவிட்டு, 'இந்துக்களே இங்கே வாருங்கள், இஸ்லாமியர்களே அங்கே போங்கள்' என்று சொல்லிவிட்டால் நம் எல்லாப் பிரச்சனைகளும் தீர்ந்து விடும் என்று தேசத்திற்கு ஒரு கணக்குப் போட்டார்கள். ஆனால் அந்தக் கணக்குப் பொய்க் கணக்காய்ப் போனது. தப்புக் கணக்காய்ப் போனது. எல்லைப்புறத்தில் கிழித்த கோட்டுக்கு அப்பால் நாடு விடுதலையடைந்த நேரத்தில் ஒருபுறத்தில் இந்துக்கள் இந்தியாவை நோக்கியும், சீக்கியர்கள் இந்தியாவை நோக்கியும், மறுபுறத்தில் இசுலாமியர்கள் பாகிஸ்தானை நோக்கியும் பயணம் செய்தார்கள். நாடு விடுதலையடைந்தபோது பறவைகள் புலம் பெயரும்; விலங்குகள் புலம் பெயரும்; மனிதர்களுமா புலம் பெயர்வார்கள்? அப்படிப் பெயர்ந்த நிலையைப் பார்க்க முடிந்தது. அப்படிச் சென்ற கூட்டத்திற்கு வரலாறு தந்த பெயர் கான்பியாக்கள். ஒரே நேரத்தில் எட்டு லட்சம் மக்கள் அகதிகளாய்த் தன் சொந்த நாட்டின் விடுதலையை அனுபவிக்க முடியாத சோகத்தோடு இங்கேயும் அங்கேயும் ஆடுமாடுகளாய் அலைமோதினார்கள். நடக்க முடியாமல், பேச முடியாமல், உண்ணமுடியாமல் உயிர்விட்டவர்கள் ஏராளம். இதுபரவாயில்லை. எல்லைப்புறத்து கிராமங்களில் நடக்கிற மிகப்பெரிய அநீதிகள், கலவரங்கள் சொல்லி மாளாது.

இந்துக்கள் அதிகமாய் வசிக்கிற கிராமமாய் இருந்தால் ஒரு செய்தி வரும். இன்னும் கொஞ்ச நேரத்தில் இசுலாமியத் தீவிரவாதிகள் வருவார்கள். அவர்கள் இங்கேயிருக்கக் கூடிய பொருட்களைச் சூறையாடுவார்கள். நம்வீட்டுப் பெண்களின் கற்பினைச் சூறையாடுவார்கள். உடனே அந்த வீட்டுச் சகோதரர்கள் கூடுவார்கள். தங்கள் வீட்டுப் பெண்களை அழைப்பார்கள். எதற்காக? காப்பாற்றுவதற்காக அல்ல. தங்கள் சொந்தச் சகோதரிகளையே தங்கள் வீட்டுக் கிணற்றில் தள்ளிவிட்டோ, அல்லது ஆயுதங் களால் தாக்கியோ, நெருப்பு வைத்தோ கொலை செய்து விடுவார்கள். எதற்காக? அந்நியமதத்தவரால் தங்கள் சகோதரிகள் மானபங்கப்பட்டுவிடக் கூடாது என்ற ஒரு வீட்டு நன்மைக்காக. ஆனால் பலநேரங்களில் அந்தச் செய்திகள் பொய்ச்செய்தியாய்ப் போகும். வதந்தியாகவே போய்விடும்.

இதேபோன்ற செய்தி இசுலாமியர்கள் அதிகம் வசிக்கிற கிராமத்துக்கும் பரவும். அங்கேயும் இதைப் போன்ற அவலம் நடக்கும். இப்படிப்பட்ட கருப்பு அவலங்களை, ஒருபுறத்தில் நடந்த அநீதிகளை- மதத்தின்

பெயரால் நடந்த அநீதிகளை வரலாறு மறைத்து விடமுடியாது. இரணங்களுக்கு மருந்திட்டுத்தான் ஆற்றவேண்டும். புனுகிட்டு ஆற்றிவிட முடியாது. அதனால்தான் இன்றைக்கு ஒருலகம் என்ற கருத்தும் கோட்பாடும் சாதிமத எல்லைகளைத் தாண்டி எல்லாத் தளங்களும் தேவையாயிருக்கிறது. இன்றைக்கு ஒவ்வொரு நாளையும் பதற்றம் நிறைந்த நாளாக எண்ணிக் கொண்டிருக்கிற இந்திய மண்ணிற்கு அவசியமாய் இருக்கிறது.

அதை எண்ணித்தான் தீர்க்கதரிசனமாய், அரவிந்தர் சிந்தித்த ஆன்மிகக்கனவு சாதி, மத அடையாளங்களைத் தாண்டிய இறைவன். எந்த வடிவத்திற்குள்ளும் அடக்க முடியாத பரம்பொருள். அதைத்தானே திருநாவுக்கரசர் சொன்னார். 'இப்படியன், இந்நிறத்தன், இவ்வண்ணத்தன், இவன் இறைவன் என்று எழுதிக் காட்டொணாதே!' இதைத்தான் அரவிந்தரும், அன்னையும் அடையாளம் காட்டியிருக்கிறார்கள்.

'எல்லோரும் அமரநிலை எய்துகிற நன்முறையை இந்தியா உலகிற்களிக்கும்'. எப்படிப்பட்ட மந்திரம்? மகாமந்திரம். 'யாதும் ஊரே யாவரும் கேளிர்' என்று, கணிப்பொறியும் இணையதளமும் சின்னத்திரையும், சின்ன ஃபோனும் வராத காலத்தில் மகிபாலன்பட்டியில் இருந்து ஒரு மகத்தான மனிதன் முழங்கினான். ஆனால் அவன் அச்சத்தில் முழங்கவில்லை. உலகத்தை என் உள்ளங்கைக்குள் அடக்க வேண்டும் என்ற மனிதநேயத்தில் முழங்கினான். அதே கருத்தை உள்வாங்கிக் கொண்டுதான் புதுச்சேரி மண்ணில் பிறந்த புரட்சிக் கவிஞன் சொன்னான். 'உலகம் உண்ண உண். உலகம் உடுத்த உடுத்து. வீட்டுக்கும் வீட்டுக்கும் இடையே இருக்கிற சுவர்களை இடி. வீதிக்கும் வீதிக்கும் இடையே இருக்கிற திரைகளை விலக்கு. நாட்டொடு நாட்டை இணைத்து ஏறு. மென்மேலும் ஏறு. மக்கள் பெருங்கடல் பார்த்து மகிழ்ச்சி கொள். அறிவை விரிவு செய். அகண்டமாக்கு. விசாலப் பார்வையால் விழுங்கு மக்களை. மானுட சமுத்திரம் நானென்று கூவு'. எப்படிப்பட்ட சிந்தனை? அரவிந்தரின் சிந்தனையை உள்வாங்கிக் கொண்ட சிந்தனை. அதைத்தான் பாரதி தீர்க்கதரிசனமாய்ச் சொன்னார். 'எல்லோரும் ஓர் குலம் எல்லோரும் ஓர்நிறை எல்லோரும் இந்திய மக்கள். எல்லோரும் ஓர்விலை எல்லோரும் இந்நாட்டு மன்னர் நாம் எல்லோரும் இந்நாட்டு மன்னர்'. இது வார்த்தை வசனமல்ல. வாழ்க்கையின் நிலைப்பாடாய் மாறவேண்டிய கடப்பாடு. அந்தக் கடப்பாட்டைத்தான் பாரதி, அர்விந்தரின் ஆன்மிக வெளிச்சத்தை உள்வாங்கிக் கொண்டு தன் கவிதை வெளிச்சத்தால் உலகம் முழுவதும் உலாவருகிறார்.

அந்தக் கவிதை வெளிச்சமும் ஆன்மிக வெளிச்சமும் சந்தித்துக் கொண்ட நிகழ்வுகள், கருத்துக்கள், கட்டுரைகள், கவிதைகள் மனித குல மேம்பாட்டிற்கு எல்லாவகையிலும் பயன்படும் வகையில் இந்தப் பன்னாட்டுக் கருத்தரங்கம் இந்த ஆரோவில்லில் தமிழ்மரபுமையத்தில் நிகழ்ந்திருப்பது, பாராட்டுக்குரியது.இதற்காக உழைக்கின்ற சகோதரியார் மீனாட்சி அவர்களையும், சேதுபதி அவர்களுடைய உழைப்பையும் பாராட்டி, ஒருமித்த சிந்தனை, உலகம் ஒன்றே என்ற சிந்தனை தாராளமயமும், தனியார்மயமும் உலகமயமும் உலகத்தை உள்ளங்கைக்குள் அடக்குகிற சிந்தனையல்ல, அன்பால், உறவால், மனித நேயத்தால் சகமனிதனின் துன்பம் தன்னுடைய துன்பம் என்று எண்ணிப் பார்க்கிற உண்மையான ஆன்மீகச் சிந்தனையாய் புதுச்சேரியில் தொடங்கப்பட்ட பூபாளம், ஆரோவில்லில் தொடங்கப்பட்ட இந்தப் பூபாளம், உலகம் முழுதும் உலாவர வேண்டும் என்ற ஆசையை, ஏக்கத்தை, தேவையை இந்த அவையின் முன்வைத்து பாரதியின் கவிதை வரிகளை கற்பனை வரிகளாக ஆக்காமல் வாழ்க்கையின் வேதமாக ஆக்குகிற பாதையில் நாளும் நாளும் பயணம் செய்வோம் என்பதை வலியுறுத்தி அனைவருக்கும் வாழ்த்துகளையும் நன்றிகளையும் பாராட்டுகளையும் தெரிவித்து விடைபெறுகிறேன் நன்றி, வணக்கம்.

**'கோயில்களைத் தழுவிய குடிகள்; குடிகளைத் தழுவிய கோயில்கள்' என்ற கொள்கையுடன் ஞானம் வளர்த்த தமிழ்மாமுனிவர் தவத்திரு குன்றக்குடி அடிகளாருக்குப் பின் திருக்கயிலாய ஞானபரம்பரை குன்றக்குடி திருவண்ணாமலை ஆதீனச் சைவத்திருமடத்தின் 46-ஆவது குருமகாசந்நிதானமாகத் திகழ்பவர் தவத்திரு குன்றக்குடி பொன்னம்பல அடிகளார்; உலகத் திருக்குறள் பேரவைத் தலைவர்; 'அறிக அறிவியல்', 'மக்கள் சிந்தனை' இதழ்களின் ஆசிரியர்; மதங்கடந்து மனிதநேயம் பேணிவரும் தூயதிருத்தொண்டர்; கிராம மேம்பாடு, சமூகச் சீர்திருத்தம், அனைவருக்கும் கல்வி மற்றும் அறிவியல் தொழில்நுட்பம் வளர்க்கும் ஆன்மிகத் தலைவர்.**

# தமிழில் ஆன்மிகச் செறிவும் நுட்பமும்

அன்னை ஓம் பவதாரிணி

இந்த உலகிலுள்ள பொருள்கள் அனைத்தையும் காட்சிப்பொருள், கருத்துப்பொருள் என இருபெரும் பிரிவாகப் பிரித்துக்கூறுவர்.



காட்சிப்பொருள் என்பது ஐம்பொறியுணர்வைக் குறித்து நிற்பது. கருத்துப்பொருள் என்பது - மனஉணர்வால் அறியப்படுவது.

சங்கஇலக்கியங்களை நாம் படித்தோமானால் படிப்பவர்களுடைய அகக்கண்ணின் முன் அகக்காட்சியையும், புறக்காட்சியையும், சிறப்புற அமைத்துக் காட்டும் திறன் அவர்களிடம் இருந்தது. அக்காலப்புலவர்கள் அகம் பாடுவதையே சிறந்த புலமை என்று மதித்து வாழ்ந்தனர்.

அப்புலவர்களின் பார்வை ஊடுருவிச் சென்று பொருளின் தன்மையை வெளிப்படுத்தும், குறிப்புச் சொற்களாகக் காட்டப்பட்டுள்ளன.

இலக்கியம், உலகில் உள்ள அனைத்தையும் அறம், பொருள், இன்பம், வீடு என்னும் இந்த நான்கினுள் அடங்கியுள்ளது. இதில் அடங்காதது உலகில் வேறு எதுவுமில்லை. எனவே, அறம், பொருளைப் புறத்திணையாகவும், இன்பம், வீடு என்பதை அகத்திணையாகவும் கொண்டனர். திணை என்றால் ஒழுக்கம் என்று பொருள்.

தொல்காப்பியம் அகத்திணையை ஏழுவகை ஒழுக்கநெறிகளாக வகைப்படுத்துகிறது.

குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை, கைக்கிளை, பெருந்திணை என்று ஏழுவகையாகக் கூறும்.

கைக்கிளையை ஒருதலைக்காமம் என்றும், பெருந்திணையை ஒவ்வாக் காமம் என்றும், மீதி ஐந்திணையை = ஒத்த காமம் என்றும் கூறுவர். இந்த ஐந்திணை, 'அன்பின் ஐந்திணை' என்றும், 'காதற்பாங்கு' என்றும் கூறப்படுகிறது.

இனி, சங்ககாலத்தில் இறையுணர்வுக் கொள்கை பற்றிக் காண்போம்.

கொடிநிலை கந்தழி வள்ளியென்ற
வடுநீங்கு சிறப்பின் முதலான மூன்றுங்
கடவுள் வாழ்த்தோடு கண்ணிய வருமே -தொல், புறம்-88

கொடி என்பதன் பொருள் அருள் என்பதாகும். நிலை என்பது அருளைத் தாங்கி நிற்கும் சிவத்தைக்குறிக்கும். கந்தழி என்பது உயிர்களின் மும்மலப்பற்றை அழித்துத் திருவடியை நல்கும் நிலையிலுள்ள வீட்டின்பமாகும். வள்ளி என்பது சிவத்தின் அருள் உயிர்களுக்கு உதவும் நிலையைக் குறிக்கும். இதனை,

அப்பன்கொடி நிலையாம் அன்னோன் அடியின்பாய்ச்
செப்புமகன் கந்தழியாம் சீர்வள்ளி - யொப்பிலா
அம்மையாம் மெய்ப்பொருளை யார்ந்த உளத்தமிழர்
செம்மை நலம் ..... என்றார்.

சூரிய மண்டலம், சந்திரமண்டலம், ஒளிமண்டலம் ஆகிய மூன்றும் கடவுள் வாழ்த்துடன் கருதப்படும் என்பது. இதன்பொருளையே அருளாளர்கள் சோமாஸ்கந்தமூர்த்தமாக வைத்து வழிபடுகின்றனர்.

இங்கு சூரிய மண்டலம் சந்திரமண்டலம் என்று கூறியது கோள்களை அன்று இறைவனின் அஷ்ட மூர்த்தத்தில் அடங்குவதால் இவற்றைப் பிறவாத் தெய்வமாகவே வைத்து எண்ணப்படுகிறது.

அஷ்டமூர்த்தம் என்பது பிருதிவி. அப்பு, தீ, வாயு, ஆகாயம், சூரியன், சந்திரன், ஆன்மா ஆகிய எட்டுமாகும்.

மனிதன் தேகமானது பிருதிவி, அப்பு, தீ, வாயு, ஆகாயம் என பஞ்ச பூதங்களால் ஆளப்படுகிறான். இது தூலதேகம். தேகியானபோது சோம ஒளி, சூரிய ஒளி, ஆன்மஒளியாய் அமைந்து விந்துநாதமாக மாறும். இந்த எட்டுநிலை உருவம் சிவஒளியில் நடிக்கிறது என்பதே சித்தாந்தக் கொள்கை. சூக்கும தேகமே ஒளிமயமானது.

கொடிநிலை, கந்தழி என்பதைச் சைவசித்தாந்தத்தில், 'அணுசதாசிவர்' என்று கூறுவர். அணு- ஆன்மா, சதாசிவம்- சக்திசிவம் சேர்ந்த நிலை. இம்மூன்றும் இணைந்த நிலையே அணுசதாசிவர். இவரை, புத்தமதத்தில், 'அவலோகிஸ்தேஸ்வரர்' என்று கூறுவர். கந்தழி என்பது சிவம், சக்தி, ஆன்மா இணைந்த நிலை. இந்த நிலையை அடைவதற்குக் கடவுளை, மன்னன் கீர்த்தியில் காணுமாறு கூறுவதைப் பார்ப்போம்.

தாவில் நல்லிசை கருதிய கிடந்தோர்க்குச்
சூத ரேத்திய துயிலெடை நிலையும்
கூத்தரும் பாணரும் பொருநரும் விறலியு
மாற்றிடைக் காட்சி யுறழத் தோன்றிப்
பெற்ற பெருவளம் பெறாஅர்க் கறிவுறீஇச்
சென்று பயனெதிரச் சொன்ன பக்கமும்
சிறந்த நாளணி செற்றம் நீங்கிப்
பிறந்த நாள்வயின் பெருமங்கலமும்
சிறந்த சீர்த்தி மண்ணு மங்கலமுந்
நடை மிகுத்தேத்திய குடைநிழன் மரபு
மாணார்ச் சுட்டிய வாள்மங் கலமும்
மன்னெயி லழிந்த மண்ணு மங்கலமும்
பெற்ற பின்னரும் பெரு வளனேத்தி
நடைவயிற் றோன்று மிருவகை விடையு
மச்சமும் மூவகையு மெச்ச மின்றி
நாளும் புள்ளும் பிறவற்றினி மித்தமுங்
காலங்கண்ணிய வோம்படை யுளப்பட
ஞாலத்து வரூஉ நடக்கையது குறிப்பிற்
காலமுன்றோடு கண்ணிய வருமே.



இதன் கருத்து - போர் முடிந்து வந்த மன்னன் தனது பாசறையில் துயில்வர். அம்மன்னரை அவரது புகழையெல்லாம் சொல்லி 'சூதர்' என்பவர் துயிலெழுப்புவர். (இது இன்றளவும் திருக்கோயில்களில் இறைவனுக்குச் செய்யும் திருப்பள்ளியெழுச்சி என்னும் நிகழ்ச்சியாகக் காணலாம்)

துயிலெழுந்த மன்னன் பிறந்தநாள் கொண்டாட்டம், முடிசூட்டுவிழா, போர்வெற்றி போன்றவற்றை நிகழ்த்திப் புகழ் பெறுவான். அதுசமயம் மன்னனிடம் கூத்தர், பாணர், பொருநர், விறலியர், பரிசிலர்கள் முதலியோர் சென்று அவரைப் போற்றிப் பாடி, துதித்து அவரது முன்னோர்கள் சிறப்புகளையெல்லாம் கூறிப் பெரும் செல்வம் பெற்றுத் திரும்புவர்.

இது இரண்டு வகையில் நடைபெறும். மன்னர் தானே பரிசு தருவதும், பரிசிலர் தானே மீளலும் என இருவகைப்படும். அதாவது தானாகத் தரும் முறையும், கேட்டு வாங்கும் முறையுமாக அமையும்.

பரிசில் பெற்று வருபவர்கள், மற்றவர்களுக்கு அறிவுறுத்தி நீங்களும் சென்று பலன் பெறுங்கள் என்று ஆற்றுப்படுத்தி அனுப்புவர். இது உலகியல் முறையாகும்.

இதனையே வீட்டின்ப முறையில் அமைத்துக் கொள்ளுதல் சான்றோர் கருத்தாகும். அது எப்படி எனில்,

ஆற்றிடைக் காட்சி யுறழத் தோன்றிப்
பெற்ற பெருவளம் பெறாஅர்க் கறிவுறீஇச்
சென்று பயனெதிரச் சொன்னபக்கமும்

என்பதற்கு நச்சினார்க்கினியர் எழுதிய உரையில், ஆற்றிடை - துறவற நெறியிடத்து; காட்சி - இல்லற நெறியில் கண்டவுணர்வு. உறழத் தோன்றி - மாறுபட விளங்கி, பெற்ற பெறுவளம்ம - இறைவன்பாற் கிடைத்த வீட்டின்பமாகிய கந்தழியை, பெறாஅர்க்கு - கிடைக்காது வருந்தும் ஏனையவர்க்கு, அறிவுறீஇ - தெளிய உணர்த்தி, சென்று பயனெதிர - முறையாகப் போய் இன்பம் எய்த, சொன்ன பக்கமும் - கூறிய பகுதியும், என்று கூறி மேற்கோளாக திருமுருகாற்றுப் படையைக் காட்டியுள்ளார்.

வீட்டின்ப நிலையில் பார்க்கும்போது, சங்கப் பாடல்களில் காணும், மன்னர் இறையாகவும், சூதர் இறையின் பேராற்றலாகவும், கூத்தர், பாணர், பொருநர், - ஒருமலம், இருமலம், மும்மலம், உடையவர்களாகவும், விறலி - தலைவனைச் சாரும் பருவம்வாய்ந்த உயிராகவும், பெருவளன் - திருவடியின்பமாகவும், பெருமங்கலம் - அருட்தோற்றமாகவும், குடைநிழல் - மரபு படைத்தலாகவும், மன்னெயிலழிந்த மண்ணுங்கலம் - துடைத்தலாகவும், கடைக்கூட்டு நிலை - மறைத்தலாகவும், இருவகை விடையும்- அருளலாகவும், ஓம்படை - அடியவர் ஏத்தலாகவும் கொள்ள வேண்டும்.

இன்னும் அகத்திணை இயலில் தலைவனது புறவொழுக்கத்தில் அவனோடு தொடர்பு பெறும் மகளிரைச் சேரிப்பரத்தை, காதற்பரத்தை, காமக்கிழத்தி என்று குறிப்பிடுவர். இதனை வீட்டியல் நிலையில் வைத்துப் பார்க்கும்போது சேரிப்பரத்தை என்பது ஆணவத்தையும், காதற்பரத்தை தலைவியாகவும், காமக்கிழத்தியைச் சுத்த வித்தையாகவும் அகப்பொருள் இலக்கணம் மூவகையாகக் கூறும்.

இதனைக் குமரகுருபரரும் தலைவியை ஞானமாகவும், அத்தலைவியைப் பெறாமல் இடைநின்று கவரும் சேரிப் பரத்தையாக ஆணவத்தையும், காமக்கிழத்தியாகச் சுத்தவித்தை முதலியனவும் உருவகம் செய்கிறார். இதனைக் குமரகுருபரர் பிரபந்தத் திரட்டில் காணலாம்.

சங்க இலக்கியங்களும், ஆற்றுப்படைகளும் உலகியல் துறைகளாகத் தோன்றிய போதிலும் அருட்துறைகளே ஆகும். இவற்றைக் குறிப்பாகவும், வெளிப்படையாகவும், ஒப்பாகவும் (உவமை) உள்ளுறை உவமமாகவும், உய்த்துணர் வைப்பாகவும்., குறிப்புப் பொருளாகவும் கூறியுள்ளனர்.

அகத்திணையில் காணப்படும் செய்யுள்களில் தலைவன் தலைவியரிடையே வளரும் அன்புநிலை. அவர்கள் இல்லறம் நடத்தும் முறை முதலியன உலகியலைச் செம்மைப்படுத்தும் தன்மையின. இவர்களிடையே காணப்படும் அன்பு தெய்வீக நிலையைச் சார்ந்தது.

அன்பைப் பற்றி மூன்று விதமாக,

| | | |
|---|---|---|
| முதல்நிலை அன்பு | - மக்கள் அன்பு | Human Love |
| இரண்டாவது அன்பு | - ஆன்மிக அன்பு | Spiritual Love |
| மூன்றாவது அன்பு | - தெய்வீக அன்பு | Divine Love |

என்று அந்த அன்பினை ஒன்றுக்கும் மேற்பட்ட நிலையாக ஸ்ரீஅரவிந்தர் கூறுவார்.

இறைவனுக்கும் மனிதனுக்கும் உள்ள அன்பை அழிக்க முடியாது என்பதை ஸ்ரீஆண்டாளும் ‘உறவேல் நமக்கு இங்கு ஒழிக்க முடியாது’ என்று அருளிச் செய்துள்ளார்.

இறைவனோடு நமக்கிருக்கும் தெய்வீக அன்பு பிறவிகள்தோறும் தொடர்வது. சங்ககாலமாகட்டும், இக்காலமாகட்டும், இனிவருங்காலமாகட்டும் தொடர்ந்து கொண்டே இருக்கும்.

**யோகி ஓம் பவதாரிணி அம்மையார், சென்னை, தாம்பரம், கருமாரி சக்தி பீடம் மற்றும் ஸ்ரீஅரவிந்தஅன்னை நினைவு வழிபாட்டுத்தலம் ஆகியவற்றின் அமைப்பாளர்; வாழும் சித்தர்; ஸ்ரீநவசக்தி விஜயம் மாதஇதழின் ஆசிரியர்; திருவண்ணாமலை யோகி ராம்சூரத்குமார், கன்னியாகுமரி மாயம்மா முதலிய ஜீவன் முக்தர்களின் அருளுக்குப் பாத்திரமானவர்; சென்னையில் உலக சாவித்ரி ஆய்வு மையம் நிறுவி ஆன்மிகப் பணிகளாற்றி வருபவர். செஞ்சியில் மிகப் பின்தங்கிய ஏழைக் குழந்தைகளுக்காகக் கல்வித் தொண்டாற்றி வருகிறார்.**

# பாரதி வழியில்...

## டாக்டர் எம்.எஸ். உதயமூர்த்தி

மனவியலைப் பற்றி என் ஆர்வத்தைத் தூண்டியதற்கு ஜேம்ஸ்ஆலனது நூல்களும் ஒரு காரணம். மனவியல் சம்பந்தமாக நான் எழுதி இருக்கும் பல நூல்களிலும் வாழ்வின் சில அடிப்படை உண்மைகளை தெளிவுகளை நீங்கள் காணக்கூடும். ஒருவேகமும், ஓர் உறுதியும் ஓர் உண்மை ஒளியும் அவற்றில் தென்பட்டால் அதற்கு அடிப்படை அமைத்துக்கொடுத்தவர் ஜேம்ஸ்ஆலன்தான்; சொற்களின் வலிமைக்குத் துணைநின்றது பாரதியின் நினைவுகள்தான்.



மனத்தில் நாம் கொண்டிருக்கும் எண்ணங்களுக்குக்கேற்ப நம் சூழ்நிலை அமைகிறது. நாம் எந்த சூழ்நிலையை விரும்புகிறோமோ, அதற்கேற்ப மன எண்ணங்களை அமைத்துக்கொண்டால் வாழ்வு நாம் விரும்புகிறபடி அமையும் என்கிற உண்மை சாதாரணமான விஷயமல்ல. உலகின் மகத்தான கண்டுபிடிப்பு என்றே சொல்ல வேண்டும்.

இவ்வுலகில் வாழும் நாம் எல்லோரும், மகிழ்வுடனும், வளத்துடனும் வாழ விரும்புகிறோம். அப்படி என்றால், ஏன் அதற்கேற்ற எண்ணங்களை நம் மனத்தில் விதைத்து, வளர்த்து, கண்காணித்து பலன் பெறக்கூடாது? விஷயம் இவ்வளவு எளிதாக இருக்கும்போது ஏன் நம் குழந்தைகளுக்கு ஆரம்பப்பள்ளிக்கூடத்திலிருந்து உயர்நிலைப் பள்ளி வரை தொடர்ந்து சொல்லிக் கொடுத்து இதை மனப்பழக்கமாக ஆக்கக்கூடாது? ஏன் அவர்கள் ஒரு நல்வாழ்வு வாழ வழிகாட்டும் அத்தகைய கல்வியில் நாம் கவனத்தைச் செலுத்தக்கூடாது?

செய்கிறோமா நாம்?

அதேபோல இன்று நாடு இருக்கும் அவலச்சூழ்நிலைக்குப் பெரும்பான்மையோர் கொண்டிருக்கும் எண்ணங்கள்தான் காரணம். மனித சமுதாயம் என்பது கூட்டு எண்ண சக்தி என்பதையும், இந்த கூட்டு எண்ண சக்தியை நெறிப்படுத்துவதன் மூலம் ஒரு நல்ல சமுதாயத்தை நாம் உருவாக்க முடியும் என்பதையும் நாம் உணர்ந்திருக்கிறோமா? பயன்படுத்துகிறோமா?

தனிமனித முன்னேற்றத்திற்கு பாரதியார் கூறும் சிந்தனைகளை நாம் மொத்த சமுதாயத்திற்கும் பயன்படுத்தலாம்.; பயன்பெறலாம்.

டாக்டர் எம்.எஸ்.உதயமூர்த்தி, 'உன்னால் முடியும் தம்பி' என்னும் தாரக மந்திரத்தைத் தந்து, இளைய சமுதாயத்தை எழுப்பி, மக்கள் சக்தி இயக்கத்தை வழிநடத்தி வருபவர். அமெரிக்காவில் பெற்ற அனுபவங்களைக்கொண்டு, இந்திய மக்கள் சக்தியை எழுப்பி நாட்டை முன்னேற்றப்பாதைக்கு வழிநடத்த அயராது பாடுபட்டு வருபவர். சென்னைவாசியான இவர், 'நாடு எங்கே செல்கிறது ?', 'ஆத்மதரிசனம்', ஜேம்ஸ் ஆலனின் 'வாழ்க்கையை அமைக்கும் எண்ணங்கள்', 'நீதான் தம்பி முதலமைச்சர்' முதலான வாழ்வியல் வழிகாட்டு நூல்களின் ஆசிரியர்.

# பன்னாட்டுத் தொடர்பு

## தமிழ்மாமுனிவர் தவத்திரு குன்றக்குடி அடிகளார்



உலகம் ஒன்றே; மாந்தரினமும் ஒன்றே. "எல்லா உலகமும் ஆனாய் நீயே!" என்ற வழக்கு, உறவு கலந்த உரிமையின் அடிப்படையில் அமைந்த வழக்கே. மொழி, சமயம், அரசியல் முதலியவற்றின் அடிப்படையிலும் ஒரோவழி உலக நிலப்பரப்பின்ஊடேஎழுந்துள்ள உயர்ந்த மலைகள் காரணமாகவும், விரிந்துள்ள ஆழ் கடல்கள் காரணமாகவும் உலக நிலப்பரப்புத் துண்டுபட்டுள்ளது. ஆனாலும், மாந்தர், மாந்தரே! மாந்தருக்கு அறிவியல் தலைப்பட்ட காலத்திலிருந்து உலகம் தழீஇய நிலையில் நாடுகளிடையே தொடர்புகளை வளர்த்து, உறவுகளைப் பேணிப்பாதுகாக்கத் தொடர்ந்து போராடி வந்துள்ளனர்.

இத்துறையில் அறிவியல் உலகம் காலத்தையும் தூரத்தையும் இயற்கைத்தடைகளையும் கடந்து ஒப்பற்ற சாதனை புரிந்துள்ளது. ஆயினும், மனிதகுலம் உடைமைகள், அதிகாரங்கள், குறுகிய பற்று பாசங்கள் ஆகியவற்றால் அறிவியல் உலகம் சாதித்த உலகந்தழீஇய தொடர்புகளைத் துண்டாக்கவும், உறவுகளை உருக்குலைக்கவும் எதிர்நிலையில் போராடி ஓரளவு வெற்றியும் பெற்றிருக்கிறது. ஆனாலும், இந்த முயற்சி தோற்பது உறுதி. எதிர்வரும் 21ஆம் நூற்றாண்டில் 'ஒருலகம்' அமையும் - விளங்கும்!

உலக நாடுகளுக்கிடையே தொடர்பு கொள்வதற்கு, பண்டைக்காலத்தில் இருந்த சாதனங்கள் மிகச் சிலவே. பறவைகள், விலங்குகள் கூட ஒரு காலத்தில் தொடர்புச் சாதனங்களாக விளங்கின. வெகுகாலத்திற்குப் பின் கப்பல்கள், பேருந்துகள், இரயில்கள், விமானங்கள், தொலைபேசிக்கருவிகள் முதலியன தொடர்புச் சாதனங்களாக வளர்ந்து பெருகி வந்தன. இன்று உலகத்தின் பல நாடுகளையும் இணைத்து ஒன்றாக்குவதில் தொலைபேசி, வானொலி, தொலைக்காட்சி, விமானம் முதலியன அதிகமாகப் பயன்பட்டுவருகின்றன.

பழங்காலந்தொட்டே மாந்தர்குலத் தொடர்புகளைக் குறிக்கோளாகக் கொண்டு உலகந்தழீஇய பயணங்கள் மேற்கொள்ளப்பெற்று வந்தன. யுவான்சுவாங், வாஸ்கோடகாமா, கொலம்பஸ் போன்றவர்களுடைய பயணங்களும் பன்னாட்டுத்தொடர்புக்கு உரமூட்டின. நம் நாட்டில் காசி, இராமேஸ்வரம் யாத்திரை என்பது சமயவழிப்பட்டது மட்டுமன்று, நாட்டுமக்கள் தொடர்பு பெறுவதற்காகவும் அமைந்தது.

இன்று உலகம் முழுவதும் வளர்ந்து வரும் ஒரு பண்பு - பழக்கம் சுற்றுலாப் போதலாகும். சுற்றுலாச் செல்வோர் எண்ணிக்கை நாளுக்கு நாள் அதிகமாகி வருகிறது. இதன்மூலம் மக்களிடையே பன்னாட்டுத் தொடர்பு வளர்ந்து வருகிறது. இங்ஙனம் வளர்ந்துவரும் பன்னாட்டுத்தொடர்பால் மனிதகுலம் பல்வேறு பயன்களையும் அடைந்துவருகிறது. முதலாவதாக, மனிதர்களுக்கு விரிந்த மனப்பான்மை உருவாகிறது. மனிதரின் வாழ்நிலை, உயர்ந்த நாகரிகத் தரத்திற்கு உயர்த்தப்படுகிறது.

பன்னாட்டுத் தொடர்பினால், பல மொழிகள் சுற்கும் ஆர்வம், தூண்டி வளர்க்கப்படுகிறது. மொழி, மனித குலத்திற்கிடையே தொடர்பையும், உறவையும் ஏற்படுத்தி வளர்க்கும் ஒரு கருவியே ஆகும். மொழி, உறவுச் சாதனமே. ஒருபொழுதும் மொழி, பிரிவினைச் சாதனமாக இருந்ததில்லை. இருக்கவும் முடியாது. ஆனால், உடைமை, அதிகாரம் ஆகியவற்றில் வெறிபிடித்தவர்கள் மொழிகளையும் பகைவளர்க்கும் கருவிகளாகப் பயன்படுத்துகின்றனர். இது முறையுமன்று. நெறியுமன்று. பன்னாட்டு மக்களின் உணர்வுகளைப் புரிந்துகொள்ள அவ்வழி வாழ்க்கையை வளமாக்கிக் கொள்ளப் பன்மொழிப் பயிற்சி தேவை.

வீடு காற்றோட்டமுள்ளதாக வேண்டுமென்றால் நிறைய சாளரங்கள் தேவை. நிறையச் சாளரங்கள் உள்ள வீட்டில் ஒளிக்கதிர்களும், மெல்லிய பூங்காற்றும் நலச்சூழ்நிலையை உருவாக்கும். அதுபோல், பலமொழி நூல்களைக் கற்றுணர்வோரின் வாழ்க்கை சிறப்புடையதாக அமையும்.

இன்று, பன்னாட்டு நூல்களை அவரவர் மொழியில் பயிலும் வாய்ப்புப் பெருகியுள்ளது. எண்ணற்ற மொழிபெயர்ப்பு, நூல்கள் வெளிவந்துள்ளன. இந்த பன்னாட்டுத் தொடர்பை உருவாக்கி வளர்ப்பதில்

நாளிதழ்கள், வார, மாத இதழ்கள், நூல்கள் முக்கிய இடம் வகிக்கின்றன. அதுபோலவே, இசையும் நாடகங்களும், திரைப்படங்களும், பிற கலைகளும் பன்னாட்டுத் தொடர்புச் சாதனங்களாக உள்ளன. பன்னாட்டுத்தொடர்பு வளர்வதால், உலகின் அனைத்து நாடுகளும் அறிவியலிலும், தொழில் துறையிலும் அவற்றினைச் சார்ந்த பொருளாதாரத்துறையிலும் வளர்ச்சி அடைகின்றன.

இத்தகைய பன்னாட்டுத் தொடர்பில் தமிழகம் வழிவழியாக வளர்ந்து வந்துள்ளது. பண்டைத் தமிழக அரசுகள் கடல் வாணிகத்தில் சிறந்து விளங்கின. தமிழகத்தின் முத்து, அகில், சந்தனம், மிளகு, புகையினும் மெல்லிய பூந்துகில் ஆடைகள் முதலியனவும் அயல்நாடுகளுக்கு ஏற்றுமதி செய்யப்பட்டுள்ளன. தமிழகம், இந்தோனேசியா, சீனா போன்ற ஆசிய நாடுகளுக்கும், ரோம் முதலிய ஐரோப்பிய நாடுகளுக்கும் ஏற்றுமதி வாணிகம் செய்தது. அதுபோலவே, தமிழகம் அயல்நாடுகளிலிருந்து தேவையான பொருட்களை இறக்குமதி செய்தது. தமிழகத்தில் தொண்டி, பூம்புகார், கொற்கை, முசிறி ஆகிய துறைமுகங்கள் வரலாற்றுச் சிறப்புடையன. இவற்றுள் பூம்புகார் நகரம் மிகச் சிறந்து விளங்கியது.

பூம்புகாருக்கும் பல்வேறு நாடுகளுக்கும் ஏற்பட்டிருந்த வாணிகத்தொடர்புகளை கி.பி. முதல் நூற்றாண்டின் தலைசிறந்த யாத்திரை நூலான பெரிபுளூஸ் விளக்கமாகத் தெரிவிக்கிறது.

இந்தப் பிரதேசத்தின் வாணிகச் சந்தை கூடும் நகரங்களில் டிமிரிகாவிலிருந்தும் (தமிழகம்), வடக்கிலிருந்தும், உள்ள துறைமுகங்களிலிருந்து (காவிரிப்பூம்பட்டினம்) வரும் கப்பல்கள் தங்குவதற்கு வசதியான இடங்களில் முதன்மைத்தானம் வகிப்பது காமாரா (தொண்டி முசிறி துறைமுகங்கள்) என்பதாகும். அதற்கடுத்தது பொதுகா (புதுவை) என்பது. அதற்கடுத்தது சோபடனா (சென்னைப்பட்டினம்) இவற்றில் அந்நாட்டுக் கப்பல்கள் கடலோரமாக டிமிரிகா வரையிலும் சென்று தங்குகின்றன.

ஒரே மரத்தில் செதுக்கப்பட்ட ஒரு கட்டையுடன், மற்றொரு மரத்தில் செதுக்கப்பட்ட வேறொரு கட்டையைப் பிணைத்து விடப்பட்டதே பெரிய கப்பல் என்று வழங்கப்படும்.

இதன் பெயர் சங்காரா (இரண்டு கட்டுமரங்கள்) என்பதாகும். ஆனால், கிரிஸே (சுமத்ரா), கங்கே (கங்கையின் கழிமுகம்) முதலிய நாடுகளுக்குச் செல்லும் கப்பல்கள் கொலாண்டியா (கலம் (மரக்கலம்) என்னும் தமிழ்ச் சொல் அடியாகப் பிறந்தது) என்று வழங்கப்படுகின்றன. அவை பார்வைக்குப் பெரிய உருவம் படைத்தனவாகவும் காட்சியளிக்கின்றன. இவ்விடங்களில் இறக்குமதி செய்யப்படும் பொருள்கள் யாவும் டிமிரிகாவில் செய்யப்பட்டனவேயாகும். மற்றும் எப்பொழுதேனும் எகிப்திலிருந்து (எகிப்து) கொண்டு வரப்படும் சரக்குகளில் பெரும்பாகம் இங்கு வந்து குவிக்கப்படுகின்றன. இவை டிமிரிகாவிலிருந்து வாங்கப்படும் பொருள்கள் யாவற்றினோடும், மற்றும் பராலியா (பரலீசர், பரமீசர் என்பதன் திரிபு. இன்றைய திருவனந்தபுரம்) வழியாக எடுத்துச்செல்லப்படும் பொருள்களோடும் ஒன்று சேர்க்கப்பட்டுக் கொண்டு வரப்பட்டனவாகும். *(பெரிபுளூஸ் (கி.பி.50-80) வி.எஸ்.வி. இராவகன், ப.264)*



மேலும் பூம்புகாரில் காலினும் கலத்தினும் வந்திறங்கிய பண்டங்கள் குறித்து,

"நீரின் வந்த நிமிர்பரிப் புரவியும்
காலின் வந்த கருங்கறி மூட்டையும்
வடமலைப் பிறந்த மணியும் பொன்னும்
குடமலைப் பிறந்த ஆரமும் அகிலும்
தென்கடல் முத்தும் குணகடல் துகிலும்
கங்கை வாரியும் காவிரிப் பயனும்
ஈழத் துணவும் காழகத் தாக்கமும்
அரியவும் பெரியவும் நெரிய ஈண்டி"

என்று, பட்டினப்பாலை விரிவாகக் கூறுவதை அறிக.

இந்திய நாட்டில் நடைபெற்றுள்ள அகழ்வாராய்ச்சி களும் இந்த உண்மையை எடுத்துரைக்கின்றன.

சோழப் பேரரசின் துறைமுகம் பூம்புகார். இதனைக் காவிரிப்பூம்பட்டினம் என்றும் அழைப்பர். சிலப்பதிகாரத்தின் தொடக்கம் பூம்புகாரேயாம். "பூம்புகார் போற்றுதும், பூம்புகார் போற்றுதும்" என்று இளங்கோவடிகளால் போற்றப்பெற்றது பூம்புகார். இது, காவிரியாறு கடலில் கலக்கும் இடத்தில் அமைந்திருந்த துறைமுகப்பட்டினம். இத்துறைமுகத்தில் சோழப் பேரரசு சுங்கம் என்ற வரி



வசூலித்துள்ளது. இத் துறைமுகத்திலிருந்து உலகின் பல நாடுகளுக்கும் பண்டங்கள், கப்பல்களில் ஏற்றுமதி செய்யப்பெற்றன. அதுபோலவே, சோழநாட்டிற்குத் தேவையான பண்டங்கள் அவற்றைச் சுமந்துவந்த கப்பல்களிலிருந்து இறக்கி, நாட்டிற்குள் அனுப்பப்பெற்றன.

"நீரினின்று நிலத் தேற்றவும்
நிலத்திலிருந்து நீர்ப் பரப்பவும்
அளந்தறியாப் பல பண்டம்
வரம்பறியாமை வந்தீண்டி
அருங்கடிப் பெருங்காப்பின்
வலியுடை வல்லணங்கினோன்
புலிபொறித்துப் புறம்போக்கி
மதிநிறைந்த மலி பண்டம்
பொதிமூடைப் போரேறி" (பபாலை- 129-137)

என்ற அடிகள் தமிழ்நாட்டிற்கு இருந்த பன்னாட்டுத் தொடர்பை விளக்குவனவாக அமைந்துள்ளன.

ஏற்றுமதி- இறக்குமதி செய்யப்படும் பண்டங்கள் அளந்தறிதற்கு உரியனவாக அமையாமல் அளவிறந்து குவிந்திருப்பதனை, "அளந்தறியாப் பல பண்டம் வரம்பறியாமை வந்திண்டி" என்றும், "பொதிமூடைப் போரேறி" என்றும் பட்டினப்பாலை ஆசிரியர் கூறுவது குறிப்பிடத்தக்கது.

தமிழ்நாட்டு மக்கள் பல நாடுகளுக்கும் சென்று வாழ்ந்து வந்துள்ளனர். சிவநெறி, தமிழ்நெறியேயாம். இந்தோ-சீனாவில் அங்குர்வாட் என்னும் நகரில் ஒரு பெரிய சிவன்கோயில் உள்ளது. இத்திருக்கோயில் கோபுரங்கள் தமிழகக் கோயில் கோபுரங்களைப் போல் உள்ளன. "முக்கட்செல்வர் நகர்" (புறம்- 6) என்ற புறநானூறு குறிப்பிடும் கோயில் (நகரம்போல) பெரிய திருக்கோயிலாக இத்திருக்கோயில் அமைந்துள்ளது. இது கருங்கல்லாலான திருக்கோயில். இத்திருக்கோயிலில் இராமகாதை, முழுதும் கருங்கல்லில் சிற்பமாகச் செதுக்கப்பெற்றுள்ளது. இந்தோனோஷியா தலைநகரான ஜாகர்த்தாவிலும் பழைய சிவாலயங்கள் கருங்கல்லில் அமைந்துள்ளன.

பாலித் தீவில் நமது சமயம் பரவியிருந்த தடயங்கள் பல கிடைத்துள்ளன. அங்குள்ள மக்கள் திருநீறு போன்ற ஒரு பொருளை இன்றும் அணிந்து கொள்கின்றனர். இந்தோனேஷியாவில் உள்ள பல ஊர்கள் இராமகாதையில் குறிக்கப்பெறும் ஊர்ப்பெயர்களாக அமைந்துவிளங்குகின்றன. அந்நாட்டில் கிராமியக் கலை நிகழ்ச்சிகளில் இராமகாதை நாட்டிய நாடகம் முக்கிய இடம் வகிக்கின்றது. ஏன்? இன்றும் சோவியத் தலைநகராகிய மாஸ்கோவில் திராவிடக் கலை இலக்கியக் காட்சியகம் ஒன்று அமைந்துள்ளமை, பெருமைக்குரிய செய்தி. பண்டைக்காலத்தில் இந்தியா உணர்வினால் ஒரு நாடாக அமைந்துவிளங்கியது. இன்று அரசியல் புகழ்பெற்று விளங்கும் நடுநிலைக் கொள்கை- அணிசேராநாடு என்ற கொள்கைகள் பழந்தமிழகத்திலேயே வழக்கிற்கு வந்துவிட்டன. பாரதப்போரில் ஈடுபட்டிருந்த கௌரவர் படைகளுக்கும் பாண்டவர் படைகளுக்கும் சோறு அளித்துப் புகழ்பெற்றவன் பெருஞ் சோற்று உதயன் சேரலாதன் என்பது புறநானூறு கூறும் செய்தியாகும்.

"அலங்குளைப் புரவி ஐவரோடு சினைஇ
நிலந்தலைக் கொண்ட பொலம்பூந் தும்பை
ஈரைம் பதின்மரும் பொருதுகளத் தொழியப்
பெருஞ் சோற்று மிகுபதம் வரையாது கொடுத்தோய்"(புறம்-2) என்பது அறியத்தக்கது.

சீன நாட்டுக்கும் தமிழ்நாட்டுக்கும் அரசியல் தொடர்பு இருந்தது என்று சீன வரலாறு கூறுகிறது.

சேரன் செங்குட்டுவன் கண்ணகிக்குச் சிலை எடுத்து வணக்கம் செலுத்தியபோது இலங்கை அரசன் கயவாகு வந்திருந்ததே தமிழகத்தின் பண்பாட்டுத் தொடர்புக்கு எடுத்துக்காட்டு.

தமிழ் மக்கள் உலகந்தழீஇய ஒட்பம் உடையவர்களாக விளங்கினர். ஒழுக்கத்திற்கு, 'உலகத்தோடு ஒட்ட ஒழுகல்' என்று இலக்கணம் வகுத்தது தமிழ். உலகநிலப்பரப்பில் எந்த நாடாக இருந்தாலென்ன? எந்த ஊராக இருந்தாலென்ன? அந்த நாடுகளையும் ஊர்களையும் அங்குக் குடியேறி வாழ்பவர்கள்

தமது நாடுகளாக, ஊர்களாக ஆக்கிக்கொள்ளுதல் கல்வியின் விழுமிய பயன் - அறிவியலின் ஆக்கம் என்கிறது தமிழ்மறை.

"யாதானும் நாடாமால் ஊராமால் என்னொருவன்
சாந்துணையும் கல்லாத வாறு" (குறள்- 397) என்பது திருக்குறள்.

ஒரு நாட்டு மக்களுக்குப் பன்னாட்டுத் தொடர்பு இருக்குமானால் அந்நாட்டு மக்கள் விசாலப் பார்வை பெறுவர். எல்லைகளைக் கடந்து அவர்களுடைய வாழ்வியல் பண்பு வளரும். விரிவடையும். நயத்தக்க நாகரிகத்தில் வளர்வர். ஒரு நாட்டு மக்கள் பன்னாட்டு மக்களுடன் தொடர்பு கொள்ளும்பொழுது, அறிவியல் வளரும். தொழில் நுட்பம் வளரும். கருத்துக்கள் பரிமாற்றத்தால் பல ஆண்டுகள் வளர்ச்சியைச் சில ஆண்டுகளில் எளிதில் பெறமுடியும்.'

இனி எதிர்வரும் காலத்தில் உலக நாடுகள் நெருக்கமான நட்புறவை வளர்த்துக்கொண்டு, "ஓருலகம்" காணும் என்னும் நம்பிக்கை வளர்ந்து வருகிறது. ஆதலால், பன்னாட்டுத்தொடர்பை வளர்த்துக்கொள்ளும் வகையில் மாணவர்கள் பலநாட்டு இலக்கியங்களைப் படிக்கும் வழக்கத்தை மேற்கொள்ளவேண்டும். கற்கும் காலத்திலேயே சுற்றுலாச் செல்லும் பழக்கத்தை மேற்கொள்ள வேண்டும். கல்வித்திட்டத்தில் சுற்றுலா கட்டாயமாக்கப்படவேண்டும்.

மனித உலகத்தை விரிவான - பரந்த பண்பாட்டில் நிலைபெறும்படி செய்வது பன்னாட்டுத் தொடர்பேயாம். நேயத்தை வளர்த்து இதயப்பாங்குகளைச் செழுமைப்படுத்துவது. ஆதலால் நமது வாழ்க்கையில் துறைதோறும் பன்னாட்டுத் தொடர்பைக் கொண்டு புதுமை பெறுவோமாக நாட்டுக்கும் நாட்டுக்குமிடையேயுள்ள எல்லைகளைத் தகர்த்து விசாலப் பார்வையுடன் மானிடசமுத்திரத்தில் சங்கமமாவோம். "ஒரே உலகம்! ஒரே இனம்!" என்ற இலட்சிய உணர்வைப் பெறுவோம்.

இன்று அறிவியல், இருபக்கக்கூர்முனைக் கத்தியாக வளர்ந்துவருகிறது. அதாவது, ஒரு பக்கம் வாழ்விற்கு ஆக்கம். மறுபக்கம் கொடிய போர்க்கருவிகள் மூலம் அழிவு. அழிவிலிருந்து இந்த உலகத்தைப் பாதுகாக்க வேண்டியது நம் கடமை. இக் கடமையை நிறைவேற்றப் பன்னாட்டுத் தொடர்பு துணை செய்யும். மானுடத்தின் அறிவும், ஆற்றலும் இந்த உலகத்திற்குப் பொது. இந்த உலகத்தின் வைப்புகள் பொதுவேயாம். மாந்தர்க்கு உலகப் பார்வை ஏற்பட்டுப் பன்னாட்டுத் தொடர்பு கிடைத்ததால்தான் எல்லை கடந்த நிலையில் அறிவுக்கு மதிப்பு ஏற்படும். உழைப்புக்கு உயர்வு கிடைக்கும். அதனாலன்றோ மாமுனிவர் காரல் மார்க்சு, "உலகத்தொழிலாளர்களே ஒன்று சேருங்கள்" என்றார்.

நமது நாட்டு இளைஞர்களும் உலகமாந்தராக உயர்ந்து விளங்க முயற்சி செய்ய வேண்டும். பல மொழிகளைக் கற்கும் முயற்சியில் ஈடுபடுதல் வேண்டும். கடவுள் ஒருவரே! அவர் பெயரால் ஒன்றாக வேண்டும்.

"ஒன்று பரம்பொருள்; நாம் அதன் மக்கள்" என்று பாரதி வாக்கு வெற்றி பெற மாணவர் உலகம் உழைக்க வேண்டும்.

"The Social, intellectual and artistic aspects of the urban-life of ancient Tamils are the most attractive. There are well marked differences in matters of furniture, food, dress habits and customs. In Silapathikaram and Manimekalai, we see more of the description of urban social life than villages. The references to Yavanas are notable-doubtless to Greeks, Roman merchants, sailors and others. In studying the cultural is apt to overlook the parts played by the Greek, Roman Phoenician, Jewish, Egyptian, Ethiopian, Indonesian and Chinese mariners and traders, courtesans, artisans and mendicants, who were more or less constant factors in the urban-life of Tamilakam of those days. Evidently, the sea-coasts of ancient Tamilakam were exposed to such contacts. The littoral tracts which had the full benefits of such inter courses, must have imbibed them and diffused them into the interior. It is true, that it is difficult to spot out microscopically the urban and rural traits in a composite culture and so to say they are inseparable. The emerging characteristics of Tamil Culture are so striking that they cannot be easily ignored".

Dr.T.K.Venkata Subramaniyan, Environment and Urbanisation in Early Tamilakam

# வெளி மொழி ஓம் - சில குறிப்புகள்

## பத்மபூஷண் டாக்டர் வை. கணபதி ஸ்தபதி




மூலச் சிற்பம்
விண் பொருள் / நடராஜன்
**Energy with Matter**
**Celestial energy in Vibrancy**
**(Directly envisioned by Maamuni Mayan)**

| | | | |
|---|---|---|---|
| பரம்பொருள் | எங்கும் உண்டு | பெருங்கலை | யாண்டும் உண்டு |
| பரம்பொருள் | உணர்வினாலே | ஒலிவழி | பாடு கண்டேன் |
| பரம்பொருள் | அருவினாலே | திருநட | ராசன்கண்டேன் |
| பரம்பொருள் | அருவினாலே | பெருங்கலை | படைத்தேன்காண்பீர் |

[வை:1166]

| | | | |
|---|---|---|---|
| எண்ணுதற் | கரிய கோலம் | எழுதுதற் | கரிய கோலம் |
| நண்ணுதல் | செறிய கோலம் | நவையுறும் | ஆடல்வல்லான் |
| புண்ணிய | திருக்கோலத்தை | பொற்புற | அமைத்த லாலே |
| திண்ணமாம் | அருள்பெற்றோங்கும் | திருமயன் | சிற்ப மென்னே |

[வை:633]



## ஓம்ஒளி / ஓம் ஒலி

"மெய்யொளி உயிரொலி சிவனுதல் இயல்பே" – மயன்

"உடம்புடன் உயிர் வந்து ஒன்றுவது இயல்பே" – தொல்காப்பியம்

"ஒளி முதற் கண்ட விண்ணொலி ஓசை,

வெளிமொழி ஓம் என விளம்பற்பாற்றே" – மயன்

"ஓம் ஒலி கேட்டுணர்ந்தால் உள்ளொளி ஞானம் தோன்றும்,
ஓம் ஒளி கண்டுணர்ந்தால் ஒளியொளிர் உருவே தோன்றும்!
ஒளியொளிர் உருவந்தானே ஆடலன் ஆடலன்றோ" –மயன்

உள்ளதை உள்ளபடி அல்லாது உணர்ந்தபடி பேசுதல் – கவிதை

உணர்ந்தபடி செய்தல் – சிற்பக்கலை.

சிற்பியே சிற்பமாகிறான், கவிஞனே கவிதையாகிறான் (ஸ்தபதியின் அனுபவம்)

சொல்லும் பொருளும் சிவசக்தி போல் பிரிக்க முடியாத சக்திகள். (காளிதாசன்)

"रसो वै रस : सो वै रसिक : ।।"ரசமும் ரசிகனும் இறைவனே.

**God is the lover and the loved, inseparably blended; like word and form.**

**Through good times and bad times**
**Just one question remains**
**"What are you preparing me for, my God?"**
**Is it to unravel or Is it to interpret the secret of spiritual Art?**




**விண் பொருள் / நடராஜன்**
**Energy with Matter**
**Celestial energy in Vibrancy**
**(Directly envisioned by Maamuni Mayan)**

பரம்பொருள் எங்கும் உண்டு பெருங்கலை யாண்டும் உண்டு
பரம்பொருள் உணர்வினாலே ஒளிவழி பாடு கண்டேன்
பரம்பொருள் அருளினாலே திருநட ராசன்கண்டேன்
பரம்பொருள் அருளினாலே பெருங்கலை படைத்தேன்காண்பீர்

- [வைசம்பாயனம் என்ற நூலில் [1166] பாடல் மயன் / கண்டு சொன்ன ஆன்மிகக் கலைக் காட்சி]





வஸ்து புருஷன் — **மண் பொருள் / ரங்கராஜன்** — வாஸ்து புருஷன்

**Matter with Energy**
**Terrestrial Energy in Vibrant stillness.**
**(Symbolized in human form)**
**Human forms are God's selfmanifest entities.**

பச்சைமா மலைபோல் மேனி பவளவாய்க் கமலச் செங்கண்
அச்சுதா அமரர் ஏறே ஆயர்தம் கொழுந்தே யென்னும்
இச்சுவை தவிர யான்போய் இந்திர லோகம் ஆளும்
அச்சுவை பெறினும் வேண்டேன் அரங்கமா நகருளானே
- தொண்டரடிப்பொடியாழ்வார்

# சிற்றிலக்கம், பேரிலக்கம்

பொறியாளர் கு. வேங்கடாசலம்,
தலைவர், கிழக்குத் தொடர்ச்சிமலைக் காப்பு இயக்கம், வளையாம்பட்டு-செங்கம்.

தமிழில் எண்களைப் பேரிலக்கம், சிற்றிலக்கம் என இருவகையாகப் பிரித்துள்ளனர். பேரிலக்கம் என்பது, ஒன்றுமுதல் அதற்குமேல் குறித்த பேரெண்களைக் குறிக்கும்; சிற்றிலக்கம் என்பது, ஒன்றிற்குக் கீழ் அமைந்துள்ள சிற்றெண்களாகும். சிற்றிலக்க வாய்பாடு, 'மேல்வாய்ச் சிற்றிலக்கம்', 'கீழ்வாய்ச் சிற்றிலக்கம்' என இருவகைப்படும்.

மேல்வாய்ச்சிற்றிலக்கம், முந்திரி (1/320) என்ற பின்னத்தை (Fraction) முதலாகக் கொண்டு, முக்காலே மூன்று வீசம் (15/16) என்ற பின்னம் ஈறாக உள்ள சிற்றெண்களை, முறையே வாய்பாடாக உணர்த்தும் வகையில் அமைந்துள்ளது.

கீழ்வாய்ச் சிற்றிலக்கம், கீழ் முந்திரி (1/1,02,400)என்ற பின்னத்தை முதலாகக் கொண்டு, முந்திரி (1/320) என்ற பின்னம் ஈறாக உள்ள சிற்றெண்களை, முறையே வாய்பாடாக உணர்த்தும் வகையில் அமைந்துள்ளது. மேலும், கீழ்வாய்ச் சிற்றிலக்கம், கீழ்முந்திரிக்குக் கீழுள்ள சிற்றெண்களையும் குறிக்கும். அவை, இம்மி, அணு, மும்மி, குணம், சின்னம், சின்னம் முந்திரி என வகைப்படுத்தப்படும்.

தமிழில் எண்களைத் தமிழ் எழுத்துக்களைக் கொண்டே 'குறியீடு' (Symbol) இட்டு உணர்த்துவர். "எட்டே கால் லட்சணமே"(அவ) என்ற ஔவையார் பாடலை ஓர்க. ஈங்கு, எழுத்தே, எண் ஆதலையும் காண்க. இம்முறை, வேறு எந்த மொழியிலும் இல்லாது, தமிழ்மொழிக்கே உரித்தான தனிச் சிறப்புகளில் ஒன்றாகும். சிற்றிலக்க வாய்பாடின் அமைப்புமுறையினையும், தமிழ்க் குறியீட்டு எண்களையும் "கணக்கதிகாரம்", "கெட்டி எண்சுவடி" என்ற நூல்களில் காண்க.

சிந்துவெளியில் கிடைத்துள்ள எடைக்கற்கள், ஒரு மணங்கு, ஒரு துலாம், இரண்டு தடை, ஒரு தடை, ஒருவீசை, இரண்டுசேர், ஐந்துபலம், நான்கு பலம், பதினாறு வராகனெடை, ஒரு பலம், எட்டு வராகனெடை, இரண்டு கஃசு, நான்கு வராகனெடை, ஒரு கழஞ்சு, நான்கு பணவெடை, இரண்டு பணவெடை என்று கிட்ட காலம் வரை, இந்தியாவில் புழக்கத்தில் இருந்த நிறைகளுக்கு ஈடாகவும், "அன்சியா" என்று ரோமானியர்கள் வழங்கிய எடைக்குச் சமமாகவும், கிரேக்கர்கள் பயன்படுத்திய "சூடெட்" என்ற எடைக்குச் சமமாகவும் உள்ள பலவகை எடைகளைக் காட்டும் நிறைகற்களாகும்.

சிந்துவெளியில் கிடைத்த எடைக்கற்களில், சிறிய எடைக்கற்களின் வீதங்கள், இரண்டின் அடுக்காக அமைந்திருப்பதோடு அல்லாமல், அவற்றின் பெரிய அளவைகளின் எடையில், பத்தில் ஒன்றாகவும் காணப்படுகின்றன.



ரோமர்கள் வழங்கிய நிறைமுறை, "அன்சியா" என்பது. 10 அன்சியா அல்லது 80 வராகனெடை, 2560 குன்றிமணி எடைக்குச் சமம். 80வராகனெடை-8 பலத்திற்குச் சமம். எட்டுப்பலம் என்பது, ஒரு சேர் நிறையாகும். இவ்எடைக்கல்லிற்குச் சமமான எடைக்கல், சிந்துவெளியில் கிடைத்துள்ளது. கோவையை அடுத்துள்ள போத்தனூரில், 1931ஆம் ஆண்டு, 1 1/4 அன்சியா எடைக்குச் சமமான ரோமானியர் நாணயங்கள் 120 கிடைத்துள்ளன. இது, தமிழ்நாட்டில் முன்பு வழக்கிலிருந்த 10 வராகனெடை, அல்லது ஒரு பலம் அல்லது 320 குன்றிமணி எடைக்குச் சமமாகும். மேலும், இந்த ரோமானிய நாணயங்கள், 1931இல் வழக்கிலிருந்து வெள்ளி ரூபாய் 35க்குச் சமம் என்று கோவைக்கிழார் கூறுகிறார். மூன்றரை ரூபாய், ஒரு வராகனெடையாகும். 35 ரூபாய் எடை, ஒரு பல நிறையாகும். இதனால், சிந்துவெளி எடைக்கற்களே, பிற்காலத்தில்,



நாணயங்கள் உற்பத்தி செய்யப்பட்டபொழுது, மூல-அளவாகப் பயன்படுத்தப்பட்டுள்ளது என்பது தெற்றெனப்புலனாகின்றது.

சிந்துவெளியில், 20 பணவெடை அல்லது 80 குன்றிமணி அல்லது ஒரு கஃசு நிறைக்குச் சமமான எடைக்கல், "சூசா"நகரில் கிடைத்த எடைக்கல்லான "ஷேக்கல்" என்ற அளவைக்குச் சமமாக உள்ளது.

எகிப்தியர் நிறையான "சூசெட்", 1295 கிராம் எடைக்குச் சமம். அது 120 குன்றிமணி எடைக்குச் சமம். அதல் 10-இல் ஒன்றான 12 குன்றிமணி எடை, 1.296 கிராம். அது "சூசெட்" என்ற எடையில்இ 10இல் ஒன்றாகும். அவ் எடைக்குச் சமமான கற்களும், சிந்துவெளியில் கிடைத்துள்ளன.

சிந்துவெளியில், சிறந்த முறையில் அமைந்த எடைக்கற்கள் கிடைத்திருப்பதோடு, "லோத்தல்" என்ற இடத்தில், மிகவும் துல்லியமாக நிறுக்க உதவும் உலோகத் துண்டுகள், துளையிடப்பட்டு, நூலில் கோத்துக் கழுத்தில் கட்டித் தொங்கவிட்டுக் கொள்ளும் வகையில் உள்ளன. அச்சிறிய நிறைகள், 50 மில்லி கிராம், 100 மில்லிகிராம் என்று 10இன் அடுக்குகளால் அமைந்துள்ளன. 50மி.கி. என்பது, 1/2 குன்றிமணி எடைக்குச் சமம். தமிழ்நாட்டில், 5 வெண் சிறுகடுகு = ஒரு சீரகம், 5 சீரகம் = ஒரு நெல், 2நெல்= ஒரு பிளவு, 2 பிளவு=ஒரு குன்றிமணி நிறை என்று பொன், மணி இவைகளை நிறுக்க உதவும் வாய்பாடு உண்டு. 100 வெண்சிறுகடுகு, ஒரு குன்றிமணி எடையாகும். மேலே குறித்த எடைகள் யாவும், வெண்சிறுகடுகை அளவீடாகக் கொண்டுள்ளன.

கிட்ட காலம் வரை, நில அளவைக் கணிக்க, 100 குழி ஒரு மா, 400 குழி ஒரு காணி, 2000 குழி ஒருவேலி என்ற அளவுமுறை, பழக்கத்தில் இருந்தது. இதே முறை, முற்காலத்தில் இருந்ததாகச் சங்க இலக்கியத்தில் இருந்து தெரியவருகிறது. தங்கத்துகள்களை நிறுக்க உதவும் வாய்பாடும், நிலத்தின் அளவைக் கணிக்க உதவும் வாய்பாடும் ஒன்றாக அமைந்துள்ளன. நாணயங்கள் புழக்கத்தில் இல்லாத அந்த நாளில், தங்கத்தை நிறுக்கவும், நிலங்கள், வீட்டு மனைகள் இவைகளை வாங்கவும் அந்நிறைகள் பயன்பட்டிருக்கலாம். நிலங்களை அளந்து கணக்கிடத் தமிழில், "குழிமாற்று" என்ற சிற்றிலக்க வாய்பாடு உண்டு.

"கா" என்ற சொல், சிந்துவெளி எழுத்துகளில் காணப்படுவதாகவும், அதுநிறை அளவைக் குறிப்பதாகவும் அறிஞர்கள் கருதுகின்றனர். "கா" என்ற நிறையளவு 100 பலமாகும்.

சிந்துவெளியில் கிடைத்துள்ள எந்த ஓர் எடைக்கல்லிலேனும், அதன் எடையினையோ, அல்லது எண்ணையோ உணர்த்த எந்தவிதக் குறியீடும் இல்லை. இது வியக்கத்தக்கதாக உள்ளது. அம்மக்கள், எம்முறையில், விற்பனை செய்யும் தங்கள் பொருள்களின் எடைகளைப் பிறருக்கு உணர்த்தினர் என்பது தெரியவில்லை. அவ்எடைக்கற்களைக் கடுகு, சீரகம், கொள், ஐயவி, நெல், குன்றிமணி, காணம், கஃசு, தொடி, பலம், மா, வரை, அந்தை என்பனவற்றுடன் ஒப்பிட்டு வழங்கியிருக்கலாம். அப்பொருள்களையே அளவு, நிறை இவற்றின் வாய்பாடுகளில், தமிழர்கள் குறிப்பிட்டு வழங்கினர் போலும்.

வணிகர்களிடையே எண்களை மறைவிடமாக வழங்கும் பலவித பரிபாஷைகள் உண்டு. இப்பழக்கம், எல்லாக் காலங்களிலும், எல்லா மக்களிடமும் இருந்து வந்திருக்கின்றது. இதுபோன்றே, சிந்துவெளி மக்கள், ஏதோ ஒருமுறையில், எடைக்கற்களின் மதிப்பைக் குறிக்காமல், எடைகளைப் பிறருக்கு உணர்த்தி எடைக்கற்களைப் பிறநாடுகளுக்கும் உடன் எடுத்துச் சென்று, வாணிகம் செய்திருக்கின்றனர்.

இருக்கு வேதம், அதர்வணவேதம், கௌடில்ய அர்த்த சாஸ்திரம் ஆகியவற்றில் அளவு, நிறை ஆகிய இவற்றின் பெயர்களும், அளவைகளும் ஆங்காங்கே குறிக்கப்பட்டிருப்பினும், பண்டமாற்றலுக்கு அடிப்படையான, சிற்றிலக்க வாய்பாட்டினைப் பற்றிய குறிப்போ, இலக்கணமோ இருப்பதாகத் தெரியவில்லை. மேலும், அந்நூல்களில் கொடுக்கப் பட்டிருக்கும் அளவைகள், நிறைகள், யாவும் தமிழிலுள்ள "சிற்றிலக்க வாய்பாட்டின்" அடிப்படையிலேயே அமைந்து காணப்படுகின்றன. "வேதகால இலக்கியங்களில், கணிதத்திற்கு, நான்கு அடிப்படைச் செயல்களான கூட்டல், கழித்தல், பெருக்கல்,



வகுத்தல் என்பன, எங்குமே சிறப்பாகப் பேசப்படவில்லை. ஏனெனில், அவை யாவும் சாதாரணச் செயல்களாதலால், ஒருவித விளக்கமுமின்றி ஏற்றுக்கொள்ளப்பட்டன" என்று "இந்திய விஞ்ஞான வரலாற்றுச் சுருக்கம்" என்ற நூல் கூறுகிறது.

ஒரு பலநிறை (320 குன்றிமணி)க்குச் சமமான எடைக்கற்கள், சிந்துவெளியில் கிடைத்துள்ளன. ஆனால், சிந்துவெளி நாகரிகக் காலத்திற்கு ஆயிரம் ஆண்டுகளுக்குப் பின்பு எழுதப்பட்ட வேதங்களில், ஒரு"முஷ்டி"அல்லது,"ஒருகைப்பிடி"நெல்லின்எடையே,மூல-அளவாகக் குறிக்கப்பட்டுள்ளது. இது வியப்பாகவும், ஆராய்ச்சிக்குரியதாகவும் உள்ளது. வேதங்களுக்குப் பின் எழுந்த வடமொழி நூல்களில், கீழ்க் காணும் அளவை-முறைகள் குறிக்கப்பட்டுள்ளன.

| | | |
|---|---|---|
| 8 முஷ்டி (கைப்பிடி) நெல் | - | குஞ்சி |
| 8 குஞ்சி (64 கைப்பிடி) | - | புஷ்கலா |
| 4 புஷ்கலா (256 கைப்பிடி) | - | அதாகா |
| 4 அதாகா (1024 கைப்பிடி) | - | துரோணா |
| 8 துரோணா (8190 கைப்பிடி) | - | குல்யா |

மூல-அளவான பலம். 320 குன்றிமணி எடைக்குச் சமம் என்பது, வேதங்களுக்குப் பின் எழுந்த வடமொழி நூல்களில் அருகியே காணப்படுகின்றது. வேதங்கள் முதல் புராணங்கள் ஈறாக உள்ள வடமொழி இலக்கியங்களில்; பெரும்பாலான பகுதிகள் அக்காலத் திராவிடர்களின் நூல்களிலிருந்து (இன்று இறந்துபட்டன.) மொழிபெயர்க்கப்பட்டவை என்று ஹுராசுப் பாதிரியார் கூறுவதை இங்கு ஒப்பு நோக்குக.

தமிழ்மொழியின், முதல் நூலென்று கருதப்படும் தொல்காப்பியத்தின் மூலம், இச்சிற்றிலக்கிய வாய்பாடும், ஏனையை அளவும் நிறையும் எண்ணும், தொன்று தொட்டு, வழக்கில் இருந்தமை அறியக் கிடக்கின்றது. இது பற்றிய குறிப்புகள், சங்க- இலக்கியங்களிலும் பரந்து காணப்படுகின்றன.

அளவு எண்ணுப் பெயர்கள் தம்மிற்புணருமாறு,
உயிரும் புள்ளியும் இறுதியாகி,
அளவும் நிறையும் எண்ணுஞ் சுட்டி,
உளவெனப் பட்ட எல்லாச் சொல்லும்,
தத்தங் கிளவி தம்மகப் பட்ட
முந்தை வருஉங் காலந் தோன்றின்
ஒத்த தென்ப ஏயென் சாரியை (தொல்.எழுத்து. 164.)

பொருள்-உயிரும் புள்ளியுந் தமக்கு ஈறாய், அளவும் நிறையும் எண்ணும் கருதி வருவன உளவென்று ஆசிரியரால் கூறப்பட்ட எல்லாச் சொற்களும், தத்தமக்கு இனமாகிய சொற்களாய்த் தம்மிற் குறைந்த சொற்கள், தம்முன்னே வருங்காலம் தோன்றுமாயின் தாம் ஏயென் சாரியை பெற்று முடிதலைப் பொருந்திற்றென்பார், ஆசிரியர்.

அரையெனவரூஉம் பால்வகை கிளவிக்குப் புரைவதென்றால், சாரியையியற்கை (தொல்.எழுத்து. 165)

பொருள் - அம்மூவகைச் சொன்முன்னர், வரும் அரையென்று, சொல்லவருகின்ற பொருட்கூற்றை உணர நின்ற சொல்லிற்கு, ஏ யென் சாரியை பெறுந்தன்மை பொருந்துவதன்று.

(எகா) அரைவீசம், அரையே வீசம், கால்வீசம், காலே வீசம், ஒன்றரை, ஒன்றேகால் முதலியன.

இரண்டு முதல் ஒன்பது ஈறாக உள்ள எண்முன் மா என்னும் சொல்,
இரண்டு முதல் லொன்பான் இறுதி முன்னர்
வழங்கியல் மாவென் கிளவி தோன்றின்
மகா அளவொடு நிகரலு முரித்தே. (தொல்.எழுத்து.480)



பொருள்- இரண்டு முதலாக ஒன்பது ஈறாக நின்ற எண்ணுப் பெயர்களின் முன்னர், வழக்கின் கண்ணே நடந்த அளவு முதலியவற்றிற்கு

உரிய மாவென்னுஞ்சொல் வருமொழியாய் வரின் அவ்வெண்ணுப் பெயர்களின் முன்னர்த் தந்து புணர்க்கப்படும் மண்டையென்னும் அளவுப் பெயரோடு ஒத்து விகாரப்பட்டு முடிதலும் உரித்து.

எ.கா. இருமா, மும்மா, நான்மா, ஐம்மா, ஆறுமா, எண்மா, ஒன்பதின்மா என முன்னர்க்கூறிய சூத்திரங்களின் விகாரப்படுத்தி முடிக்க, இனி, உம்மையான் விகாரப்படுத்தாது, இரண்டுமா, மூன்றுமா, நான்குமா, ஐந்துமா, ஆறுமா, எட்டுமா, ஒன்பதுமா என முடிக்க. புள்ளி மயங்கியலுள் அளவு நிறையும் (எழு. 389) என்னும் சூத்திரத்தான் நெடுமுதல் குறுகி, உகரம் வந்து புணருமாறு கூறினார். அதனால், ஈண்டு எழுமா என முடிக்க.

இரண்டு முதல் ஒன்பானென்று எடுத்தோதினமையின் ஒன்றற்கு ஒருமாவென்னும், முடிவேயன்றி, ஒன்றுமாவென்னும் முடிவு இல்லையாயிற்று.

அளவு, நிறை, எண்களைப் பற்றின வாய்பாட்டிற்கு இலக்கணம் தொல்காப்பிய எழுத்ததிகாரத்தில் மிக விரிவாக எழுதப்பட்டிருக்கிறது.

மக்களின் வாழ்க்கையில், பேசுவதற்கு மொழி (எழுத்து) அடிப்படையாக அமைந்துள்ளதுபோல், மக்களின் வாழ்க்கைக்குத் தேவையான பண்டமாற்றலுக்கும், பொருள் ஈட்டுதலுக்கும், இன்ன பிறவற்றிற்கும் அடிப்படைத் தேவையான பல்வேறு வகையான கணித வாய்பாடுகள், பழங்கால மக்களிடையே வழக்கிலிருந்த காரணத்தினாலன்றோ, தொல்காப்பியர் விரிவான இலக்கணம் வகுத்துள்ளார். தமிழ்க் கணித முறையில், பேரெண், சிற்றெண், மேல்வாய்ச் சிற்றிலக்கம், கீழ்வாய்ச் சிற்றிலக்கம், நெல்லிலக்கம், குழிமாற்று முதலிய வாய்பாடுகள் உள்ளன.

வடகிழக்கு மாநிலங்களில், யாஷ்டி, (1/320), ரேக் (1/80), பான் ((1/20), கஹான் (1/320), சிக்கி (1/80), பிகா (1/20), புற (4/20), முதலிய பின்னங்கள், கிட்ட காலம்வரை வழக்கில் இருந்து வந்திருக்கின்றன. இவையாவும் சிற்றிலக்க வாய்பாட்டின் அடிப்படையிலேயே அமைந்திருப்பதால், சிற்றிலக்க வாய்பாடு அங்கும் செல்வாக்குப் பெற்றிருக்கலாம்.

மலேய நாடுகளிலும் இம்மாதிரியான வாய்பாடு வழக்கில் இருந்ததாக சடோப்பாத்தியாயா அவர்கள் குறிப்பிடுகிறார். தமிழ் அரசர்கள் ஆட்சிக்காலத்தில் மலேய தீபகற்பத்திற்கும் சிற்றிலக்கம் பரவியிருக்கலாம்.

தொல்காப்பியர் நிறுத்தலளவையைப் பல இடங்களில் குறிப்பிடினும், நிறைப் பெயராக கா என்பதை மட்டுமே குறிக்கிறார். அவர் காலத்தில், வேறு பல அளவு நிறைப் பெயர்களும் வழக்கில் இருந்திருக்கலாம் எனத் தொல்காப்பியச் சூத்திரங்களிலிருந்து அறியலாம். அளவுப் பெயராக, பனை, பதக்கு, தூணி, உரி, நாழி இவைகளைக் குறிக்கின்றார்.

தொல்காப்பியத்தை அடுத்துச் சங்க காலத்திற்கு வரும்போது, கழஞ்சு, கா என்னும் நிறைப்பெயர்களும் கிடைக்கின்றன. திருக்குறளில், தொடி, கஃசு, குன்றி என்ற பெயர்கள் காணப்படுகின்றன. சிலப்பதிகாரம், கழஞ்சு என்னும் நிறைப்பெயரை மட்டும் குறித்துச் செல்கின்றது. மற்றும் முகத்தல், எண்ணல் அளவைகளும், சங்க இலக்கியத்தில் ஆங்காங்கே காணப்படுகின்றன.

சிலப்பதிகாரம், "நிறைகோல் துலாத்தர் பறைகட் பராரையர், அம்பண அளவையர் எங்கணும் திரிதர" (14:208-209) என்று கூறுவதனால், பண்டமாற்றலுக்கு அடிப்படைத் தேவையான சிற்றிலக்க வாய்பாட்டினை, முற்றும் உணர்ந்தவர்கள் அங்கு இருந்திருக்க வேண்டும் எனத்தோன்றுகிறது. தனிப்பாடல் குறிப்புகளிலும் இச்சிற்றிலக்க வாய்பாடு, சீரிய இடத்தைப் பெற்றுள்ளது.

சிற்றிலக்க வாய்பாடு தொன்றுதொட்டு தமிழகத்திலேயே பிறந்து, வளர்ந்து இன்றுவரை அழிந்துவிடாமல், தமிழ்மொழிபோல், வாழ்ந்து வருகிறது. சிந்து முதல் மற்ற இடங்களுக்கும் சென்று வாழ்ந்தும் வருகிறது. அந்நாளில் சிந்துவரை வாழ்ந்தவர் தமிழரே எனக்கொள்ளல் மிகையாகாது. சிந்துவெளி எழுத்துக்களை மொழிபெயர்த்த ஹீராசுப் பாதிரியார், அந்நாளில் சிந்துவெளியில் வாழ்ந்த மக்கள் திராவிடமொழி பேசிய திராவிடர்களே என்றும், திராவிடர்கள் தென்கோடியிலிருந்து வடகோடி வரை சென்று வாழ்ந்தனர் என்றும், மேலும் அவர்கள் அங்கிருந்து சிரியா, சைப்பிரஸ், மால்டா, எகிப்து, வட-ஆப்பிரிக்கா, இத்தாலி, ஸ்பெயின், ஃபிரான்சு, ஜெர்மனி வழியாக இங்கிலாந்துக்கும், அயர்லாந்துக்கும் சென்றனர் என்றும் கூறியுள்ளார். இக்கூற்று, மேற்சொன்னவற்றை மெய்ப்பிக்கும்.

# ஒருலகக் கொள்கைக்கு உகந்தவை தமிழ்ப் பண்பாடும், தமிழர் நாகரிகமும்

**ஞானி**
**ஆசிரியர், 'தமிழ்நேயம்', கோவை.**

உலகின் முதல் நாகரிகங்களில் குறிப்பாகத் தமிழ்நாகரிகத்தில் ஆதிக்கங்களுக்கு இடம்தராத ஒருலகக் கொள்கை தொன்மைக் காலத்திலேயே இடம்பெற்றிருப்பதைக் காணமுடியும். தமிழைச் செம்மொழி என உறுதிப்படுத்தும் முறையிலான கொள்கைகளைத் தமிழ் தனக்குள் கொண்டுள்ளது. சிதறிக்கொண்டிருக்கிற உலக நாகரிகத்தைச் சிதறவிடாமல் காக்கும் திறன் செம்மொழியாகிய தமிழுக்கு உண்டு. உலக வரலாறு இறுதி எல்லைக்கு வந்துவிட்டதைப்போன்ற நெருக்கடிகள் நிலவும் நம் காலத்தில் உலகை அழிவுறாமல் காக்கும் திறன் தமிழுக்கு உண்டு. தமிழின் தொன்மையை ஐயாயிரம், பத்தாயிரம் ஆண்டுகளுக்குமேலும் கொண்டு செல்ல முடியும்.

நாகரிகத்தின் உச்சங்களைத் தமிழர்கள் கண்டிருக்கின்றனர். நகரநாகரிகம், உலகளாவிய கடல் வாணிகம், நாடுகள் பலவற்றை வெற்றிகொண்டமை, கலைகளில் உச்சம், தன்னிகரற்ற இலக்கிய வளம், மெய்யியல் வளம் என எவ்வளவோ வளர்ச்சி நிலைகளைத் தமிழர் நாகரிகம் ஆயிரமாண்டுகளுக்கு முன்பே கண்டிருக்கிறது. வாழ்வின் மேடுபள்ளங்களெனப் பலவற்றைக் கடந்து வந்திருக்கிறது. அதிகார வெறியோ, செல்வப்பெருக்கமோ மனித வாழ்வில் அமைதியைத் தரமுடியாது. உழைப்பும் பகிர்வுமன்றி வாழ்வில் உயர்பண்பில்லை. அன்பும் அறிவுமே மனிதனுக்குரிய உண்மையான செல்வங்கள். இத்தகைய பேருண்மைகளை, பலகாலம் வாழ்ந்து பல்வேறு அனுபவங்களைக் கடந்து தனக்குள் கொண்டிருக்கிற தமிழ்நாகரிகம் உண்மையில் மனிதர்களைச் சிதைவிலிருந்து இன்றும் காப்பாற்றமுடியும். இதன் காரணமாகத்தான் ஒருலகக்கொள்கைக்கு உகந்தது தமிழர் நாகரிகம், தமிழர் பண்பாடு என்பதை நாம் உறுதியாகச் சொல்லுகிறோம்.

# தலவிருட்சங்கள்

**கவிஞர் மரு. பரமகுரு**
**குன்றக்குடி**

மரம் செடிகொடிகளால் பயனும் இன்பமும் பெற்ற மனிதர்கள் அவற்றைக் கடவுளாகவும், கடவுளரின் இருப்பிடங்களாகவும் கருதி வழிபட்டனர். இந்த வழிபாட்டின் எச்சங்களே தலவிருட்சங்கள்.

கடம்பமர் நெடுவேள் (பெரும்பாண்-75), செல்வக் கடம்பு அமர்ந்தான் (ஐந்திணை ஐம்பது-1), காடுகெழு நெடுவேள்(அகம்-382) என்று முருகனையும், தொன்றுறை கடவுள் சேர்ந்த பராரை (நற்-303), தெய்வம் சேர்ந்த பராரை, வேம்பு (அகம்-309), கள்ளிநீழற்கடவுள் (புறம்-260), மன்ற மராஅத்த பேஎமுதிர் கடவுள் (குறுந்-87), எரிமருள் வேங்கைக் கடவுள் (நற்-216), கடவுள் ஆலத்து உகுபலி அருந்திய தொகுவிரற் காக்கை (நற்-343) என்று சங்க இலக்கியங்களும், சங்கமருவிய இலக்கியங்களும் மரங்களைச் சார்ந்து இறைவன் விளங்குவதையும், அந்த மரங்களின் அடியில் வழிபாடு நடந்ததையும் குறிக்கின்றன. இவ்வாறான குறிப்புகளை, அந்த இலக்கியங்களில் பரக்கக் காணலாம். சைவத்திருமுறைகள்,

"கல்லாலின்கீழ் அறங்கள் சொல்லினான்காண்' 'வெண்நாவல் மேவிய வெம் அழகா' 'புன்னை நன் னீழற் கீழமரும் இறை' என்றெல்லாம் மரங்களின் கீழ், இறைவன் எழுந்தருளியிருப்பதைக் குறிப்பிட்டுப் பேசும்.

இவ்வாறு மரங்களை இறைவனாகவும், இறைவன் உறையும் இடங்களாகவும் கண்டனர், தமிழ்மக்கள். இறைவன் எழுந்தருளியுள்ள திருத்தலங்களில் பல, மரம்,செடி, கொடிகளின் பெயர்களைப் பெற்றிருப்பது பலரும் அறிந்த செய்தி. தேவாரம் பெற்ற திருத்தலங்களுள், கடம்பவனம், திருக்கடம்பந்துறை, புன்னைவனம், ஆலம்பொழில், திருக்குற்றாலம், வடதிருமுல்லைவாயில், திருஇரும்பூளை முதலிய தலப்பெயர்கள் இதற்கு எடுத்துக்காட்டுக்களாகும். இப்படிப் பல திருத்தலங்கள் தலவிருட்சங்களின் பெயர்களால் வழங்கப்பெறுகின்றன. மேலும், அத்திருத்தலங்கள் பலவற்றில் எழுந்தருளியிருக்கும் இறைவனும் அந்தந்தத் தலவிருட்சங்களின் பெயர்களையே பெற்றுள்ளான் என்பதும் குறிப்பிடத்தக்கது. சான்றாக, கடம்பவனநாதர், புன்னைவனநாதர், மருதீசர், குற்றாலநாதர், கதலிவனநாதர் என்ற திருப்பெயர்களைக் கூறலாம். இவ்வாறு தலவிருட்சங்கள் தலங்களின் பெயர்களாகவும், தலங்களில் எழுந்தருளியுள்ள இறைவனின் பெயர்களாகவும் வழங்கப்பெறுவது தல விருட்சங்களின் பெருமையை உணர்த்துவனவாகும்.

மரங்களையே இறைவனாகக் கருதி வழிபட்ட தொல்பழங்கால மக்கள், அந்த மரங்கள் வயதாகி மொட்டையாகி விட்டநிலையிலும் இயற்கையின் சீற்றத்தால் முறிந்துபோன நிலையிலும் அவற்றையே இறைவன் குறிகளாகக் கொண்டு வழிபட்டார்கள் என்பதும், அந்தக்காலமே இலிங்க வழிபாட்டின் தொடக்கக்காலம் என்பதும் அறிஞர்கள் கருத்து. இந்தக் குறிகளே, காலப்பழமையால் தானே கல்லாய் விளைந்து இலிங்கமாயின என்றும் கூறுவர். இப்படி மரம் கல்லாக விளைந்த இலிங்கங்கள் பல திருத்தலங்களில் உள்ளன. அவற்றுள் மதுரையிலுள்ள சோமசுந்தரர் கடம்பமரலிங்கம்,





திருக்களம்பூரிலுள்ள கதலிவனநாதர் வாழைலிங்கம், திருவாவடு துறையிலுள்ள கோமுத்தீசுவரர் அரசு லிங்கம், திருவிற்குடியிலுள்ள வீரட்டானேசுவரர் துளசிலிங்கம், திருக் களரிலுள்ள பாதாளேசுவரர் நெல்லிலிங்கம், இலுப்பைக் குடியிலுள்ள தான்தோன்றீசுவரர் இலுப்பைலிங்கம் என்று கூறப்படுகின்றன.

இஃதன்றி, வழிபட்ட மரம் அறவே அழிபட்டுப் போன நிலையில், அந்த மரம் இருந்த இடத்திலும், வழிபடும் மரத்தின்கீழும் மரக்கிளையை வெட்டி வடிவமைத்து நட்டும் வழிபாடு செய்தனர். இப்படி அமைந்த மரலிங்கங்கள் 'தறி' என்று பெயர் பெற்றன. தறித்தல் என்றால் வெட்டுதல், முறித்தல் என்று பொருள். இப்படி மரத்தாலான, தறிபோல காலப்போக்கில் கல்லாலும், தறிநிறுவி வழிபடப் பெற்றது. இவை நட்டு வழிபடப்பட்டவையாதலால் நடுதறி என்று பெயர் பெற்றது. கன்றாப்பூர் நடுதறியைக் காணலாமே என்னும் அப்பரடிகளின் திருவாக்கால் இதனை உணரலாம்.

மரத்தறி வழிபாடும் கல்தறி வழிபாடும் வளர்ந்த காலத்தில் அவ்வுருவங்களைப் பாதுகாக்கும் வகையில் மரத்தால் அவற்றுக்கு ஆலயங்கள் அமைத்தனர். இவ்வாறு, இறைவன் உறையும் கோயில்களாக மரங்களும், கோயில்கள் மரத்தாலும் அமைந்தன என அறிகின்றோம். ஆலயம் என்ற சொல் கோயிலைக் குறிக்கும். ஆல் ஐயன் இடம் ஆலயம் எனப்பட்டது என்பார் அறிஞர் நசிகந்தையாபிள்ளை. இதனால் மரம் இருந்த இடத்திலேயே கோயில்கள் இருந்தன என்றும் உணரலாம்.

இவ்வாறு வழிபாட்டுத் தலங்களிலிருந்த மரங்கள் தலவிருட்சமாகத் திகழ்வது மட்டுமின்றி, ஞானிகள் அமர்ந்திருந்த மரங்களும் தலவிருட்சங்களாகப் போற்றப்பெற்றுள்ளன. அரசமரத்தின்கீழிருந்து புத்தர் ஞானம் பெற்றார். அந்த அரசமரம் போதிமரம் என்ற பெயரால் தலவிருட்சமாக நின்று நிலவுகிறது. ஆலின் கீழ்அமர்ந்து அறம் உரைத்தவர் ஆலமர்செல்வர்.



அந்த ஆலமரம் தலவிருட்சமாகப் போற்றப் பெறுகிறது. மாணிக்கவாசகருக்குத் திருப்பெருந் துறையில் குருந்த மரத்தடியில் இறைவன் குருவாக எழுந்தருளி உபதேசித்தான். அந்தக் குருந்த மரம் திருப்பெருந்துறைத் தலவிருட்சமாகி உள்ளது. திருக்குருகூரில் நம்மாழ்வார் யோகத்தில் அமர்ந் தருளியிருந்த புளியமரம் அந்த ஊர்த் தலவிருட்சமாக விளங்குகிறது. அந்தப் புளிய மரத்தை ஆழ்வாராகவே கருதி, திருப்புளியாழ்வார் என்று கூறுவது வைணவ சம்பிரதாயமாகும்.

திருக்கோவில்திருவிழாக்களின்போது கொடிமரத்தில் காப்புக்கட்டுவது வழக்கம். ஆனால், கொடிமரத்தில் கட்டாமல் சில ஊர்த் திருக் கோயில்களில் ஆங்காங்கே உள்ள மரங்களிலும் காப்புக் கட்டுவதை இன்றும் காணலாம். இவ்வழக்கம் வலையபட்டி மலையாண்டி கோயிலிலும் சில சிவன்கோயில்களிலும் இருந்து வருகிறது. இதனால் கொடி மரமும் தலவிருட்சமும் ஒன்றில் ஒன்று வளர்ச்சி அடைந்திருக்கலாம் என்று எண்ணப்படுகிறது. 'கொடி மரம் போன்ற மரத்தூண்கள் ஆலயங்களில் நிறுத்தப்பட்டு ஆண்டுவிழாக் காலங்களில் கிரியைகளுடன்



வழிபடப்பட்டன. கொடிமரத்தின் நுனியில் மூன்று கிளைகள் காணப்படுதலால் அம்மரங்களுக்கும் கிளைகள் இருந்தன. தலவிருட்சமே காலத்தில் கொடிமரமாக மாறியுள்ளதோ என்பது ஆராயத்தக்கது' என்று early history of assyria என்ற நூலின் ஆசிரியர் கூறுவார். இவர் கருத்து, முன்சொல்லப்பட்ட எண்ணத்திற்கு அரண் செய்கிறது.

மரங்களால் உயிர்கள் பெற்றுவரும் பயன்கள் எண்ணிலாதவை. அப்பயன்களை நேர்முகப் பயன்கள் என்றும், மறைமுகப் பயன்கள் என்றும் இருவகைப்படுத்திக் கூறலாம். தொல்பழங்காலத்தில் நேர்முகப் பயன்கள் மட்டுமே அறியப்பட்டன. நேர்முகப் பயன்களை ஆரத்துய்த்த அக்காலத்து மக்கள் இறைவனாகவும் இறைவன் உறையும் இடமாகவும் மரங்களை எண்ணி வழிபட்டனர். காலப்போக்கில் மரங்கள், தாவரங்கள், மருத்துவப் பயன் அளிப்பதைக் கண்டுணர்ந்தனர். அதனால், சித்தமருத்துவம் வளர்ந்தது. உடற்பிணி தீர்க்கும் தலவிருட்சங்கள் பல உள்ளன. அரசு, வேம்பு, வில்வம், துளசி, முதலியன மருத்துவப் பயன் அளிப்பதில் சிறந்தவை. தலவிருட்சங்களில் சில நீங்கலாக, மற்ற யாவுமே ஏதேனும் ஒருவகையில் மருந்தாகப் பயன்படுபவையே. துளசி, வில்வம், வேம்பு ஆகியவற்றின் இலைகள், பூசனைக்குப் பின் பிரசாதமாக வழங்கப் பெறுவதும் அவற்றை உண்பதும் வழக்கமாக உள்ளது.

சேர்ந்து, பிணைந்திருக்கும் அரசமரத்தையும் வேப்பமரத்தையும் மகப்பேறில்லாத பெண்கள் சுற்றிவந்து வழிபட்டால் மகப்பேறு வாய்க்கும் என்ற நம்பிக்கை இருக்கிறது. இந்த மரங்களைச் சுற்றுவதால் அந்தப் பெண்களின் கருப்பை விரிவடைகிறது என்றும், அதனாலேயே குழந்தைப் பேறு வாய்க்கிறது என்றும் கூறப்படுகிறது. மக்கள் சுவாசித்து வெளியிடும் கரியமில வாயுவை மரங்கள் சுவாசித்து உயிர்க்காற்றாகிய பிராணவாயுவை வழங்குகின்றன. ஓர் அரசமரம் 1800 கிலோ கரியமில வாயுவை உட்கொண்டு 2400 கிலோ பிராண வாயுவை உற்பத்தி செய்து தருவதாக அறிவியல் உலகம் சொல்கிறது. இவ்வாறு எல்லாவகையாலும் மனிதனும் மற்ற உயிர்களும் மரங்களைச் சார்ந்தே வாழ்கின்றனர். வாழவைப்பதே தெய்வம். அதனால்தான் மரங்களைத் தலவிருட்சங்களாக வணங்கும் பண்பாடு தோன்றி வளர்ந்து வந்துள்ளது. தேவாரப் பாடல்* பெற்ற திருத்தலங்களில் இப்போது 91 திருத்தலங்களுக்கு மட்டும் 48 வகை மரங்கள் தலவிருட்சங்களாக அறியப்படுகின்றன. இந்த விருட்ச வகைகளை வளர்ப்பது நம் கடமை. மக்கட்பெருக்கமும், எந்திரப் பெருக்கமும் மலிந்து விட்ட இந்நாளில், மரங்களை வளர்ப்பதும், பேணுவதும் உயிர்க்கடமையாகும்.

# உலகமொழிகளும் தமிழும்

**டாக்டர் ச. அகத்தியலிங்கம்**

**முன்னாள் துணைவேந்தர், தமிழ்ப்பல்கலைக்கழகம், தஞ்சாவூர்**

இந்திய மொழிகளிலேயே தமிழ்மொழிதான் இலங்கை, மலேசியா, சிங்கப்பூர், கயானா, தென்னாப்பிரிக்கா, பர்மா, பீஜி, மோரிசு, மடகாஸ்கர், வியட்னாம், மார்ட்டினிக், டிரினிடாட் போன்ற நாடுகளில் எல்லாம் பேசப்படுகிறது-

இந்தியநாட்டில், 1700க்கு மேற்பட்ட மொழிகள் உள்ளன என்பர். இவற்றுள் பல தனிமொழிகள், பல கிளைமொழிகள், சில நன்கு அறியப்பட்டு அறுதியிடுவதற்குரிய நிலையில் இருக்கும். இன்னும் பல அறியப்படாதநிலையில் அறுதியிட முடியாத தன்மையில் இருக்கும். இந்திய நாட்டில் பேசப்படும் மொழிகளனைத்தையும்,

1. இந்தோ- ஆரிய மொழிகள் (321,720,700)
2. திபெத்திய-பர்மிய மொழிகள் (3,183,801)
3. ஆஸ்டிரிக் மொழிகள் (6,192,495)
4. திராவிட மொழிகள் (107, 410,820)

என்ற நான்கு பெரும்பிரிவில் அடக்கலாம். இந்தோ- ஆரியமொழிகளை 73 சதவீதத்தினரும், திராவிட மொழிகளை 24.4 சதவீதத்தினரும், திபெத்திய-பர்மிய மொழிகளை 73சதவீதத்தினரும் பேசிவருகின்றனர். -திராவிட மொழிகளைத் தென்திராவிட மொழிகள் (தமிழ், மலையாளம், கன்னடம், துளு, குடகு, கோத்தா, தோடா)என்றும், மத்திய திராவிட மொழிகள் (தெலுங்கு, கோண்டி, கோயா, கூயி, கூவி, கோலாமி, பர்ஜி, கதபா, கொண்டா, நாயக்கி, பெங்கோ, மண்டா) என்றும், வடதிராவிட மொழிகள் (குரூக், மால்டோ, பிராகுவி) என்றும் மூன்று பிரிவுகளாகப் பிரிப்பர்.

திராவிடமொழிகள் மிகப்பழைமையான மொழிகள் என்பதும், மூவாயிரம் ஆண்டுகட்கு முன்னரே இந்தியத்திருநாட்டில் வழக்கத்திலிருந்து வந்துள்ளன என்பதும் இன்றைய மொழியியலாளர்களின் கொள்கை. இந்தோ-ஆரிய மொழியாகிய சமஸ்கிருதம் இந்நாட்டில் நுழைவதற்கு முன்னமே திராவிடமொழிகள் வழக்கத்திலிருந்தன. மொஹஞ்சதரோவில் கண்டெடுக்கப்பட்ட கல்வெட்டுகள் திராவிட மொழியைச் சார்ந்தன என ஹீராஸ் போன்றவர்கள் குறிப்பிடுகின்றனர். பிராகுவி மொழி பலுசிஸ்தானத்திலும், மால்டோ மொழி வங்காளத்திலும், குரூக், கோண்டி போன்ற மொழிகள் மத்திய இந்தியாவிலும் பேசப்படுவதைக் கொண்டு திராவிடமொழிகளின் பரப்பினையும் அவற்றின் பழைமையையும் அறியலாம். திராவிட மொழிகளில் ஒன்றாகிய தமிழ்மொழியைப் பேசும் தமிழ்மக்கள் மிகப்பன்னெடுங்காலமாகவே, தங்களுக்கெனச் சிறந்ததொரு இலக்கியப் பாரம்பரியத்தை உருவாக்கி அதனைக் கட்டிக்காத்து வந்துள்ளனர். மிகப்பழங்காலத்தே ஆரியமொழியான சமஸ்கிருதத்துடன் தொடர்பு கொண்டிருந்தபோதிலும் தனக்குரிய தனிப்பண்புகளைப்பேணி வந்திருத்தலை அன்றுமுதல் இன்றுவரை காணமுடியும். ஆனால், காலப்போக்கில் சமயம்,வாழ்வுச்சடங்குகள் போன்றவற்றில் எல்லாம் சமஸ்கிருதமொழியில் செல்வாக்கு ஊருடுவி நிற்றலைக் காணலாம்.சமஸ்கிருதமொழியில் காணப்படும் நாமடி ஒலிகளைப் பற்றி (Retroflex) பேசப்புகுந்த பாட் இவ்வொலிகள் இம்மொழியில் ஏராளமாகக் காணப்படுகின்றன' என்றும், 'இவை அனைத்தும் இந்திய நாட்டில் பேசப்படும் பிறமொழிகளிலிருந்து வந்தவை' என்றும் குறிப்பிடுவார். திராவிட மொழியியலின் தந்தையாகக் கருதப்படுகிற கால்டுவெல்லும், இதுபற்றி விளக்கமாக ஆராய்ந்துள்ளார். திராவிட மொழிகள் சமஸ்கிருதமொழியினின்றும் பிரிந்தவை அல்ல என்றும், இவை தனியொரு இனம் என்றும் விளக்கிப்பேசுவார். திராவிடச் சொற்களாக இருபதுக்கும் அதிகமானவை வேதத்தில் வந்துள்ளன என்றும், இன்றும் பல இடப்பெயர்கள் அம்மொழியில் இடம்பெற்றுள்ளன என்றும் கூறுவார். இவரைப்போன்றே, மோரிஸ் (Morris), பென்பே (Penbey), ஆஸ்கொலி (Ascoli), போன்றவர்களும் திராவிடமொழிகளின் செல்வாக்கைக் குறிப்பிட்டுச்சென்றுள்ளனர். சமஸ்கிருதத்திலும், இந்தோ ஆரியமொழிகளிலும் ஏராளமான வேற்றுச் சொற்கள் காணப்படுகின்றன என்றும் அவற்றுள் பல திராவிடச் சொற்கள் என்றும் ஸ்டென்கனோவ் (Stenkonov) குறிப்பிடுகின்றார். திராவிட மொழிகளில் உள்ள பின்னுருபுகள் (Post position) மராத்தி, பீஹாரி போன்ற மொழிகளில் இடம்பெற்றிருத்தலைக் காணலாம். ரிக்வேதத்தில்கூட திராவிடச்

சொற்கள் கலந்துள்ளன என டாக்டர் பர்ரோ (T.Burrow) குறிப்பிடுகின்றார். மேலும், பிராகிருதமொழிகளிலும்பலப்பல புதிய திராவிடச் சொற்கள் புகுந்துள்ளன. இச்சொற்கள் அனைத்தும் இன்று வாழ்கின்ற திராவிட மொழிகளில் இல்லை. வடஇந்தியாவில் வாழ்ந்திருந்த பல திராவிடமொழிகள் காலப்போக்கில் அழிந்துவிட்டன என்று எண்ணலாம். ஏறத்தாழ, இரண்டாயிரம் ஆண்டுக்கால வரலாற்றில் தமிழ்மொழி, சமஸ்கிருதம், கிரேக்கம், இலத்தீன், ஆங்கிலம் முதலிய மொழிகளோடுதொடர்புபெற்றுச் சொற்களைக் கொடுத்திருக்கிறது. தமிழர்களுடைய நாவில் தவழ்ந்ததோடு மட்டுமன்றித் தமிழ் இத்தாலியா, போர்த்துகீசியர், டச்சுக்காரர், ஆங்கிலேயர் முதலிய பிற மொழியாளர்களுடைய நாவிலும் தவழ்ந்திருக்கின்றது. தமிழர்களும் அரசியல், வாணிபம், தொழில் முதலிய பல்வேறு காரணங்களுக்காகப்பிறநாடுகளில் குடியேறி அந்தந்த நாடுகளில் தமிழ் மொழியையும் பண்பாட்டையும் அறிமுகப்படுத்தியதோடு, அந்தந்த நாட்டுமொழிகளையும் பண்பாடுகளையும் இணக்கமாக ஏற்றுக்கொண்டனர்.

| நூற்றாண்டு Century | அ | ஆ | இ | ஈ | உ | ஊ | எ | ஏ | ஐ | ஒ | ஓ |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| கி.மு. 3 | | | | | | | | | | | |
| கி. பி. 2 | | | | | | | | | | | |
| கி. பி. 3 | | | | | | | | | | | |
| கி. பி. 4 | | | | | | | | | | | |
| கி. பி. 5 | | | | | | | | | | | |
| கி. பி. 6 | | | | | | | | | | | |
| கி. பி. 7 | | | | | | | | | | | |
| கி. பி. 8 | | | | | | | | | | | |
| கி. பி. 9 | | | | | | | | | | | |
| கி. பி. 10 | | | | | | | | | | | |
| கி. பி. 11 | | | | | | | | | | | |
| கி. பி. 12 | | | | | | | | | | | |
| கி. பி. 13 | | | | | | | | | | | |
| கி. பி. 14 | | | | | | | | | | | |
| கி. பி. 15 | | | | | | | | | | | |
| கி. பி. 16 | | | | | | | | | | | |
| கி. பி. 17 | | | | | | | | | | | |
| கி. பி. 18 | | | | | | | | | | | |
| கி. பி. 19 | | | | | | | | | | | |

**(ஐந்தாம் உலகத்தமிழ் மாநாடு விழாமலர், 1981)**

"The Tamil people were able for millennia to stand by their own soul. The living presence of the eternal images lent their human psyche a dignity. It was through the orderly advance in self-awareness that the achievements of the Tamils are best seen, They knew what was the core of man - the psyche in modern terms- that it was separable from the body and not sharing in its dissolution. They knew also that the first knowledge of psychic law and order was found in the stars and the cosmic principle underlay the Siva concept. Having found the inner wealth of the soul in the heart of man, they interpreted the wealth in material form through a stupendous variety of temples".

C.Rajasingham, The Cultural Contribution of the Tamils

# பாட்டொன்று கேட்டேன்!

ஜி. வரதராஜன்
தமிழ்மரபு மையம் ஆரோவில்



பாட்டொன்று கேட்டேன். ஆம் பாரதியாரின் பாட்டொன்று கேட்டேன். பரவசமானேன்!

மனதிலுறுதி வேண்டும்!
வாக்கினிலே இனிமை வேண்டும்!
நினைவு நல்லது வேண்டும்!
நெருங்கின பொருள் கைப்பட வேண்டும்!

கனவு மெய்ப்பட வேண்டும்!
கைவசமாவது விரைவில் வேண்டும்
தனமும் இன்பமும் வேண்டும்!
தரணியிலே பெருமை வேண்டும்!

கண்திறந்திட வேண்டும்!
காரியத்தில் உறுதி வேண்டும்!
பெண்விடுதலை வேண்டும்!
பெரிய கடவுள் காக்க வேண்டும்!

மண் பயனுற வேண்டும்!
வானகமிங்கு தென்படல் வேண்டும்!
உண்மை நின்றிட வேண்டும்!
ஓம் ஓம் ஓம் ஓம்!

ஸ்ரீஅரவிந்தரின் உற்ற நண்பராய், அவருடன் ரிக்வேதம் பயின்ற பாரதியின் வாக்கில் பூரணயோக சூரியனின் கிரணங்கள் ஒளிர்வதாக எனக்குத் தெரிந்தது. 16 வரிகளில் உதயநகரமாகிய ஆரோவிலைப் பற்றிக்கூடக் கூறியிருப்பதாக எனக்குத் தோன்றியது.

பாரதி ஒரு வரகவி. தெய்வீகக் கவி. வேதத்தின் மறைபொருள்போல், வெளியே வெறும் சமூகச் செயல்பாடுகளைக் குறிப்பிடுவதுபோல இருந்தாலும், தனக்குள்தானே சென்று உள் உண்மையை இவ்உலக வாழ்விலேயே வெளிக்கொண்டு வரமுயலும் வீரனுக்கு வார்த்துக் கொடுத்த வரைபடமாக உள்ளது. அவர் சொற்களால் சொன்னது பாதி. சொல்லாமல் சொன்னது மீதி.

கம்பனின் இராமாயணம்போல, நடுக்கருத்தை விட்டு விலகாமல், அதைத் தமிழின் சூழலில் 'பொன்மலர் நாற்றமுடைத்தது போல' பாரதியின் பழகு தமிழில் பேருண்மையைக் கோடிட்டுக் காட்டியிருக்கிறார்.

ஸ்ரீஅரவிந்தர், 'பூரணயோக சாதகனுக்கு அவன் ஸித்தி அடைய முதல் தேவை இடைவிடாத ஆர்வம், மனதில் உறுதி' என்கிறார். இன்றைய நிலையில் ஜடத்திலும், பிராணனிலும் உறுதி கீழ்இயற்கையின் கட்டுப்பாட்டில் இருக்கிறது. மனதளத்தில் உறுதி மேல்இயற்கை உறுதிக்கும், கீழ்இயற்கை உறுதிக்கும் இடையில் இருக்கிறது. மனத்தில் உறுதி மேல்தளத்துடன் சேரும்பொழுது மானிடனின் வாழ்வில் கீழ்இயற்கை அவனுக்குக் கட்டுப்பட்டு அடங்குகிறது.

வாக்கிற்கு ஒரு படைக்கும் ஆற்றல் இருக்கிறது. இனிமையான வாக்கு இனிய படைப்பை உருவாக்குகிறது. அதனால்தான் தமிழ்மரபில் நற்பண்பாளர்கள் அமங்கலமான சொற்களை விலக்கி, உயர்ந்த பண்பினை வளர்க்கும் சொற்களையே பயன்படுத்துகின்றனர். ஸ்ரீஅன்னையைக் கூட அவரது குழந்தைகள் Sweet Mother (இனிய அன்னையே) என்று அழைப்பார்கள். எண்ணமே உருவமாக வெளிப்படுகிறது. ஸ்ரீஅன்னை இவ்வாறு கூறுகிறார்.

"எண்ணத்தைப் பேச்சில் வெளிப்படுத்தும்போது, அந்த ஒலியதிர்வுகள் ஆற்றல் மிக்கவையாகின்றன. எண்ணத்தைச் சடநிலையிலுள்ள பொருள்களுடனும் தொடர்புபடுத்தும் ஆற்றல் அந்த ஒலியதிர்வுகளுக்கு உண்டு. இவ்வாறு அவை அந்த எண்ணத்திற்கு கண்கூடான, செயல் விளைவுமிக்க மெய்ம்மையைக் கொடுக்கின்றன. எனவே, பொருள்களையும், நபர்களையும் பற்றி ஒருபோதும் மோசமாகப் பேசக்கூடாது.

புவியில் தெய்வீகஸித்தியின் முன்னேற்றத்திற்குத் தடையாக இருப்பவற்றைப் பற்றிப் பேசக்கூடாது. இப்பொது விதியை ஒருபோதும் மீறாதே!"

நினைவு நல்லது வேண்டும் என்னும்போது, மண்ணுலகில் தெய்வீக வாழ்வு வேண்டும் என்பதை விட நினைவு வேறு என்ன இருக்க முடியும்? நல்ல நினைவுகளை நல்ல செயல்களாக மாற்றினால்தான், மனதால் நெருங்கிய பொருள் கைப்படும். வெறும் வாய்ச்சொல் வீரர்களாய் இல்லாமல், அதை உருவாக்கும் கைவினை செயல் வீரர்களாய் மாற வேண்டும் என்கிறார்.

'கனவு மெய்ப்பட வேண்டும், கைவசமாவது விரைவில் வேண்டும்' என்னும்போது நமது ஆரோவிலைப் பற்றித்தான் பாடுகிறாரோ, எனத் தோன்றுகிறது. 'ஆரோவில் ஒரு கனவு என்று கூறுகிறார்கள்' என்று ஸ்ரீஅன்னையிடம் ஒருவர் கூறினார். அதற்கு ஸ்ரீஅன்னை, 'ஆம். ஆரோவில் ஒரு கனவுதான். அது இறைவனின் ஒரு கனவு. யதார்த்தம் என்று கருதும் பல மனிதக் கனவுகளை விட இத்தகைய தெய்வீகக் கனவுகள் நிச்சயம் நிறைவேறும்' என்று பதில் கூறினார். ஸ்ரீஅன்னை உலகத்தின் திருஉருமாற்றம், 'ஒரு மாதிரி நகரத்தில் ஆரம்பித்து, எல்லாவகையிலும் சிறப்பான உலகத்தில் முடியும்' என்று எழுதியிருக்கிறார். பாரதியார் அவரது புதுச்சேரி வாழ்க்கையில் ஸ்ரீஅரவிந்தர், அன்னையிடம் நட்புடன் கருத்துப் பரிமாற்றம் செய்து வந்திருக்கிறார். அன்னை 1917-இல் பிரான்சு செல்வதற்கு முன் பாரதியாருக்கும் அவரது குடும்பத்தினருக்கும் ஒரு விருந்து அளித்திருக்கிறார் என்பது பல ஆதாரங்களில் இருந்து தெரிய வந்துள்ளது. 'மாதிரி (இலட்சிய) நகரக் கனவு'ம் அவர்களது கருத்துப் பரிமாற்றத்தில் இருந்திருக்கலாம்.

பூரணயோகத்தின் முக்கிய அம்சமான 'தரணியிலேயே பேரின்ப வாழ்க்கை வேண்டும்', 'வாழ்வனைத்தும் யோகமே' என்பதை எடுத்துக் காட்டுகின்றன. 'தனமும் இன்பமும் வேண்டும், தரணியிலே பெருமை வேண்டும்' என்னும் வரிகள், வாழ்வை விலக்கி ஓடும் தனித்த ஆன்மிக முயற்சிக்கு இங்கு இடம் இல்லை என்பதைத் தெளிவாக உரைக்கின்றன.

"தலைவனின் சீரிய, குறைகளற்ற கருவியாக இருப்பதைவிட சிறந்த பெருமையும் பெருமிதமும் கிடையாது" என்னும் ஸ்ரீஅரவிந்தரின் கருத்தை நாம் உன்னிப் பார்க்க வேண்டும். இருளில் ஆழ்ந்து கிடக்கும் உலகம் இந்த அடிநிலையில் இருந்து விழித்தெழ 'கண்திறந்திட வேண்டும்' என்று அறைகூவுகிறார். அதாவது, ஞானக்கண், யோகக் கண் திறந்திட வேண்டும் என்கிறார்.



ஆரோவிலுக்கு ஸ்ரீஅன்னை அளித்த ஒரு செய்தி நினைவுக்கு வருகிறது. "ஆரோவிலில் வசிப்பதென்றால் கர்மயோகம் செய்வதென்பதே பொருள். ஆகவே, எல்லா ஆரோவில்வாசிகளும் ஒரு பணியை எடுத்துக் கொண்டு அதை யோக முறையில் செய்ய வேண்டும்" காரியத்தில் உறுதியில்லாத யோகமுறை வேலை புயற்காற்றில் சிக்கிய சருகுபோல் இலக்கைவிட்டு எங்கோ சென்று விடும்.

ஸ்ரீஅரவிந்தர், 'இந்தியா சுதந்திரம் அடைவது உலக வாழ்க்கை தெய்வீக வாழ்க்கையாக மாறுவதற்கான முயற்சியின் ஓர் அங்கமே' என்று கூறினார். பெண் ஆக்க சக்தி, அந்த சக்தி கீழ் இயற்கையினால் இன்று விலங்கிடப்பட்டுள்ளது. ஆன்மாவிற்குப் பால் வேறுபாடு கிடையாது. சில நிகழ்வுகளுக்கான வெளிப்பாட்டிற்காக அது ஆண் வடிவமாகவும், பெண் வடிவமாகவும் உருவெடுக்கிறது. ஆணிலும் பெண்மை உண்டு. பெண்ணிலும் ஆண்மை உண்டு. பெண்விடுதலை என்பதை நாம் ஆக்க சக்தியின் விடுதலை என்று கொள்ளலாம். கீழ் இயற்கை ஆக்க சக்தி விடுதலை பெற்று, தெய்வீக சக்தியாக, கரணங்களின் மூலம் வெளிப்படும்போது உலக வாழ்வு தெய்வீக வாழ்வாக மலர்கிறது. கீழ் இயற்கை சக்தி உலகில் தெய்வீக சக்தியாக மாற, மனித முயற்சி மட்டும் பயனில்லை. பெரிய கடவுளின் சம்மத்தினால் ஆத்யா சக்தியினால்தான் முடியும். அதைத்தான் ஸ்ரீஅரவிந்தர் "அன்னை" என்றும் எடுத்துக் காட்டுகிறார்.

'மண் பயனுற வேண்டும், வானகம் இங்கு தென்படல் வேண்டும்' என்பதற்கு ஸ்ரீஅரவிந்தரின் மேற்கூறிய வாசகங்களே சாட்சியாக உள்ளன. 'மண் பயனுற வேண்டும்'. பிறந்த குழந்தையை, 'பச்சைமண்' என்று கூறுவார்கள். புதிய இனத்தின் வருகையினால் இந்த மண் பயனுற வேண்டும்.

ஸ்ரீஅன்னை கூட ஒரு தடவை 'தன்னுடைய இறைப்பணிக்கு (புதிய இனத்தோற்றத்திற்கு) ஒரு கையளவு மண் தேவைப்படுகிறது' என்று கூறினார். இந்தப் புதிய இனத்தின் வருகையால் பூமி சொர்க்கமாக மாறும். இவையெல்லாம் ஆன்மிகக் கவிஞனின் தொலைநோக்குப் பார்வை. பாரதி என்னும் இறைக்கருவியின் ஏற்புடைமையின் வெளிப்பாடு.

'உண்மை நின்றிடல் வேண்டும்' என்னும்பொழுது சத்திய ஜீவிய அதிமன உணர்வை ஸ்ரீஅரவிந்தர், 'Truth Consciousness உண்மை உணர்வு' என்று கூறுகிறார். அந்த உணர்வு மேல்நிலை சத்-சித்-ஆனந்த உலகங்களுக்கும் மன-பிராண-ஜட நிலைகளுக்கும் இடையே நின்று நில உலக வாழ்க்கையை தெய்வீக வாழ்க்கையாக மாற வழி செய்கிறது. ஆரோவிலின் குறிக்கோளும் இதுவே.

விண்வெளிப் பயணத்தில் வானத்தின், சந்திரனின் கற்களைக் கொண்டு வந்தது மனித மனத்தின் கூட்டு முயற்சி. "உண்மை வாழ்வு புவியில் வளர, ஒருங்கிணைந்த கூட்டு முயற்சி தேவை". 'விரைவில் தங்கள் இலட்சியத்தை வெளியிலும் உறுதிசெய்து கொள்ள ஆரோவில்வாசிகள் ஒருவருக்கொருவர் வாழ்த்திக் கொள்ளும்போது Truth உண்மை என்று கூடக் கூறலாம்' என்று ஸ்ரீஅன்னை கூறியுள்ளார்.

'ஓம்' எனும் ஒலி உலகங்களுக்கெல்லாம் ஆதார ஒலியாக உள்ளது. அதிமன, சத்தியஜீவிய 'ஓம்' எனும் மந்திரத்தை ஸ்ரீஅன்னை மாத்ரிமந்திரின் கிழக்குவாயிலின் அடியிலும் பிரதிஷ்டை செய்திருக்கிறார். 1956-ஆம் வருடம் பிப்ரவரி 29-ஆம் தேதி அன்னையினால் அதிமன, சத்திய ஜீவிய வெளிப்பாடு ஏற்பட்டுள்ளது. ஒரு யுகம் முடியும் தறுவாயில் புதிய யுகம் பிறந்து விட்டது. படிப்படியாக, மெள்ள, மெள்ள அது மேலும் மேலும் பலமடைந்து வருகிறது.

மறை இயலில் நான்கு சமபக்கங்களைக் கொண்ட சதுரம் மேன்மேலும் இசைவாக வளரும் பூர்ணத்துவத்தைக் குறிக்கிறது. பாரதியின் நான்கு ஓம்கள் பூர்ணத்துவத்தின், பூர்ணயோகத்தின் குறியீடாக உள்ளது. இப்பாட்டில் வேதத்தையே புதுமையாகச் செய்திருக்கிறார் பாரதியார்.

இவையெல்லாம் என் எண்ணங்களின் ஓட்டம். என் இதயத்தின் கீதம். ஆர்வத்தின் தொடக்கம். என்று தணியும் இந்தச் சுதந்திரத் தாகம்?

வாழ்க பாரதி! வளர்க ஆரோவில்! வெல்க ஸ்ரீஅரவிந்த அன்னை! வாழிய வாழியவே எல்லாரும்!

**பல இனங்கள் சேர்ந்த கொள்கைக்கு அனுகூலமான மொழிகளின் வேறுபாடுகள் இருந்தன. ஆனால், இதிலும் எனது பழைய கருத்துகள் ஆட்டம் கண்டன. ஏனெனில், தமிழ் மொழியின் எழுத்துகளை ஆராய்ந்தேன். அப்போது சமஸ்கிருதத்திற்கும், அதன் சகோதரி இலத்தீன் மொழிக்கும், சமயத்தில் கிரேக்க மொழிக்கும், சமஸ்கிருதத்திற்கும் உள்ள பிணைப்பை அறிந்து கொள்ளத் தூயதமிழ் வார்த்தைகளும், தமிழ் வரிகளும் உதவின.**

**சிலசமயத்தில் பிணைப்பை மட்டும் குறிக்காமல், வார்த்தைத் தொடரில் விட்டுப் போனதையும் தமிழ்மொழி எடுத்துத் தந்தது. இந்தத் திராவிட மொழியினால்தான் ஆரிய மொழிகளின் உண்மையான பிறப்பையும், அதன் நுணுக்கங்களையும் அறிந்து கொண்டேன். தீர்மானமான எந்த ஓர் முடிவையும் அடையும் அளவு என்னால் ஆராய்ச்சியைத் தொடர முடியவில்லை. ஆனால் பொதுவான கருத்திற்கு மாறாக, திராவிட, ஆரிய மொழிகளின் பிணைப்பு நெருக்கமாகவே இருந்துள்ளது...**

**ஸ்ரீஅரவிந்தர், 'இந்தியாவின் ஆன்மா'**

# சர்வோதய நோக்கில் மகாகவியும் மகாத்மாவும்

**பேராசிரியர் ந.அர்த்தநாரி**
**உலக அமைதிப் பேரவை, புதுச்சேரி**



சுப்பிரமணிய பாரதி மகாகவியாகப் பரிணாமம் பெற்றதும், மோகனதாஸ்கரம்சந்த் காந்தி மகாத்மாவாகப் பரிணமித்ததும், பாரத தேசத்தின் தவப்பயனாகும். அதுமட்டுமல்ல, பாரத மண்ணின் மகிமையும் ஆகும். ஸ்ரீஅரவிந்தர் குறிப்பிட்டதுபோல, "இந்திய தேசமே தெய்வத்தின் திருமுகம் ஆகும்". தெய்வத்திரு சேர்ந்ததாலேயே மகாகவியையும், மகாத்மாவையும் நாம் பெறமுடிந்தது.

சுதேசமித்திரன் ஆசிரியர் சி.ஆர்.சீனிவாசன் பாரதியாருடன் மிகவும் நெருங்கிப் பழகும் வாய்ப்புப் பெற்றவர். புதுவையில் ஆன்மிகப்புடம் போட்ட பாரதியைப் பற்றிச் சொல்லியிருப்பது நம் மனதைத் தொடுகிறது. "புதுவையில் புகுந்த பாரதிவேறு. புதுவையிலிருந்து வெளிவந்த பாரதி வேறு. உள்ளே சென்ற பாரதி வீரர், வெளியே வந்தவர் ஞானி" என்றார். ஆம். பாரதி ஒரு ஞானி. பாரதி ஓர் தீர்க்கதரிசியும் கூட. ஆகவேதான்,

"ஆடுவோமே பள்ளுப் பாடுவோமே

ஆனந்த சுதந்திரம் அடைந்துவிட்டோமென்று"

இந்திய நாட்டுவிடுதலையை முன்னதாகவே, நிச்சயித்துக் காட்டியவர் மகாகவி பாரதி.

மகாகவியும் மகாத்மாவும் மிகவும் விரிந்த பார்வையுடையவர்கள். இருவரும் பிரபஞ்சத்தை அணைத்துக்கொண்டவர்கள். சர்வோதயப்பார்வை உடையவர்கள். இருவரும் புதிய சமுதாயத்தையும், புதிய மனிதனையும் நமக்குக் காட்டியவர்கள்.

"அன்பின் வழியது உயிர்நிலை" என்பதைப் பாரதியும் காந்தியடிகளும் உணர்ந்திருந்தனர். அன்பின்மூலம் இருவரும் சமுதாயத்தைப் புதுப்பித்தனர்.

"வையகத்தில் அன்பிற்சிறந்த தவமில்லை" என்கிறார் பாரதி. அன்புத்தவம் செய்தால் வாழ்க்கையில் நாம் விரும்பியதைப் பெறலாம். அன்புடையவர்கள் இயல்பாக இன்பமாக வாழலாம் என்றார். மானுடம் வெல்ல 'அன்புத்தவம் செய்திட நம்மையெல்லாம் பாரதி அழைக்கிறார்.

வாழ்வில் அன்புதான் உயரிய பண்பு எனக் கருதினார், காந்தியடிகள். "உன்னிடம் உள்ளதையெல்லாம் பிறர்க்குக் கொடுத்து மகிழச்சொன்னார். மக்கள் பணியால் மனிதவாழ்வு மாண்புபெறும்" என்றார். 'இன்பம் என்று தனக்கு எதையும் வேண்டாது, நோயால் வாடிடும் யாருக்கும், நோன்பாகப் பல தொண்டுகளைச் செய்பவனை, துன்பப்படுவோர் துயரம் சகியாது அன்புமிகுதியால் ஓடிச்சென்று உதவுகின்றவனைத்தான் கடவுளை அறிந்த மனிதன்' என்றார்; 'தூய அன்பு துன்பங்களைப் போக்கும்' என்றார் காந்தியடிகள்.

பூமண்டலத்தில் அன்பும் பொறையும் விளங்கி, துன்பமும் மிடிமையும் நோவும் சாவும் நீங்கிச் சார்ந்த பல்லுயிரெல்லாம் இன்புற்று வாழ்தற்காகச் செய்யும் வழிபாடே பாரதியின் சர்வோதயப் பார்வை. இதுதான் பாரதி பேசும், "எல்லாரும் அமரநிலை எய்தும் நன்முறை"யாகும்.

# நாட்டுப்புறமும் செவ்விலக்கியங்களும் முன்வைக்கும் 'உலகம்' பற்றிய சிந்தனைகள்

முனைவர் அ.அறிவுநம்பி

புல முதன்மையர், சுப்பிரமணியபாரதியார் தமிழியற்புலம், புதுவைப் பல்கலைக்கழகம்

தமிழிலக்கியப் பரப்பில் காணலாகும் இலக்கிய வகைகள் ஏராளம். உரைநடை போன்றவற்றின் மூலம் தமிழர்கள் உருவாக்கிய இலக்கியப்பனுவல்கள் ஒருபுறம்; எழுத்துருவம் பெறாமல் காலங்காலமாக வாய்மொழி மரபில் உயர்ந்து நிற்கும் நாட்டுப்புற இலக்கியம், மரபு போன்றவை மறுபுறம். தமிழ்நிலத்துள் முகிழ்த்த இவ்விரு தரப்பிலிருந்தும் புறவுலகிற்கு மிகுதியான கருத்தாக்கங்கள் கிடைத்துள்ளன. இருமருங்கிலிருந்தும் உரிய சான்றுகளை அருகருகே வைத்துப்பார்த்தால் வெளிச்சங்கள் பல கிடைக்கும். அவ்வாறான கருத்துநிலைகளில் 'உலகம்' தழுவிய பார்வையும் ஒன்று. நாட்டுப்புறப்பகுதி, செவ்விலக்கிய அல்லது செம்மொழிப் பகுதி ஆகிய இரண்டு பகுதிகளிலும் தென்படும் உலகப்பார்வையை இந்த எழுத்துரை முன்வைக்கின்றது.

**சொல்லும் பொருளும்**

தமிழர்கள் உச்சரிக்கும் எல்லாச்சொற்களுக்கும் பொருண்மை இருக்கும்; இருக்க் வேண்டும். 'எல்லாச் சொல்லும் பொருள் குறித்தனவே' என்பது பழந்தமிழ் இலக்கணம். உலகம் என்ற சொல்லும், பொருளும் மேற்குறித்த இருவகை இலக்கியங்களில் இடம்பெறுமாற்றைக் காணுதல் முதற்பணியாகும்.

'உலகு' என்ற சொல்லை மங்கலச் சொல்லாகக் கொண்டு தமிழிலக்கியங்கள் பல தொடக்கம் பெற்றுள்ளன.

(அ) 'உலகம் உவப்ப வலனேர்பு' - திருமுருகாற்றுப்படை
(ஆ) 'உலகம் யாவையும் தாமுள' - கம்பராமாயணம்.
(இ) 'உலகெலாம் உணர்ந்து ஓதற்கரியவன்' - பெரியபுராணம்

போன்றவை நற்சான்றுகள். திரு, திங்கள், புகழ் போன்ற மங்கலச் சொற்களையும் கருதுவர். ஒருபுறம், 'உலகு' என்ற சொல் மங்கலச்சொல் என்பதனால் முதற்சொல்லாகச் செதுக்கப்பெற்றது என்ற கருத்து நிலவுகிறது. மறுபுறம் தன்னைச் சுற்றி வேலியமைத்துக்கொண்டு தனியுலகு காணாதவன் தமிழன்; உலகின் ஒரு பகுதியாகத் தன்னைக் கருதும் மனப்பாங்கினன் தமிழன் என்ற கருத்து உலவுகிறது.

'இத்தரை கொய்யாப்பிஞ்சு;
நீயதில் சிற்றெறும்பே' என்பது பாவேந்தர்.

உலகத்தை முதலில் நிறுத்தித் தன்னைத் தமிழன் நிறைவுப் பகுதியால் நிறுத்திக்கொள்வான் என்பதற்கான காரண காரியங்களை உலகநடப்புகளுடன் ஒன்றவைத்துப்பார்க்குங்கால், தெளிவுறப் புரிந்துகொள்ள முடியும். அஞ்சலுறையில், முகவரி எழுதுவது பொதுவழக்கு. ஆங்கில மரபின்படி முதலில் பெயர், இரண்டாவது பணி, மூன்றாவது நிறுவனம், நான்காவது நிறுவனம் அமைந்துள்ள பகுதி, ஐந்தாவது ஊர் என அமையலாம். 'இந்தக் கூறுகளைத் தமிழின் ஆவணங்களில் காணுங்கால் மறுதலைப்போக்கு அமையும். அஞ்சலகத்தில் அஞ்சல்களைப் பிரிப்பவர் முதலில் ஊரைப்பிரிப்பார். அவ்வூரில் அஞ்சலகத்தில் பிறகு நகர் (அ)பகுதியும், நிறுவனமும், பொறுப்பும் பெயரும் அடுத்தடுத்துக் கவனிக்கப்பெறும். 'வட்டாட்சியர் அலுவலகம்' போன்றஅலுவலகங்களிலும் பத்திரப்பதிவு போன்ற அரசுத்துறை அலுவலகங்களிலும் ஆவணம் முதலில் ஊரில் தொடங்கும். தனிமனிதனில் காண முடியும்.

தமிழர்க்கு உலகம், ஊர் முதலில் கவனத்துக்கு வருதலும், தனிமனிதன் நிறைவுப்பகுதியில் கருதப்பெறுவதும் நடைமுறை. இஃதொப்பதோர் இன்னொருமுறைமையையும் கருதிப்பார்க்கலாம். படிவங்களில் செய்திகளை முழுமிக்கும் நேரத்தில் விண்ணப்பதாரரின் பிறந்தநாட்செய்திகளைப் பதிவு செய்ய நேரிடும். ஆங்கில அல்லது உலகமரபுப்படி 10111952 என எழுதுவது மரபு. இதனைத் தமிழில் சொற்றொடராக எழுதும்போது ஆயிரத்துத் தொள்ளாயிரத்து ஐம்பத்திரண்டாம் ஆண்டு, நவம்பர்த்திங்கள் பத்தாம்நாள் அவர் பிறந்தாரென்கிறோம். இவற்றின்மூலம் புலனாகும் செய்திகள் இரண்டு. (1) தமிழர்கள் உலகத்திற்கு முன்னுரிமை தந்தவர்கள், (2) தமிழர்கள்

பெரிய நிலைகளை முதற்கண் நிறுத்தி ஏனையவற்றை அடுத்தடுத்து நிறுத்துவர். தமிழர்கள் தம் இலக்கியங்களில் 'உலகு' என்ற சொல்லிற்கு அழுத்தம் கொடுத்தும் உலகளாவிய பார்வையை வெளிப்படுத்தியும் பனுவல்களைத் தொடங்கினரெனலாம்.

'உலகு' என்ற சொல் கொண்டு நூல்களை நெய்கின்ற தமிழர்களில் பெரும்பாலான படைப்புகளில் நிறைவுப் பகுதியிலும் உலகையே நிறுத்தக் காணலாம். முதற்குறள் அகரத்தில் தொடங்கினாலும், முதற்குறளின் ஈற்றுச் சொல், 'உலகு' என்பதையும் கணக்கிலெடுக்க வேண்டும். சிலம்பு தமிழரின் முதற்காப்பியமெனப் போற்றப்பெறுவது. திங்கள் என உலகம் முழுதும் வெளிச்சம் தரும் பொருளின் மங்கலத் தன்மை கொண்டு சிலம்பினை உருவாக்கும் இளங்கோவடிகள், "மல்லல்மா ஞாலத்து வாழ்வீர்" எனக் காப்பியத்தை நிறைவாக்குவார். ஞாலம் என்பது உலகு என்பதன் மாற்றுச்சொல். சாதி, சமயப் பிணக்குகளை நீக்கும் முறையில் தொழில்பல புரிவாரைத் திருத்தொண்டர்களாகப் படம்பிடிக்கும் பெரியபுராணம் 'உலகு' என்ற கருத்துடன் நிறைவுபெறும். பனுவல்களின் இடைப்பகுதியில், உலகு என்ற சொல்லும், அச்சொல்லின் மாற்றுச்சொற்களான மன்பதை, பார், வையம், ஞாலம் போன்ற சொற்களும் பயின்றுவரும். பிற்காலத்தில் லோகம், ஜகம் போன்ற பிறமொழிச்சொற்களும் வரவாகின. குறளில் 32 இடங்களில் உலகம் என்ற சொல்லும் 27 இடங்களில் உலகு என்ற சொல்லும், 10 இடங்களில் ஞாலம் என்ற சொல்லும் 11 இடங்களில் வையம் என்ற சொல்லும் 3 இடங்களில் நிலம் என்ற சொல்லும் காணப்பெறுவதாகக் குறளாய்வாளர் ஒருவர் அட்டவணைப்படுத்துவார்.

செவ்வியல் இலக்கியங்களின் இத்தன்மை நாட்டுப்புறப்பாடல்கள், பிறமரபுகள் போன்றவற்றிலும் தென்படக் காணலாம். ஒரு பதச்சோறு:

"என்னம்மா, தேவி சக்கம்மா!
உலகம் தலைகீழாத் தொங்குதே ஞாயமா?
சின்னஞ்சிறுசெல்லாம் சிகரெட்டு பிடிக்குது
சித்தப்பன்மார்கிட்டே தீப்பெட்டி கேக்குது"

இப்பாட்டில் தன்வீடு, தான்வாழும் பகுதி, தன்ஊர், மாவட்டம் என்றெல்லாம் கூறப்பெறவில்லை. தனிமனிதத்தடுமாற்றம் உலக அசைவாகவே கொள்ளப்பெறுகிறது. குறுகிய வட்டச்செய்திகூட உலக மாற்றமாகக் கருதுவதற்குத் தமிழர்களின் அகன்றுவிரிந்த பார்வையே காரணமாகும். ஏனெனில், மனிதமனங்களின் போக்குகளைக் கொண்டு பாவேந்தர் மாந்தர்களின் இடையில் கடுகு உள்ளம், துவரையுள்ளம், தாயுள்ளம் எனப் பல உள்ளங்கள் இருப்பதாக வரைகுவார். உலக உயிர்களை ஒருதாய் மக்களெனக் கருதுவது தமிழர் பண்பாடு. அதனாற்றான் உலகைப் பேரெல்லையாகக் கொள்வர்.

செவ்விலக்கியம் நாட்டுப்புறப் பாங்கினையே கொண்டுள்ளது என்பதனை உற்றுநோக்கிப் புரிந்துகொள்ள முடியும், திருக்குறள் முன்வைக்கும் செய்திகளில் ஒன்று தனிமனிதப் பட்டினியொழிப்பு. அவரின் சினம் கூர்மை பெறுகிறது.

"இரந்தும் உயிர்வாழ்தல் வேண்டின் பரந்து
கெடுக உலகியற்றி யான்" என்பது குறட்பா.

தனிமனிதன் பசிக்கு நாட்டை ஆள்பவன்தான் பொறுப்பேற்க வேண்டும், ஆனால், 'உலகம்' படைத்தவனை வள்ளுவர் சாடுகிறார். நகர், ஊர், வட்டம், மாவட்டம், மாநிலம், நாடு எனக் கொஞ்சம் கொஞ்சமாக எல்லைகளை விரிவாக்கும் போக்குத் தமிழ்ப்படைப்பாளிகளிடம் இல்லை. அவர்களின் பார்வை உலகந் தழுவியது. எனவே, தீதும் நன்றும் உலகளவினது எனக் கருதுகின்றனர் அவர்கள்.

"தனியொருவனுக்கு உணவில்லை யெனில்
ஜகத்தினை அழித்திடுவோம்"

என்ற பாரதியின் குரலும் உலகப்பார்வை கொண்டவன் அவன் என அடையாளம் காட்டும். இல்லாதவனுக்குக் கொடு என்ற அறவுரையைவிட உலகத்தை அழிப்பதென்ற முழக்கம் இப்பாவலர்களின் நோக்கம் உலகம் முழுவதும் நோக்கிய நோக்கமாக இருப்பதை உணர்த்தும்.

தனிமனிதனால் செய்யவியலாப் பணிகளைக் கூட இவ்வாறு செய்யவேண்டுமென்று பாவலர்கள் வற்புறுத்தக் காரணமே எல்லைச் சுருக்கம் அவர்களிடம் காணப்பெறாமைதான். இப்போக்கிற்கு ஆன்மிகமும் விதிவிலக்கன்று. அதனாலேதான்,

"தென்னாடுடைய சிவனே போற்றி
எந்நாட்டவர்க்கும் இறைவா போற்றி"

எனத் தன்பகுதிக்கடவுளை எல்லாநாட்டார்க்கும் உரிய தெய்வமாக்குகின்றனர். செவ்வியல் இலக்கியவாதிகள் மட்டும் இவ்வண்ணம் மொழிந்திருந்தால் அதனைப் பிடித்தவர்களின் பண்பாடென ஒதுக்கிவிடலாம். ஆனால்,

"உலகத்துநாயகியே எங்கள் முத்துமாரியம்மா" என்ற நாட்டுப்புறப் பா வரி தமிழக மாரியம்மனை, "புவனமுழுதுடையாளாக'ப் பேருருக்கொள்ளச் செய்கிறது. இதன் அகலநீளங்களை இன்னும் சரிவரப் புரிந்துகொள்ளப் பாரதி, குரலெடுப்பதைக் கூறலாம்.

"ஆகாவென்றெழுந்தது பார் யுகப்புரட்சி!"எனப்பாடும் பாரதி, 'மாகாளி உருசிய நாட்டினிற் கடைக்கண் வைத்தாள்" என்கிறார்.

சோவியத்துப் பகுதியில் ஏற்பட்ட புரட்சிக்குத் தமிழகத்து மாகாளியின் கடைக்கண் காரணமென்பது அந்தத் தெய்வம் "மண்சார்ந்த தெய்வமில்லை; மன்பதை சார்ந்த தெய்வம்" எனப் பாவலன் கருதியதை வற்புறுத்தவே. மாரி, காளி இரண்டும் நாட்டுப்புறப் பாவலனின், ஏட்டிலக்கியப் பாவலனின் உலகுதழுவிய மனப்பாங்கை வெளிப்படுத்தக் காரணமாவதை உணரவேண்டும். பாரதியைப் போற்றும் பாவேந்தரின் வரிகளான,

"உலகம்உண்ண உண்! உடுத்த உடுத்து
மானுட சமுத்திரம் நானென்று கூவு!
விசாலப் பார்வையால் விழுங்கு மக்களை"

போன்ற வரிகள் தமிழிலக்கிய வரலாற்றில் உலகச் சிந்தனை கொண்டவர்கள் தொடர்ச்சியாகப் பங்களித்தனர் என்பதை உணர்த்தும். ஒற்றைச் சொல்லின் மூலமாகவும், இரண்டுதரப்பாரும் உலகைக் கருதியதை எடுத்துமொழிய இயலும்.

'வையத்தில்' வாழ்வாங்கு வாழ்பவன் என்பது குறள். 'வல்லவனுக்கு வல்லவன் வையகத்தில் உண்டு' என்பது நாட்டுப்புறப் பயில்மொழி.

'உலகத்தோடு ஒட்ட ஒழுகலை' வள்ளுவம் வலியுறுத்தும். இதனையே 'ஊரொடு ஒத்துப்போ' எனச் சிற்றூர்ப்புறம் செப்பும், 'உலகம் உள்ளளவும்' என்ற சொல்வழி உறுதிப்பாட்டை ஏட்டிலக்கியவாதிகள் கூறுவர். கல்வெட்டுகளில் இடம்பெறும்.

'சந்திரசூரியர் சோதிகிளம்பிடும் சந்தனமாலையிலே' என உலகப் பரப்பைச் சுட்டும். இவ்விரண்டு சான்றுகளும் உலகந்தழுவிய தமிழரை இனங்காட்டுபவை. மன்னனின் பெயர், மொழியின் பெயர், நிலத்தின் பெயர் எதனையும் குறிக்காத தனித்தன்மையைத் திருக்குறள் பெற்றிருப்பதால்தான் அதனை உலகப்பொதுமறை என்ற போற்றுதல் சொற்களால் புகழக் காணலாம்.

மேற்கூறிய செய்திகளை உள்ளடக்கிய நிலையில் தமிழன் மொழிந்த "யாதும் ஊரே; யாவரும் கேளிர்!" என்ற தொடர் உயர்வானது; சிறப்பானது; தமிழனை உணர்த்துவது.



'உண்மையான 'கலை' தோன்ற வேண்டுமானால் அது இரு வகையாகத் தோன்றுமென்பதாக மெஸீனி (Mazzini) என்னும் இத்தாலிய ஞானி கூறுகிறார். அதாவது, 'ஒருவகைப்பட்ட காலசகம் முடிவு பெற்ற போதிலும், ஒருவகைப்பட்ட காலசகம் வரும் தறுவாயிலும், உண்மையான 'கலை'த் திகழ்ச்சி ஏற்படுகின்றது' என்கிறார்.

இதை ஒருவித உண்மையெனக் கொள்ளலாம். பொதுவாகக் கூறுவோமாயின், ஒரு தேசத்து ஜனங்கள் மெய்யான உற்சாகமும், வீரத் தன்மையும், புகழும் கொண்டிருக்கும்போது, அங்கே பெரிய, 'கலையெழுச்சி' ஏற்படுகின்றது.'

# இளைஞர் நலமும் பாரதியும்

**முனைவர் சிவ. மாதவன்**
**தமிழ்ப் பேராசிரியர், தாகூர் கலைக்கல்லூரி, புதுச்சேரி**

**2001**-ஆம் ஆண்டு எடுக்கப்பட்ட மக்கள்தொகைக்கணக்குப்படி இந்திய மக்கள்தொகையில் 50% பேர் 25 வயதிற்குட்பட்டவர் என்னும் தகவல் தெரியவருகின்றது. ஒரு நாட்டின் மொத்த மக்கள் தொகையில் சரிபங்கினராக விளங்கும் இன்றைய இளைஞர்களின் கையில்தான் நமது எதிர்கால பாரதம் சிறப்புப்பெற்று விளங்கப்போகிறது. நமதுஇளைஞர்கள் சமயம், சாதி, பொருளாதாரம் என்னும் பிரிவுகளின் அடிப்படையில் வேறுபட்டுக் காணப்பட்டாலும் இளைஞன் சிந்தனை (அ) இளையோர்போக்கு (Youth attutude) என்பதில் ஒற்றுமைப்பட்டு விளங்குகின்றனர்.

இளைஞர்களின் அறிவும் ஆற்றலும் அவர்களுக்கும் சமுதாயத்திற்கும் பயன்பட வேண்டுமானால், அவர்களது நலம் குறித்த உயரிய செயல்திட்டம் தேவை என்பது நமது மையஅரசால் உணரப்பட்டது. அதன்விளைவாக 1982ஆம் ஆண்டு நம் நாட்டில் நடைபெற்ற ஒன்பதாவது ஆசிய விளையாட்டுப் போட்டியின்போது (Sports) விளையாட்டு என்னும் தனித்துறை (Separate Department) உருவாக்கப்பட்டது. இத்துறை கல்வி அமைச்சகத்துடன் இணைக்கப்பட்டிருந்தது. முன்னாள் பாரதப்பிரதமர் திரு. ராஜீவ் காந்தி காலத்தில்தான் கல்வி அமைச்சகம், மனிதவளமேம்பாட்டு அமைச்சகம் (Ministry of Human Resorurce Development) என மாற்றம் பெற்றது. 1985இல் இம்மாற்றம் நிகழ்ந்தது. அப்பொழுதும் விளையாட்டுத்துறை மனிதவளமேம்பாட்டுத்துறையுடன்தான் இணைப்புப்பெற்றிருந்தது, 2000ஆவது ஆண்டு மே மாதம் 27ஆம் நாள் முதல் விளையாட்டுத்துறை, இளைஞர்நலம் இரண்டையும் சேர்த்து, விளையாட்டு மற்றும் இளைஞர் நலம் என்னும் தனி அமைச்சகமாக மாற்றம் பெற்றது. ஆனால், மேலைநாடுகளில் 1952 முதல் இளைஞர் மேம்பாட்டிற்கென்று தனி அமைச்சகம் உருவாக்கப்பட்டதை நோக்கும்போது நாம் ஏறத்தாழ அரை நூற்றாண்டு பின்தங்கியுள்ளோம் என்பது தெரியவரும்.

இளைஞர்களிடம் அமைந்துள்ள அளப்பரிய ஆற்றலை வெளிக்கொணர்வதும் அவர்களிடையே நாடு,மொழி, பண்பாடு, தொழில் முனைவு, சிக்கனம், கூட்டுமுயற்சி போன்ற உயரிய சிந்தனைகளை வளர்ப்பதும், அதன்வழி ஒவ்வொரு இளைஞனும் 'தன்னைத்தான் அறிந்துகொள்ளும்' தகுதியைப் பெறுவதும் இன்றையக் காலத்தின் கட்டாயமாகக் கருதப்படுகிறது.

இந்தத் தேவையை- இளையோரின் எழுச்சி என்னும் தேவையை - நிறைவு செய்திட உதவும் வகையில் தேசிய கவி சுப்பிரமணிய பாரதியாரின் சிந்தனைகள் நமக்குக் கைகொடுக்கின்றன. இருபதாம் நூற்றாண்டின் விடிவெள்ளியாய் முளைத்த பாரதியின் கவிதைகளில் சுயமேம்பாடு, ஆக்கபூர்வமான எண்ணம், உடல்நலம் போன்றமானுட உயர்வு நோக்கிய கருத்துகள் பல்கியுள்ளன. தெய்வத்தைப்பாடும்போது, தேசத்தையும், தேசத்தைப் பாடும்போது தெய்வத்தையும் மறக்காமல் இணைத்துக் கொள்ளும் பாரதி இளைஞர்களை இதிகாசக் கதைமாந்தர் போன்றும், அவதாரபுருஷர் போன்றும் கருதியுள்ள திறம் ஆழ்ந்து எண்ணத் தக்கது. முற்காலப் பெருமை என்னும் வெளிச்சம் நிகழ்கால இருட்டை விரட்டி அடித்துவிடும்; முன்னைப் பெருமனிதர்களின் வாழ்வும் பணியும் இற்றைநாள் இளைஞர்களின் முன்னோடிகளாகத் திகழும் என்பதில் பாரதி ஆழ்ந்த நம்பிக்கை கொண்டிருந்தார். எனவேதான், உலக அன்னையாம் சக்தியிடம்,

> "ஐயம் தீர்ந்துவிடல் வேண்டும்- புலை
> அச்சம்போயொழிதல் வேண்டும்-பல
> பையச் சொல்லுவதிங் கென்னே- முன்னைப்
> பார்த்தன் கண்ணன் இவர்நேரா- எனை
> உய்யக் கோடிமுறை தொழுதேன் - இனி
> வையத்தலைமை எனக்கருள்வாய்- அன்னை
> வாழி, நின்னதருள் வாழி" (யோகசித்தி, பா-10)

என வேண்டியுள்ளார், பாரதி கடவுளிடம் கேட்கும் வரங்களில் சுயநலம் இராது. மேலோட்டமாகப் பார்த்தால் 'காணிநிலம் வேண்டும்' கவிதை அப்படித்தோன்றும். வையத்தைப் பாட்டுத்திறத்தால் பாலித்திடும் பொருட்டே அவர் பராசக்தியிடம் நிலம் கேட்டார். மாளிகை கேட்டார். நிலவொளி கேட்டார். இவ்வாறு பிறர்நலம் பேணும் பெருமித உணர்வு படைத்த பாரதி மேற்சுட்டிய பாடலில் ஐயம், அச்சம், இரண்டும் தன்னைவிட்டு அகல வேண்டும் என்று வேண்டுவது அதாவது, (Self Development)

தனிமனிதமேம்பாடு போன்று, தனக்கான வேண்டுதல் போன்று தோன்றினாலும், 'வையத்தலைமை'யை வழங்குமாறு கோருவதில் பொதுநலவிழைவே பொலிவுறுதலை உணரலாம்.

இதே பாடற்பகுதியில் இடம்பெற்றுள்ள மற்றுமோர் பாடலில் பாரதியின் வேண்டுதல் முழுக்கவும், நாட்டுநலம்பற்றியதாகவே அமைந்துள்ளது.கல்லைவயிரமணியாக்கவேண்டும்;செம்பைக்கட்டித்தங்கமாக்குதல்; புல்லை நெல்லாகச் செய்தல்; பன்றிக்குட்டியைச் சிங்கமாக மாற்றுதல்; மண்ணை வெல்லம்போலச் செய்தல்- இவையாவும் பெரும் விந்தைகள். இந்த விந்தைகளை நான் செய்யவேண்டும்; அதன்வழி இந்நாட்டைப் பிடித்துள்ள தொல்லைகளைப் போக்கவேண்டும்; இந்நாட்டைக்கல்வி, வெற்றி, வீரம், அறிவு,ஆண்மை, போன்றவை நிறைந்த நாடாக ஆக்கவேண்டும். அதன்விளைவாக, இங்கே செல்வவளம், தொழில்வளம் பெருகிடச் செய்ய வேண்டும்; இந்நாட்டைப் பிணித்துள்ள கொடுமைகளை வீழ்த்தி, பாருக்குள்ளே நல்ல நாடாக இதனை உயர்த்த வேண்டும். இதற்குத் தேவைப்படுகின்ற ஆற்றலை, வலிமையை, திறமையை எனக்கு நீ அருள வேண்டும் என்று சக்தியிடம் வேண்டியுள்ளார் பாரதியார். இந்தப் பாடலும் பொதுநலம் போற்ற விழைதலைச்சுட்டுகின்றது.

பாரதி, பெயர் குறிப்பிடாமல், 'இந்நாட்டை' என்றும், 'இந்த நாட்டோர்' என்றும் குறிக்கின்ற நாடு நம் பாரததேசமே என்பதில் ஐயம் எழ வாய்ப்பில்லை. எனினும் நாட்டின் பெயரைச் சுட்டாமல் 'மக்கள் வாழும் நிலப்பகுதி' என்ற பொருளை மட்டுமே மனத்திற்கொண்டு இப்பாடலைப் பாரதி படைத்திருக்கவேண்டும் என எண்ணவும் இடமுண்டு. காக்கை, குருவியையும், நீள்கடல், மலையையும் தம் கூட்டமாகப் பாவித்த பாரதிக்கு, பூமிப்பரப்பில் உயிர்கள் வாழும் பகுதி அனைத்தையுமே இந்நாடாகக் கருதுவது இயல்பே ஆகும். உயிர்க்குலம் முழுமையும் நலமுடன் வாழ்தல் வேண்டும் என்பதே பாரதியின் பெருவிருப்பம். ஆதலால், அவரது 'யோகசித்தி' பாடலில், உலகளாவிய சிந்தனை ஊடுருவி நிற்கின்றது எனலாம். அதிலும், குறிப்பாக, இளைஞர்கள் அனைவரும் - எல்லாநாட்டு இளைஞர்களும் - தம்மிடம் உள்ள அளப்பரிய மனித வளத்தை, அனைத்து உயிர்களின் மேன்மைக்காக அர்ப்பணிக்க வேண்டும் என்னும் சிந்தனை, 'பாலில் படுநெய்போல்' மறைய நின்றுள்ளமை அறியலாம்.

பாரதி, தான் படைத்த புதிய ஆத்திசூடியில், 'அச்சம் தவிர்', 'ஆண்மை தவறேல்', உடலினை உறுதி செய்', 'ஏறுபோல் நட', 'கெடுப்பது சோர்வு', 'கேட்டிலும் துணிந்துநில்', தேசத்தைக் காத்தல் செய்', 'நாளெல்லாம் வினை செய்', 'பாட்டினில் அன்புசெய்', ரௌத்திரம் பழகு', 'வெடிப்புறப் பேசு', வையத்தலைமை கொள்' என்று கூறியுள்ள - பொன்மொழிகள் எனத்தக்க- அறவுரைகள் யாவும் இளைஞர்நலம் சார்ந்தவை என்பதை உணரமுடியும். இந்த அறவுரைகள், தமிழ்மொழியில்- தமிழ்மொழியால்- கூறப்பட்டுள்ளன; ஆயின், இவற்றின் உள்ளீடு உலக இளைஞர்கள் அனைவருக்கும் பொருந்துவன. இவற்றில், தனிமனிதமேம்பாடு, தன்னை உணர்தல் என்பன அழுத்தமுறக்கிளத்தப்பட்டுள்ளன. அவையாவும், 'வையத்தலைமை' கொள்ள மிகமிக அடிப்படையாய் வேண்டப்படுவன. இவ்விடத்திலும் பாரதி தன்னலம் பேணுதலோடு, பொதுநலம் விரும்புதலையே முதன்மைப்படுத்தியுள்ளார்.

ஒவ்வொரு தனிமனிதனும் தன்னளவில் உயர்வும், சிறப்பும் பெறுவதோடு, அவை தான் சார்ந்த ஊருக்கு, நாட்டுக்கு, உலகுக்கு, உயிர்க்குலம் முழுமைக்கும் உதவிடவே என்னும் உள்ளத்தைப் பெற வேண்டும். குறிப்பாக, இளைஞர்களிடம் இத்தகு உள்ளம் அமையவேண்டும்; அந்நிலையில்தான், எல்லாரும் 'அமரநிலை' எய்தும் வாய்ப்புக் கைகூடும். கடமைக்குப் பாட்டெழுதும் கவிஞராக இல்லாமல் கவிதையையே வாழ்க்கையாக வாழ்ந்த மகாகவிபாரதி ஓர் அருட்கவிஞர் என்பதால், 'உலகில் ஒரு பகுதி பாரதம்' என்னும் நிலையிலிருந்து 'உலகிற்குப் பாரதம்' என்னும் உன்னத நிலைக்கு உயர்த்தினார். இந்த உணர்வு நம் அனைவரது சிந்தனையிலும் ஆழப்பதிய வேண்டும்; கண்டிப்பாக, இளைஞர்களிடத்து இவ்வுணர்வு பதிய வேண்டும். அதற்குரிய பணிகளை ஒருமையுணர்வுடன் தொடங்குவோம்.



That even uneducated people will gradually become wise if they are always in the company of learned people is explained by the analogy of how a mud pot can impart to the water inside it the nice smell of the flowers kept therein.

- NALADIYAR

# SOME ICONOGRAPHIC CONCEPT

KAMBAN ADIPPODI SA. GANESAN

Siva is the Lord of Dance. It is diffucult to enumerate the various dances performed by Him. The rhythmic movements of cosmos are the underlying concept of all the dances, however, have received greater admiration.



The first is the Sandhya tandava, performed by the Lord to a divine chorus on the Himalayas. A graphic description of this dance is found in "Siva Pradhosa Stotra". 'Placing Gowri on a golden throne, Sulapani dances, as Lakshmi sang divine music, accompanied by Saraswati on the Vina. Indra played the flute, Brahma bear the cymbals, while Vishnu played the maddala. The Devas, Gandharvas, Kinnaras, Yakshas, Siddhas, Caranas and others witnessed the glorious dance'. This form is reffered by Karaikkal Ammai as the great evening dance.

In the ugra aspect, Siva performs the Samhara tandava (the dance of cosmic dissolution) as Parvati dances the Srishti tandava (the dance of cosmic creation). Around them dance the Bhutaganas. The place of this dance is said to be the cremation ground. The ugra tandava of Siva is often differentiated from the sandhya tandava in later literature. But the sandhya tandava (*அந்தியில் நடமாடும் எங்கள் அப்பன் - காரைக்காலம்மை*) is said to have been performed in the cremation ground by Karaikkal Ammaiyar in her "Tiruvalangattu Padigam". "Karaikkal Ammai further states that as Siva danced in the burning ground Parvati gazed at Him bewiledered'. The other aspects of Siva mentioned by Karaikkai Ammai are that Natesa wears the skins of the spotted stag (*புள்ளியுழை மான் தோலொன்றுடுத்துப் புலித்தோல் பியற்கிட்டுப் பள்ளியிடமும் அதுவேயாகப் பரமனாடுமே - காரைக் காலம்மை*) and tiger. He bears the moon and the parasu (*கொடு வெண்மழுவும் பிறையுந் ததும்ப - காரைக்காலம்மை*) in his hands. On his matted hair may be seen (*சூடு மதியஞ்சடை மேலுடையான்- காரைக்காலம்மை*) the moon; around his waist is found the coiled serpent. (*ஆடும் அரவம் அரையில் ஆர்த்த அடிகள் - காரைக்காலம்மை*) On his sacred feet are silambu, (*கழலொலியோசை சிலம்பொலிப்ப - காரைக்காலம்மை*) from which emanate resonant sounds; on his arms are found serpents; (*ஆடும் அரவப்புயங்கன் - காரைக்காலம்மை*) the lower locks of hair whirl around in all the eight directions". (*தாழ்சடையெட்டுத் திசையும் வீசி - காரைக்காலம்மை*)

The third is Ananda tandava or the Nathantha tandava performed by the Lord at Tillai (Chidambaram), the centre of the Universe. This dance was performed at Darukavana to quell the pride of the sages and repeated at Tillai for the benefit of Patanjali and Vyaghrapada. This dance represents Siva placing His right leg on the dwarf and dancing with the left lifted up. The lower right arm holds the abbaya mudra and the left arm is in the gajahasta form. The upper right arm holds the "udukkai" and the left bears the fire. Around the Lord is shown the Tiruvasi. The Nathantha tandava is also called Panchakritya tandava, representing creation, protection, destruction, veiling and salvation; srishti, sthiti, samhara, tirobhava and anugraha. These acts are considered to be the individual functions of Brahma, Vishnu, Rudra, Mahesvara and Sadasiva.



Siva's dance pervades the entire universe, moving as it were through earth, water, fire, air and ether. Siva as Rudra is the Lord of Cosmic destruction. What does He destroy? He destroys the anava, the ego in the heart of the soul. The heart where the ego has been burnt to ashes is in reality the cremation ground, where Siva performs his tandava. So we call him Sudalai Andi.

Siva's ananda tandva also stands for 'Namassivaya', the Panchaksharamantra. Umapati Siva in his "Unmai Vilakkam", states that the drum stands for creation, the abhaya hasta for protection, the fire represents destruction and the leg on the dwarf veils the anava, while the lifted leg assures salvation.

The prabha around Nataraja stands for the shape of omkara. The Tiruvasi is said to represent nature's dance, while the dance of Siva in the centre of the Tiruvasi represents the turiya or the fourth akshara of the omkara. "The essential of His Rhythmic Play as the source of all movement within the Cosmos which is represented by the Arch. Second, the purpose of his dance is to release the contless souls of men from the snare of illusion. Thirdly, the place of the Dance, Chidambaram, the centre of universe is within the Heart", says Ananda Coomaraswamy in his "Dance of Siva".

"None of today, however great, could more exactly or more wisely create an image of that energy which science must postulate behind all phenomena.

But it may not be out of place to call attention to the grandeur of this conception itself as a syntheses of science, religion and art. How amazing the range of thought and sympathy of those rishi-artists who first conceived such a type as this, affording an image of reality, a key to the complex tissue of life, a theory of nature, not acceptable to the thinkers of one country only, but universal in its appeal to the philospher, the lover, and the artist of all countries."

-பழ.பழனியப்பன் (தொ.ஆ), கம்பன்அடிப்பொடி கலைக்களஞ்சியம்

◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇

கம்பன் அடிப்பொடி அமரர் சா.கணேசன், 1908-இல் காரைக்குடியில் பிறந்தவர். பாரதியாரை நேரில் தரிசித்த பெருமைக்குரியவர். வ.வே.சு. ஐயர் முதலானோரால் கம்பனைத் தமது தெய்வமாக வரித்துக் கொண்டவர். காரைக்குடிக் கம்பன் கழகத்தை நிறுவியவர். உலகெங்கும் கம்பன் புகழ்பாடிக் கன்னித்தமிழ் வளர்த்தவர்.

இலக்கியம், கலை, சிற்பம், கல்வெட்டு முதலான துறைகளில் வல்லுநர்; விடுதலைப் போராட்ட வீரர்; இந்தியத் தொல்லியல் துறை தமிழகத்தில் தொடங்கப்படுவதற்குக் காரணமாக இருந்தவர்; தமிழகச் சட்ட மேலவை உறுப்பினராகவும், சட்ட மன்ற உறுப்பினராகவும் சிறப்புறப் பணியாற்றியவர்.

நூற்றாண்டுவிழாக் காணும் இவர், காரைக்குடியில் தமிழன்னைக்குத் திருவுருவச் சிலையெழுப்பி ஆலயமும் அமைத்த திருவாளர்.



# SAINT SEKKIZHAR ON THE MUSICAL HISTORY

**MU. ARUNACHALAM**

(The Tamil word for music is Isai which also means a lot more; ie. harmony in music, musical tone, hum, tune, melody, combination, blending, closeness, praise, a word etc.)

It is not possible to do full justice to the contribution of Sekkizhar to the musical history of his period in this short survey. He wrote the Periyapuranam in the year 1139-1140 A.D. We shall just briefly refer to one or two outstanding features pertaining to music in his large work. The story of Saint AnayaNayanar is a very poignant account of music itself. Anayar came of a cowherd class and he was an expert in playing the flute. Sekkizhar here describes the flute play of Anayar on a particular day.

He fashioned the flute out of a bamboo, in the technical manner specified in the books, and made therein the mouth-hole for blowing air and the seven holes for the seven Svaras with correct scientific measurements.

One day he was tending the herd of cows as usual. He came to a cassia tree. The yellow cassia is considered to be a favourite flower of Lord Siva. The tree was fully enveloped in its own golden blooms. This brought to his mind Lord Siva wearing the cassia blossoms on his matted locks. Immediately delicious music began to pour forth from his flute. It was as though honey was being poured into the ears. Anayar was not singing any song but he was only in tuning Panchakshara, the five- syllable Mantra of the name of the Lord on his flute.

Then he goes on to describe the effect of the music on all things, sentient and insentient.

"Cows forgot to chew the grass they had eaten. The calves which applied their mouths to the udders of their mothers forgot to suck milk there from. Bulls and deer with upturned ears came to listen to the music. Peacocks and other birds flocked to him, lost in the music. Cowherds forgot their work. Serpents came to him from their holes. Celestial nymphs from the heavens, other flying in the celestial regions, came to him from their vehicles. The very wind stopped blowing. The flower-laden branches in the trees did not move. Even the streams and rivulets stopped their flow. Clouds ceased their movements and did not drop their showers. Thunder did not sound and the seven seas ceased their ebb and flow.

"Thus the sweet music from his flute filled the whole earth and the heavens, and wafted to the ears of the Lord dancing in the Golden Hall. The Lord, the cause of all music, appeared with His Consort before Anayar and took him in the same singing state to His very presence in His Cosmic Dance."

The story of Anayar and his playing the Panchakshara Mantra on the flute are unique. Legends connected with Venugopala, Krishna, as the Divine singer on the flute are similar and they are no doubt very ancient. In one of his beautiful poems, Periyalvar of the Vaishnava canon sings of the play of Krishna on the flute in words of supreme ecstasy.

"The Aayar girls flocked to him cursing all their domestic barriers and surrounded him like a human garland of flowers. Young women, like peacocks and deer, crowded, unmindful of the loosening of their hair tresses and their dresses, celestial women in like manner came to him, turning their ears to him. The four celestial damsels Menakai, Tilottamai, Rambai and Urvasi fascinated by his music, forget their dance and their song. The Kinnara couples refused to touch their Kinnara Yazh and the celestial singers Tumburu and Narada forgot their veenas. The Gandharvas, travelling through the heavenly regions, were caught in the music and felt ashamed saying. 'this is beyond us'. The Devas who take the sacrificial Havis in Yagnas, forgot it and felt satisfied, feeling in their ears, the sense of sweet taste.

"Birds left their nests and cows came to him and lay down stretching their legs, forgetting to move their ears even. Deers came there, the half-munched grass sliding down through the corner of their mouths and stood there, like figures in a picture. Trees dripped honey from their flowers and their branches laden with blossoms all turned in his direction."

The two pictures -Sekkizhar's Anayar and Periyalvar's Venugopala - give us an idea of the power of music on all created things, as conceived of by eminent god-intoxicated poets.

Sekkizhar narrates the music-intoxicated life of Anayar in the story of forty-one verses. A reading of the text in the original, as a reading of the poem of the Alvar in his 11 verses, is certain to confer peace in the reader's heart. The ultimate aim of music is the conferment of peace, Shanti, and we can well say that this very narration of singing does evoke in our hearts the sense of peace.

In a book of 4253 verses, narrating the lives of 63 Saiva Saints, Sekkizhar devotes 1256 verses to the story of Thirugnana Sambandar. It is not a mere biography, but a long story of music, the seven Svaras and the numberless Panns or tunes (Ragas). It portrays the young saint, who lived only for a short period of sixteen years, as the great champion of Tamil and Music. On one occasion, Sambandar demonstrates the superiority of the God-made human voice over the man-made instrument, the Yazh (the singing of the Yazh-Muri Pann).

A special halo attaches to Sambandhar in this that he was fed divine milk by Parasakthi Herself at the age of three and thereafter he had become the son of God. He has performed more miracles than all the others and all of them for the welfare of society.

The narration of Sambandhar's visit to the city of Madurai at the request of the Pandiya queen is an epic in itself. The Queen and the Minister now arrive at the place of Sambandhar's stay in Madurai, to invite him to go to the palace and cure the king's fever. They now see him a second time. But how do they see him? Sekkizhar describes the vision they had:

"The holy Form of Supreme Gnana,
The one prop of the four vedas,
The crescent moon that glows,
Not in the heavens, but on this earth,
Him that strings together the glories
Of the Lord with the ruddy-matted locks
With the cassia blooms dripping honey,
The seven notes of sweet music-
They saw to their eye's delight."



The climax of the songs is that the two saw to their eyes delight, Sambandhar, as the seven notes of Sweet music. Verily can Sekkizhar identify Sambandhar with Sweet Music, because Saint Sundarar, another Theveram singer, coming just fifty years after Sambandhar, sings of him in the following words:

"He, the Lord of Kolakka,
Gifted a pair of cymbals of Sambandhar
For all the words to see- to Sambandhar,
Who propagated the cause of Tamil, daily
Through his sweet music, and was
Himself moved by his music."

Thus, the whole story of Sambandhar, from his birth or incarnation to the ultimate moment of his merger in the Divine Effulgence, seems to be one continuous voyage through the ocean of music.

This epoch may very well be termed the epoch of Sambandhar - the incidents in his life bearing on music are so many. He is the only singer who goes about singing, marking time with the golden cymbals, referred to by Sundarar in the song quoted above. He is again the only singer who is provided with a Yazh (veena) player to accompany his songs. The saints call the Lord of Arur the one that is the music of seven Svaras. The seven svaras called in the Tamil books from the first epoch Kural, Tuttam, Kaikkilai, Urzai, Ili, Vilari and Dharam came to be Sanskrited later as Shadjamam, Rishabham, Gandharam, Madyamam, Panchamam, Dhaivatham and Nishadam and the first letters of these seven notes, sa, ri, ga, ma, pa, dha and ni came to be taken as the symbols for the notes. These notes are fully dealt with in Silappadikaram of the earlier epoch and in the Anaya Nayanar puranam, In all these ways, the contribution of Sambandhar to Tamil music is immense and this has been well highlighted in Sekkizhar's biography of the Saint.

The contribution of Saints Appar and Sundarar are no less significant. Appar has sung only a few songs of ten Panns but his other songs like Tiru-Nerisai, Tiru Virutham, Tiru Kuruntohai and Tiru Tandakam are in different classes by themselves. These are sung now differenty in different Panns, though the Pann had not been specified. He is called the prince of Tandakam by later generations which had great admiration for his Tandakam songs.

We find Sundarar has sung a Pann, Senduruti, not found in the 23 Panns of Sambandhar. The legend is that the three saints Sambandhar, Appar and Sundarar had sung 49,000, 38,000 and 16,000 Padikams respectively but only 383, 312 and 100 are now available. From the Senduruti Pann available in Sundarar, we may say that all been lost except the few that have been unearthed by Nambiyandar Nambi.

The large volume of Sekkizhar rounds off the large span of the hymnal epoch beginning with Sambandhar and his music in the 7th century to its culmination with his own account in Periyapuranam in the 12th century. We are grateful to Sekkizhar not only for his discerning biography but also for his insight into the music of the period, into the details of the musical career of Sambandhar and for his most elevating account of Anayar's music.

The greatest achievements of the period were the unearthing and publication of the Thevaram songs of the three. Sambandhar, Appar and Sundarar, by Nambiandar Nambi of the Sivacharya clan of TiruNaraiyur through the grace of Polla Pillaiyar, Vinayaka, enshrined in the local temple, at the request of the Chola Emperor Rajaraja I by about 1000 A.D., and the arranging of the musical notation therefore by a damsel of the clan of Tiru Nilakanda Yazhppanar who accompanied Sambandhar on the yazh, some 360 years earlier. It is remarkable that the same tunes set by her on that day have been handed down to us by the temple singers, Oduvar then called Pidarar, and by the temple Nathasvaram players. Tradition says that Nathamunigal, the Vaishnava Acharya was fascinated by the Saiva hymn singers in the temples and so, desirous of getting the Vaishnava hymns also similarity sung, he had his two nephews trained in Pann music and through them extended the Panns to the Nalayiram (Vaishnava) songs also.

The story of Karaikkal Ammai and her singing of the two Panns we get only from Sekkizhar. He has besides narrated the lives and songs of Saints Appar and Sundarar highlighting their contribution to music.

When we go through this account of the state of music in Tamilnadu, during the years 5th century to the 12th century A.D., we are left in no doubt wherefrom Sanskrit grammarians like Matangar (Brhaddesi), and Saranga Devar (Sangita Ratnakaram) learnt their music.

A significant feature of the collection of the devotional songs of the hymnal epoch both in Saivism and in Vaishnavism may be noticed here. Of the twelve books into which the Saiva hymns were collected, books 1 to 9 are musical songs while Nalayiram (Four thousand Vaishnava)songs, the first, second and fourth books (thousands) are musical songs while only book three (Iyarpa) is non-musical. This would indicate the great emphasis laid on music in all devotional poetry in this period.

***(Mu.Arunachalam, Musical Tradition of Tamilnadu, edited by, S. Cunjithapatham, published by International Society for the investigation of Ancient Civilisations, Chennai. First Edition, 1989.)***

# THE EVOLUTION OF ANCIENT TAMIL CULTURE IN THE NATURAL ENVIRONMENT

KATHIR MAHADEVAN

Man's adoption to his natural enviroment is not only physical, but also cultural and social. Hence the environmental basis of social geogrophy is the study of the reciprocal relation between environmental factors, man's distribution and activities. The concept of Geography a century ago was quite different from what it is now. At the time Geography was thought to be merely a description of the physical aspect of the earth. Slowly the vista increased as a result of explorations and discoveries and with it the scope of Geography also expanded. From the mere descriptive stage, Geography passed into a period which may be termed as its distribution stage. In 1899 the international Society of Geography defined the subject as "the exact and organised knowledge of the distribution of phenomena on the surface of the earth culminating in the explanation of interaction of man earth's phenomena. For a number of years this phase of the subject had quite a vogue, but as an earth science purely, it was thought that the study tended too much towards physiography. Prominent goegrophy in a more broader and real sense. Consequently in a more broader and real sense. Consequently early in the 20th century, largely due to the influence of Prof. H.M. Davis, the sugject centered what might be called the environmental or bio graphic stage. A more recent point of view is to consider geography as a science which studies the reciprocal relationship between of Geography in determining the character and culture of a people has come to be recognised and Graebner terms this as "Anthropo-Geography" (meaning the relation between culture and environment). In more recent times the term Human Geography is more widely used. It is a sceince which neither the ethnologist nor the literary critic can afford to neglect.

Further "Geography constitutes the permenent basis of every nation's history. It is not too much to say that it is one of the major factors that determines the historical evolution of a people.

Even cultural anthropology does not consider that ancient culture can be explained by Psychology alone, but holds that local cultures must be studied in their historiographical settings. So the evolution of cultural factors in a society can best be studied in relation to the Geographical environment of that nation. Social progress is more to be considered as the joint product of man and nature. The cultural life of a society is a continuous strugggle of man against man, man against his environment, a struggle at the physical, intellectual and moral planes. Out of this conflict new forces emanate and give birth to fresh thinking, and in the process culture is evolved. Therefore the accomplishments of human beings depend not only on what they wish and can do, but also in part, at least, on the natural environment of their habitation.

The concept and definition of the modern view of Geography is found in Tolkappiyam which was written two thousand and five hundred years ago. Tolkappiyar, known for his profound respect for tradition, reiterates that his views are expressions of his a growth of human evolution with its roots deeply embedded in life, we can say that all that he says about literary conventions and traditions can easily be applied to the ancient Tamils and their heritage also.

The 'Porulathikaram' of Tolkappiyam helps us to have an idea of the early Tamils and it portrays the rich culture acquired by the Tamils in relation to their natural environment. The Tamils understood that culture is the consequence of persons seeking to realise their potentialities sufficiently to satisfy their inner drives. Therefore they have prominence to 'Akappanpatu' or love. Love is the most refined of human sentiments and serves as a corner stone for the civil and cultural attainments of a country. It is this force of love that brings together the community and transcends the dimensoions of caste and religion. The study of Tolkappiyar leads us to view that life on the earth is governed by the environment and the habitat. The concept of the cultural heritage and antiquity of the Tamils can be represented by a diagram:

The literary embellishments of the Tamil poets recognise that Geographical environments have a profound influence on the life of the individual. Therefore they divided the activities in life into two sectors viz., Akam and Puram. They did so because they could understand that natural environment moulds the mental attiudes and the physical structure of a society. These tend to influence the evolution of culture and aids in determining nation character.

The ancient Tamils noted that the habitable parts of the earth's surface were divisible into five natural regions according to the nature of culture which prevailed in each region. The term Tinai denotes both the code of behavior and the region. The word Tinai is used in the sense of earth in general. Possibly the word tinai is derived from a root Tin or Tittu meaning a stretch of land. The ancient Tamils were aware that the terrafirma consisted of five natural regions, and the manifestation of human life - both the physical and psychological aspects - is due to the impact of the geographical environment on the life of the people.

- Tamil- The Classical Language, 'kathiragam". 271, Arignar Anna Nagar, Madurai-625020, 2005.

## HEART'S UNION

Beloved,
Your mother and my mother
Are quite unknown to each other;
Your father and my father
Are in no way related.
As for you and I,
We have never met before.
And yet,
Like the mingling of the rain water
With the red soil
Our hearts have mingled.

KURUNTHOGAI - 40
CHEMPULAP PEYALNEERAR
SANGAM

யாயும் ஞாயும் யாரா கியரோ ?
எந்தையும் நுந்தையும் எம்முறைக் கேளிர் ?
யானும் நீயும் எவ்வழி அறிதும் ?
செம்புலப் பெயல்நீர் போல
அன்புடை நெஞ்சம் தாம்கலந் தனவே !

குறுந்தொகை - 40, தலைவன் கூற்று
செம்புலப் பெயல்நீரார்

ஆங்கில மொழியாக்கம் பேராசிரியர் ம.இலெ. தங்கப்பா, புதுவை

## புறநானூற்றில் நீர்மேலாண்மை

ஆ. மணவழகன்
விரிவுரையாளர், அறிவியல் மற்றும் மானுடவியல்புலம்,
எஸ்.ஆர்.எம் பல்கலைக்கழகம், காட்டாங்குளத்தூர்

ஒருநாட்டின் நீர்நிலைகள் என்பவை அந்நாட்டின் உயிர்நாடியாக அமைகின்றன. அவ்வகை நீர்நிலைகளை உருவாக்கினால் மட்டும் போதாது. அவற்றை இயற்கைச் சீற்றங்களிலிருந்தும், எதிரிகளிலிருந்தும், விலங்குகளிடமிருந்தும் பாதுகாத்தல் வேண்டும். நீர்நிலைகளை உருவாக்குதலும், அவற்றைக் காத்தலும் நாட்டின் வளர்ச்சிக்கு ஏற்ற செயலாக அமைகிறது. அவ்வகையில், இயற்கைச் சீற்றத்திடமிருந்து நீர்நிலைகளைக் காக்க, காவலர் அமர்த்தப்பட்டனர். *(புறம்- 15:9-10)* கயம் என்பது குளத்தையும், ஏரியையும் குறிப்பதாகும். இந்நீர்நிலை பொதுமக்களுக்கும், கால்நடைகளுக்கும் குடிநீரின் தேவைக்காக உருவாக்கப்பட்டதாகும். பொதுமக்களின் குடிநீர்த்தேவையினை நிறைவுசெய்யும் இவை, போர்க்காலங்களில் எதிரிகளால் அழிவுக்கு உட்பட்டன. யானைகளை விட்டு இந்நீர்நிலைகளை அழித்தல் என்பது பண்டைப் போர் முறைகளில் ஒன்றாக அறியப்படுகிறது. ஆகவே, இவ்வகை நீர்நிலைகளுக்குப் பாதுகாப்புத் தேவையாகியது. இதனைப் பண்டைத் தமிழர் அமைத்தனர் என்பது பெறப்படுகிறது. *(புறம்- 15:9-10)*

## தமிழர்களின் உலகளாவிய அறக்கொள்கை

முனைவர் அ. ஜோஸ்பின் புனிதா
விரிவுரையாளர், உருமுதனலட்சுமி கல்லூரி, திருச்சிராப்பள்ளி

உலகு தழுவிய மானுடப் பார்வையின் மிகச்சிறந்த அடையாளமே இம்மைப் பயனை வற்புறுத்தியதாகும். இறந்தபின் அடையும் வீட்டுலக இன்பத்தைக் கருதி, மற்றவர்களுக்குத் தானங்கள் கொடுப்பதைவிட வறுமையால் வாடும் பிறருடைய துன்பத்தைப் போக்க உதவுவதே மிகப்பெரிய அறம் எனப் புலவர்கள் வற்புறுத்தினர். இதனை,

இம்மைச் செய்தது மறுமைக் காமெனும்
அறவிலை வணிகனாயலன் பிறரும்
சான்றோர் சென்ற நெறியென
ஆங்குப் பட்டன் றவன் கைவண் மையே *(புறம்-134: 1-4)*

என உறையூர் ஏணிச்சேரி முடமோசியாரும்,

கடாஅ யானைக் கலிமான் பேகன்
எத்துணை யாயினும் ஈத்தல் நன்றென
மறுமை நோக்கின்றோ அன்றே
பிறர், வறுமை நோக்கின்றவன் கைவண்மையே *(புறம்-141: 13-16)*

எனப் பரணரும் பாடுவதால் அறியலாம். இத்தகைய கருத்துக்கள் மனிதநேயத்தின் விளக்கங்களாக அமைந்தவையாகும்.

# உலக மயமாக்கலின் தாக்கமும் வருங்காலத் தமிழும்

முனைவர் மா. கணேசன்
மொழியியல் உயராய்வு மையம்,

முனைவர் ஏ. ஆறுமுகம்
தத்துவத்துறை,

அண்ணாமலைப் பல்கலைக்கழகம்

ஒரு சமுதாயத்தின் மொழியும் பண்பாடும் தனித்தனியே பிரிக்க இயலாத ஒன்று, இன்று உலக அளவில் ஏறத்தாழ 7000 மொழிகளும், அவற்றைச் சார்ந்த சமூகப்பண்பாட்டு நிலைகளும் இருந்து வருகின்றன. ஆனால் அவற்றில் பல அழிவுநிலையின் விளிம்பில் இருக்கின்றன. ஸ்டீவர்டு ப்ரேண்டு (Stewart Brand) என்பவரின் கூற்றுப்பிரகாரம், "உலகமயமாதலின் விளைவாக உலக மொழிகள் பலவற்றிற்கும் பெரும் அச்சம் ஏற்பட்டுள்ளது; இந்த நூற்றாண்டில் 50 முதல் 90 விழுக்காடு மொழிகள் மறைந்துபோகும் வாய்ப்புள்ளது" என்று தெரிவித்துள்ளார். வேறுபல உலகமொழிகள் ஆங்கிலமொழித்தாக்கத்தால் அவற்றின் உச்சரிப்பு, சொல்வரிசை, இலக்கண அமைப்பு, ஆங்கிலச் சொற்களை ஏற்றுக்கொள்ளுதல் போன்ற பல்வேறு மாற்றங்களுக்குத் தள்ளப்பட்டுள்ளன. ஏறக்குறைய 417 மொழிகள் அழியும் நிலையில் உள்ளதாகக் கருதப்படுகிறது. அவை, யாவும் மிகவும் குறைந்த மக்களால், குறிப்பாக முதியோர்களால் பேசப்பட்டு வருகின்ற மொழிகளாகும். www.ethnoloue.com என்ற இணையதளத்தின் கருத்துப்படி இன்னும்பல மொழிகள் பல்வேறு நிலைகளில் அழிவை நோக்கி நகர்ந்து கொண்டுள்ளன. இந்நிலை ஒரு புதிய பரிணாமம் என்றோ அல்லது ஆங்கிலமொழி பரவலாகவே முழுமையாக ஏற்பட்டுள்ளது என்றோ சொல்லிவிட முடியாது. இன்னும் சொல்லப்போனால் இத்தகைய போக்கு வெள்ளையர்களின் ஆதிக்கத்தால் உலகின் பெரும்பாலான நாடுகளில் பேசிவந்த பல்வேறு மொழிகளும், கிளை மொழிகளும் அழிந்து ஒரு சில மொழிகளின் வளர்ச்சியை உருவாக்கி உள்ளது என்பதை வரலாற்றில் படித்திருக்கிறோம். பொருளாதார அரசியல் ஆதிக்கத்தின் விளைவாக மொழி ஆதிக்கம் அமையும். (பிளிப்சன், 1992)

## தமிழ் - ஆங்கில மொழிகளின் நிலைப்பாடு

இந்தியாவில்ஆங்கிலம் இரண்டாவது ஆட்சிமொழியாக இருந்துவருகிறது. மருத்துவம், பொறியியல் போன்ற தொழிற்கல்வி மற்றும் அனைத்து உயர்நிலைக் கல்விகளிலும் ஆங்கிலமே தனி பயிற்றுமொழியாக இருந்துவருகிறது. தமிழ்மொழி ஒருசில நிலைகளில்கூடப் பயிற்றுமொழியாக உயர்நிலைக் கல்வியில் அமையவில்லை. தமிழ்நாட்டில் இன்று ஆங்கிலப் பயிற்றுமொழிப்பள்ளிகள் தமிழ் பயிற்றுமொழிப் பள்ளிகளைவிட எண்ணிக்கையில் மிகுந்துள்ளன. ஒரு காலக்கட்டத்தில் கல்வி என்பது அறிவுபெறுவதற்கான மூலமாக இருந்தது. ஆனால் இன்றோ வேலைவாய்ப்புக்கான மூலமாக மாறி இருக்கின்றது. தமிழ்நாட்டில் தமிழைப் பயிற்றுமொழியாகக் கொண்ட பள்ளிகள் அருகி வருகின்றன. ஆங்கில மொழிப்பாடம் தற்போது தொடக்கநிலைப் பள்ளியிலேயே அறிமுகப்படுத்தப்படுகிறது.

## மொழிப்பயன்பாடும் மொழி மனப்பான்மையும்

தமிழ்ச் சமுதாயத்தில் ஆங்கிலமொழி மோகம் நாளுக்கு நாள் வளர்ந்து வருகின்றது. ஒரு காலத்தில் தமிழ்மொழியே பயன்படுத்தப்பட்ட சூழல்களில் இன்று ஆங்கில மொழி ஆக்கிரமித்துள்ளது. குறிப்பாக, அறிவியல், தொழில்நுட்பத் துறைகளில் முழுமையாக ஆங்கிலமொழிப் பயன்பாடே உள்ளது. இன்றைய தகவல் தொழில்நுட்பத் துறையில், பாட அறிவுக்கு இணையாக ஆங்கிலமொழிப்புலமையும் அடிப்படைத் தகுதியாகக் கருதப்படுகிறது. பல்வேறு பணிகள் மற்றும் மென்பொருள் பயன்பாட்டில் ஆங்கில மொழிப்புலமை மிகவும் தேவைப்படுகிறது. தகவல் தொழில்நுட்பப் பணியிடங்களில் ஆங்கிலமே தகவல் பரிமாற்ற மொழியாக உள்ளது.

## தமிழ் இலக்கியங்களில் இயற்கைக் காப்பு

முனைவர் ப.கொழந்தசாமி,
தமிழ் விரிவுரையாளர், தாகூர் கலைக்கல்லூரி, புதுச்சேரி.

இயற்கையோடு இயைந்து வாழ்ந்த சங்ககாலம் முதல் செயற்கையின் பெருக்கால் சீர்கெட்டு நிற்கும் இக்காலம் வரை தமிழில் தோற்றம் பெற்றுவரும் இலக்கியங்கள் சூழல் மேம்பாட்டுச் சிந்தனைகளை முன்வைத்துள்ளதைக் காணமுடிகிறது.

திணை, அவை பெயரிடப்பட்ட முறை, அகத்தின் முப்பொருளுள் முன்னிரண்டும் இயற்கை எழிலாக அமைந்தவை. மரத்தை உடன்பிறப்பாகக் கருதிய மனநிலை, விலங்குகளை, பறவைகளை, தாவரங்களைக் காத்துப் போற்றியமை, நாகப்பாம்பை நல்லபாம்பாகக் கூறியமை, இறைவழிபாட்டில் இயற்கை பெறும் சிறப்பிடம், அரசனின் காவல்மரம், கோவிலின் தலவிருட்சம் வாகனம் முதலியவை சிறப்புற்றமை, மனிதப்பண்புகளை மரத்தோடு ஒப்பிட்டுப் பயன்மரம், நச்சுமரம் என்று கூறியமை போன்ற பின்புலங்கள் சுற்றுச்சூழலியல் தொடர்புடையவை. காமம் மிக்க கழிபடர்கிளவியில் அஃறிணைப் பொருட்களைத் துணைக்கொண்டு உணர்ச்சி வடிகால் தேடியமை, காதல் வெளிப்பாடாகக் கையுறை அளித்தல், திருமணம் மரத்தின் அடியில் நடத்தப்பட்டமை ஆகியன சூழல் நோக்கம் கொண்டவை. மருத்துவமுறைகள், கைவினைப் பொருட்கள், கட்டுமானப் பொருட்கள், வீட்டுப் பயன்பாட்டுப்பொருட்கள் ஆகியவற்றின் தயாரிப்பில் இயற்கை மேன்மை பேணப்பட்ட வாழ்வியல் கூறுகள் முதலியவற்றை உளங்கொண்டு, சூழலியல் பாதுகாப்புக்கும் மேம்பாட்டுக்கும் உரிய வரைவாக்கத்தைக் கைக்கொள்ளத் தமிழ் இலக்கியங்கள் வழிகாட்டுகின்றன.

## தமிழின் உலகு தழுவிய மானுடப் பார்வை

இரா.பரஞ்சோதி
துணை மாவட்ட ஆட்சியர் (ஓய்வு), பொழிச்சலூர், சென்னை - 74.

தன்னை விரும்பி வந்த இரவலரை இகழாதவரும், செல்வம் வந்த காலத்தில் மறதியைக் கைவிட்டவரும், எக்காலத்தும் பிறர் செல்வம் கண்டு பொறாமை அடையாதவரும் ஆகிய இம்மூவர் அழியாத புகழுடையவர் ஆவார் என நல்லாதனார் எனும் புலவர் பின்வரும் பாடலில் விளக்குகின்றார்.

"தன்நச்சிச் சென்றாரை எள்ளா வொருவனும்
மன்னிய செல்வத்துப் பொச்சாப்பு நீத்தானும்
என்றும் அழுக்காறி கந்தானும் இம்மூவர்
நின்ற புகழுடை யார்" (திரிகடுகம்)

"ஒற்கம்தாம் உற்ற இடத்தும் உயர்ந்தவர்
நிற்பவே நின்ற நிலையின்மேல் - வற்பத்தால்
தன்மேல் நலியும் பசிபெரிது ஆயினும்
புன்மேயா தாகும் புலி. (பழ. நானூறு - 70)

தனக்கு மிகுதியான பசியேற்பட்டபோதும், புலியானது புல்லை மேயாதாம். அதுபோல, உயர்ந்த சான்றோர் தாம் வறுமையுற்ற காலத்திலும், தாம் முன்பு இருந்த சான்றாண்மையுடனே இருப்பாரேயன்றித் தாழ மாட்டார் என்று முன்றுறையரையனார் எனும் புலவர் சான்றாண்மையின் சிறப்பை ஒரு பழமொழியுடன் விளக்குகிறார். மேற்படி நீதிநூல்களின் பாடல்கள் உலகம் தழுவிய அறம் உரைப்பதாய் உள்ளன.

# சீவன் முத்தனும் சைத்திய புருஷனும்

முனைவர் க.விநாயகம்,
தமிழ்ப்பேராசிரியர், ஸ்ரீமத் சி.பா.சு.கல்லூரி, மயிலம்

உலகப் படைப்பில்- கீழ்நிலை வெளிப்பாட்டில் இறைவனின் நித்யமான ஆன்மாவாக, தெய்வச்சுடரின் ஒரு பொறியாகத் தோன்றி, ஜீவனின் பரிணாமத்தைத் தாங்குகின்றது சைத்திய புருஷன். ஒரு பொறி பெரு நெருப்பு ஆவது போல பரமனின் ஒருகூறு சைத்திய புருஷனாக மாறி உணர்வின் வளர்ச்சியோடு ஒன்றி நிற்கின்றது. இது பரிணாமத்தால் மேன்மேலும் வளர்ச்சி அடையும் தன்மையையும் உடையது.

பூர்வீகத்தில் இறைவனின் ஒருபாகமாக இருந்த சைத்திய புருஷன் தன்னை இறைவனின் குழந்தையாக, பக்தனாக, நண்பனாகக் கருதும் போக்கிலும் இயங்குகின்றது. நித்திய ஜீவ நிலையினதாகிய சைத்திய புருஷனே முற்பிறவிகளுடனும், ஆளுமைகளுடனும், தொடர்பை உண்டாக்குகின்றது. இம்முறையினால் பிறவிச் சாராம்சத்தையும் செயல் ஆற்றலையும் இணைக்கும் பேராற்றலால் இன்றியமையாததாகின்றது.

சைத்திய புருஷன் இறையம்சத்தின் ஒரு- பகுதியாதலின் இறைவனைச் சார்ந்திருத்தல், ஐக்கியபாவம், இறைவனுக்கே அர்ப்பணித்தல், இயல்பை மாற்றும் ஆற்றல், உண்மையான மனம், ஜீவன் ஆகியவற்றைக் காணும் ஆற்றல் உடையதாகின்றது.

பரம் பொருளினிடம் பக்தியும், இறைவனது அடியார்களின் இடையறாத் தொடர்பும், அஞ் ஞானத்தில் உழலும் உலகு, உயிர்களிடத்து இரக்கம் கொள்ளுதலும், எங்கும் இறைவனைக் காணும் முறையில் ஏற்படும் மகிழ்ச்சி, அழகுணர்ச்சி, திருப்தி முதலிய அருளியல் பண்புகளோடு இதயத்தில் குடியிருக்கும் இறைவனை நோக்கிச் செல்லும் போக்கும் சைத்திய ஜீவனுக்கு அமைந்திருக்கின்றது.

# இணையத் தமிழ்

இ.இரபீக்
தமிழ்த்துறைத் தலைவர், அரக்கோணம் கலை அறிவியல் கல்லூரி, அரக்கோணம்

உலகமே ஒரு நாடகமேடை என்ற சேக்ஸ்பியரின் கூற்றுக்கு மாறாக, உலகமே ஒரு தமிழ் இணைய மேடை என்ற புதுப்பா வரி எழுதும் அளவிற்குத் தகவல் தொழில்நுட்பம் தமிழ்நாட்டில் குறிப்பாகத் தமிழில் வளர்ந்து செழித்துள்ளது. தகவல் புரட்சியின் பயனை, தமிழகத்தின் பாமர மக்களுக்கெல்லாம் எடுத்துச் செல்லும் முயற்சியில் செயல்பட்டு வருகின்ற 'தமிழ்நாடு அரசு இணையம் 99' என்ற பெயரில் உலகத்தமிழ் இணையக் கருத்தரங்க மாநாட்டினை பிப்ரவரி 7,8 ஆகிய நாட்களில் கூட்டியது. இம்மாநாட்டின் முக்கிய நோக்கங்களாவன.

1. தமிழ் இணையத்தில் மற்றும் தமிழ்க்கணிப்பொறிப் பயன்பாடுகளில் தமிழ் எழுத்து வடிவங்களைப் பயன்படுத்த உதவும் விசைப்பலகையைத் தரப்படுத்துவது.
2. தமிழ் எழுத்து வடிவங்களைக் கணிப்பொறியில் எளிதாகப் பயன்படுத்தும் வகையில் உலகம் முழுமைக்குமான குறியீட்டு முறைகளை அனைவரும் பயன்படுத்தும்படி ஒருமுகப்படுத்துவது.
3. இணையத்திற்கான தகவல் பரிமாற்றத்தின்போது எல்லாருக்கும் புரியக்கூடிய தமிழ்மொழி எழுத்துக்கோவையை உருவாக்குவது.

இந்த உலகத் தமிழ் இணையக் கருத்தரங்கில் தமிழ்நாட்டில் உள்ள பல்வேறு கல்வியாளர்கள், மொழிவாணர்கள், கணிப்பொறி வல்லுநர்கள், சொல்மி (word processor) உருவாக்கியவர்கள், ஆராய்ச்சியாளர்கள் தவிர சிங்கப்பூர், மலேசியா, இலங்கை, சுவிட்சர்லாந்து, கனடா, பிரான்ஸ் ஆகிய நாடுகளிலிருந்தும் இணையத்தைத் தற்போது பெருமளவு பயன்படுத்தியும் ஆய்வும் செய்துவரும் அறிஞர்கள் தம்முடைய பங்களிப்பைச் செலுத்தியுள்ளனர்.

# தமிழர் பண்பாட்டில் வீரவணக்கம்

சு.பிரேம்குமார்
முனைவர் பட்ட ஆய்வாளர், சென்னைக் கிறித்தவக் கல்லூரி, தாம்பரம்.

பழந்தமிழரின் வழிபாட்டு முறைகளில் வீரவணக்கமும் ஒன்றாகும். "வீர வணக்கமானது, திடீரெனத் தோன்றியதொன்றன்று. புராதனத் தமிழ் மக்களிடையே நிலவிய பல நம்பிக்கைகளுக்கும் இதற்கும் தொடர்புண்டு என நாம் நம்பலாம். பொதுவாகவே, இறந்தவர்களுக்குச் செய்யும் இறுதிச் சடங்குகள் வீரவணக்கம் தோன்றிய விளைநிலமாகும்" என்பர். மிகப் பழங்காலத்திலிருந்தே இறந்தவரை அடக்கம் செய்வதிலும், அவர்களது தேவைக்காகப் பொருள்களைப் படைப்பதிலும் பண்டைக்கால மக்கள் மிகுந்த கவனம் செலுத்தி உள்ளனர் என்பது இன்று வரலாற்று அறிஞர்களுக்குக் கிடைக்கும் முதுமக்கள் தாழிகள் மூலம் நம்மால் அறிய முடிகிறது.

போரிலே விழுப்புண்பட்டு வீழ்ந்திறந்த வீரரைத் தெய்வமாகப் போற்றினர். அவர்கள் இறந்த இடத்தில் கல்லினை அமைத்து வழிபட்டனர். இதனை,

"ஒன்னாத் தெவ்வர் முன்னின்று விலங்கி
ஒளிரேந்து மருப்பிற் களிறெறிந்து வீழ்ந்தெனக்
கல்லே பரவி னல்லது
நெல்லுகுத்துப் பரவுங் கடவுளு மிலவே."

என்று பாடுகிறார் மாங்குடிகிழார். பகைவர் முன்னே அஞ்சாது நின்று அவர் மேற்செலவைக் குறுக்கிட்டுத் தடுத்து, யானைகளைக் கொன்று வீழ்ந்துபட்ட வீரரது நடுகல்லைக் கடவுளாகக் கருதி வழிபடுவதல்லது, நெல்லைச் சொரிந்து வழிபடும் தெய்வம் வேறொன்றுமில்லை என்பது பாடலின் பொருள். இதனால், வீரரைத் தெய்வமாக வழிபடல், எத்துணைச் சிறப்புடைய தாயிருந்தது என்பது தெளிவாகின்றது. இந்நடுகல் வழிபாட்டுத் தொடர்ச்சி பிற்காலத்தில் வீரர்களுக்கு மட்டுமின்றி பிறருக்கும் ஏற்றதாக அமைந்தது என்பது கண்ணகி வரலாற்றின்மூலம் அறிய முடிகிறது. கற்புக்கடம் பூண்ட பொற்புடைத் தெய்வமான கண்ணகிக்கு இமயத்தில் கல்கொணர்ந்து சிலைவடித்தான் சேரமன்னன்.

"கங்கைப் பேர்யாற்றுக் கரையகம் புகுந்து
பாற்படும் மரபிற் பத்தினிக் கடவுளை
நூற்றிறன் மாக்களி னீர்ப்படை செய்து"

எனக் கண்ணகி சிறப்புற்றதைச் சிலப்பதிகாரம் வருணிக்கும். எனவே, வழிபாடு, வழிபடும் இடம், முதலியவற்றின் பரிணாம வளர்ச்சியில் கல்நட்டு வழிபடுதல் எத்தகைய பங்கினை வகித்தது என்பதை நம்மால் அறியமுடிகிறது.

## கவிஞர் இரா.மீனாட்சியின் கவிதைகளில் இயற்கைநேயம்

முனைவர் மு. அருணாசலம்
முதுநிலை தமிழ் விரிவுரையாளர், பெரியார் ஈ.வெ.ரா. கல்லூரி, திருச்சி.

புவியின் பிள்ளைகளான மரங்கள் மனிதர்களுக்குக் கடவுள் அளித்த வரங்கள். ஆனால், அதனை மறந்துவிட்டு மனிதஇனம் சாபமாகக் கருதி வகைதொகையின்றி மரங்களை அழித்து வருகின்றனர். இதனைக் கவிஞர் குழந்தைப் பருவத்திலிருந்து தன்னுடன் தொடர்பு கொண்ட மரங்கள் மூலம் 'மரங்களும் சில விவரங்களும்' என்னும் கவிதையில் பதிவு செய்துள்ளார். கிராமத்தில் உயிர்க்காற்றை அளித்த அரசமரம், இசை மரமாகத் தாலாட்டிய பூவரசு, இரக்க உணர்வு சுரந்த தாய்ப்பலா, அன்ன சத்திரமாக விளங்கிய ஊர்க்கோடி மாஞ்சோலை, புளியந்தோப்பு ஆகியவற்றை எல்லாம் காணமுடியாத நகர்மயமாதல் வாழ்வு வாழ்ந்து வருவதாகக் கருதுகின்றார்.

அரச மரத்தைப் பூவரசு மரத்தைப்
புளிய மரத்தைப் பார்க்க வேண்டும்
பனம்பழம் சாப்பிட வேண்டும்
வேப்பம்பழம் பொறுக்க வேண்டும்
சொந்த ஊர்ப்பக்கம் போகவேண்டும்
காக்கை குருவிகளே
என் கடிதத்தைக் கொண்டு போங்களேன்.
பட்டணத்தில்
எட்டாவது மாடியிலிருக்கிறேன்.

என்று நகர நாகரீகப் பரவலில் மரங்களை இழந்து, காங்கிரீட் வனத்தில் வாழும் வெறுமை சார்ந்த மூச்சுமுட்டும் வாழ்வு வேண்டாம் என்பதன்மூலம் நகரங்களை மரங்கள்மூலம் பசுஞ் சோலையாக்கிட வேண்டிய தன் கனவை மறைமுகமாகச் சொல்கிறார்.

## இனியொரு சாதி

முனைவர் க.திலகவதி
விரிவுரையாளர், தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர்.

பாரதியார் தம் சொந்த வாழ்க்கையிலே சாதி ஒழிப்பைச் செயல்முறைப்படுத்தியவர். குழந்தைகளுக்குக் குழந்தைப் பருவத்திலே சாதி ஒழிப்புச் சிந்தனையை ஊட்டியவர். அனைவரும் சகோதரர், அனைவரும் சமம் என்பதை உணர்த்தியவர். தொழிலால் பொருளாதாரத்தால், குலத்தால் வேற்றுமை நிலை பாராதிருத்தலை அறிவுறுத்தியவர்.

அனைவருக்கும் விடுதலையும், சுதந்திரமும் உண்டெனப் பாடியவர். தமிழ்நாட்டில் தமிழ்ச்சாதியும், இந்தியாவில் பாரதசாதியும், உலகளாவிய நிலையில் மனித சாதியும், வாழ்க்கைக்கு ஆண்-பெண் சாதியும் இருக்க வேண்டும் என விரும்பியவர்.

இனியொரு சாதி செய்வோம்!
அதை எந்த நாளும் காப்போம்!
அதன் பெயர் மானிடச் சாதி என்போம்!
சாதி ஒழியட்டும் சமத்துவம் மலரட்டும்!

## தமிழின் செவ்வியல் பண்புகள்

எஸ். இளமாறன்,
கிடரகுழிவிளை, நெய்யூர், கன்னியாகுமரி மாவட்டம்.

தொல்காப்பியம் தொன்மையும் (காலம்) தற்போதைய இலக்கியங்களுக்குத் தலைமையுடையதாகவும் அமைகின்ற பொதுப்பண்பு செவ்வியல் பண்பாகும். 'என்மனார்', 'என்ப' போன்ற சொற்கள் அகத்தியத்தினை மரபாகக் கொண்டு நூல் இயற்றப்பட்ட தன்மையைக் குறிக்கிறது. 'நூல்மரபு, மொழிமரபு' போன்ற இயல்கள் மரபு பற்றிய செவ்வியல் பண்பாக்கத்தினை நினைவு செய்கின்றன. தொல்காப்பியத்தைப் பின்பற்றி எழுந்த இலக்கணம் (நன்னூல், யாப்பு) மூலம் இலக்கண விதிகளின் மரபினை வளரச் செய்த பெருமை தொல்காப்பியத்துக்குரியதாகும்.

சங்க இலக்கியங்கள் செவ்வியல் இலக்கியங்கள் என்பதற்குப் பக்குவம், பண்பட்ட வாழ்க்கை நிலை, சிறந்த வாழ்க்கையின் செம்மாந்தப் பிரதிபலிப்பு என்பவை சிறந்த உதாரணமாகும். சங்க இலக்கியங்கள் பாடுபொருளாலும், பாடப்பெற்ற முறையிலும், மற்ற மொழி இலக்கியங்களை விட மாற்றுச் சிந்தனையினை உருவாக்குகின்றது. சங்கம், குமரிநாடு, புலனெறி வழக்கு, வாய்மொழி இலக்கியத்தை இலக்கியமாக்கல் நோக்கம், காலமும் சமுதாயமும், முதல், கரு, உரிப்பொருள்கள், அகம், புறம், என்ற பாகுபாட்டுத் தன்மை, தொன்மைமிக்க புராணக் கதைகள், இயற்கையோடிணைந்த வாழ்வியல் நெறிகள், கற்பனைகள் போன்ற செவ்வியல் பண்புகளைப் பெற்று செவ்வியல் இலக்கியங்களாகச் சங்க இலக்கியங்கள் மிளிர்கின்றன.

## 'வெல்லத் தமிழினி வாழும்'

டாக்டர் மா.பா.குருசாமி,
இயக்குநர், குமரப்பா ஆராய்ச்சி நிறுவனம், திண்டுக்கல்.

சட்டம் போட்டோ, சுட்டாயப்படுத்தியோ, தமிழை வருங்காலத்திற்கு ஏற்ற மொழியாக மாற்ற முடியாது. ஒரு மொழி உயிரோட்டமுடைய மொழியாக இருந்தால் அது எக்காலத்திற்கும் ஏற்றதாக இருக்கும். தமிழ் உயிரோட்டமுள்ள மொழி என்பதில் ஐயமில்லை. ஆனால் அதனை வீறுகொண்ட மொழியாக மாற்றுவது நம் கையிலிருக்கின்றது.

ஒவ்வொரு தமிழனும் எந்த நிலையில் இருந்தாலும் தமிழை நடைமுறையில் பயன்படுத்த வேண்டும். ஒருவன் எத்தனை மொழிகள் வேண்டுமானாலும் கற்கலாம். குறிப்பாக ஆங்கிலம் கற்று அதன் மூலம் அறிவைப் பெருக்கிக் கொள்ளலாம். ஆனால் அவன் அன்றாட வாழ்வில், தமிழ் தெரிந்தவர்களோடு, உறவு கொள்கின்றபொழுது தமிழை மட்டும் பயன்படுத்துவதென உறுதி பூண்டால் தமிழ் புதிய வலுவோடும் பொலிவோடும் வளரும். எதிர்காலத்திற்கு ஏற்ற மொழியாக மாறுகின்றபொழுது, தமிழர்களின் வளர்ச்சிக்கேற்ப மொழியும் உயரும்.

"வெல்லத் தமிழினி வாழும்" என்ற உறுதிமொழியை ஏற்போம். ஒன்றுபட்டு உழைப்போம். தாய்மொழி வளர்ச்சி என்பது தனியாக இல்லை. அது நமது வாழ்க்கையோடு இணைந்தது. தமிழர்கள் உயர்ந்தால் தமிழ் உயரும்; தமிழ் உயரத் தமிழர்கள் உயர்வார்கள்.

# ஔவையாரின் ஒருலகச் சிந்தனை

முனைவர் மு.பழனியப்பன்,
தமிழ்ப் பேராசிரியர், மா.மன்னர் கல்லூரி, புதுக்கோட்டை.

உலகம் பல்வேறு பட்ட நில அமைப்பு. பல்வேறு பட்ட மக்கள், பல்வேறு பட்ட பழக்கமுறைகள் கொண்டது என்றபோதிலும், அதனை ஒன்றுபடுத்த விரும்பும் நல்லநோக்கம் ஔவையாருக்குள் இருந்துள்ளது. எத்திசை செல்லினும் அத்திசைச் சோறே' என்ற எளிய வரிகள் உணர்த்தும் கருத்தும் இதுவே. அதிகாரம், ஆட்சிபலம், இராணுவம், பொருளாதாரம், வளம் இவற்றை அடிப்படையாகக் கொண்டு ஒருலகம் அல்லது ஒரு நாட்டின் வழியில் அனைத்துநாடுகள் என்ற கருத்து உருவாக்கம் பெற்றுள்ள இக்கால வேளையில் ஔவையார் தான் காணும் ஓர்உலகை வேறுவகையில் வடிவமைக்கவிரும்புகிறார் என்பது மட்டும் உறுதி.

ஒரு நாட்டின் விருப்புவெறுப்பை மற்ற நாடுகளின் தேவை. தேவையின்மை எதுவும் கருதாமல் ஏற்கவைக்கும் நிலைப்பாடாக இற்றைக் கால உலகமயமாக்கம் என்ற கொள்கை பரவி வருகிறது. இதனின்று முற்றிலும் மாறுபட்டது, ஔவையார் காண விரும்பிய ஓர் உலகம் என்ற சிந்தனை.

நாடா கொன்றோ காடா கொன்றோ
அவலா கொன்றோ மிசையா கொன்றோ
எவ்வழி நல்லவர் ஆடவர்
அவ்வழி நல்லை வாழிய நிலனே (புறம்-187)

உலகம் எதனால் வேறுபட்டு அமைகிறது. அதன் நிலப்பரப்பாலேயே அது வேறுபட்டு அமைகிறது. நாடு, காடு, அவல், மிசை என்ற அதன் நிலப்பரப்புகள் மாறினாலும் நிலம் நல்லார் ஒருவர் உளரேல் அவர்பொருட்டு எல்லார்க்கும் பெய்யும் மழையாகப் பயன்கொள்ளும் நாடுகளின் எல்லைகளுக்குள் உட்பட்ட நிலப்பரப்புகள் வேறுபட்டு அமைந்துள்ளன என்றாலும், அந்த எல்லைகளில் வாழும் மாந்தர்கள் ஒன்றே என்ற ஓர் உலக ஒருமையை உருவாக்க, உருவாக அடிப்படையாக அமைகிறது.

பாலைவனமாக இருந்தாலும், சதுப்பு நிலமாக இருந்தாலும் அவை கடந்து மனித ஆளுமை அவற்றை ஒன்றிணைத்து மேன்மை கொள்ளும் என்ற எண்ணம் மேற்பாடலுள் கிடக்கிறது.

பூமி திருத்தி உண் (ஆத்திச்சூடி 82) என்ற ஔவையடி நிலங்களைத் திருத்தி உலகப் பொதுமை மலர உணவைப் பொதுமையாக்குகிறது.

நிலத்தில் விளையும் பொருட்கள் ஒன்றாகி அனைவரும் உண்ணும் உணவு ஒன்றாகி நிற்கும் ஓர் உலக உணவு வரவேற்கத்தக்கது.

நிலம், உணவு இவற்றிற்கு அடுத்து, ஆளுகின்ற நிலையில் உலக ஒற்றுமையை ஔவையார் முன்வைக்கிறார். உலகிற்கு ஒரு மன்னவன் என்பதை ஔவை ஏற்கவில்லை.

மன்னன் மாசு அறக் கற்றோனும் சீர்தூக்கின்
மன்னனின் கற்றோன் சிறப்பு உடையோன் மன்னற்கு
தன்தேசம் அல்லால் சிறப்பு இல்லை கற்றோர்க்குச்
சென்ற இடமெல்லாம் சிறப்பு (மூதுரை-26)

மன்னவன் என்பவன் பரம்பரை பரம்பரையாக ஆளும் வர்க்கம் சார்ந்தவன். சுழலும் உலகிற்கு ஒரு மன்னவன் என அமைப்பதில் பல சிக்கல்கள் ஏற்படும். உலகத்தை அறிவு சார்ந்த பல்நாட்டுக் கல்வியாளர்களை ஒருங்கிணைத்து ஒரு குழுவாக அவர்களைக் கொண்டு இயங்க வைத்தால் பற்பல நன்மை பெறும் என்ற ஔவையாரின் கருத்து மேற்பாடலின் வழிகிடைக்கின்றது.

இது நடைமுறைக்கு உகந்ததா என்ற வினாவை எழுப்பினால் அதற்கும் பதில் தர இயலும். உலக அறிஞர்களைப் பாராட்டி நோபல் பரிசு அறிவிக்கின்றபோது அவ்அறிஞர்கள் பலநாட்டினராக உள்ளனர். அவர்கள் கொண்ட குழுவாக உலக ஆட்சி மலர்ந்தால் சிறப்புப் பெறும். ஆண்டுதோறும் அறிவாளர்கள் எண்ணிக்கை கூடும். பகைமை தேயும். போர் ஒடுங்கும். புகழ் ஒடுங்காது. உலக வங்கி இருக்கும்போது ஏன் உலக ஆட்சிக்குழு ஏற்பட முடியாது. கற்றோருக்குச் சென்ற இடமெல்லாம் சிறப்பு என்பதை ஒருலகச் சிந்தனையோடு ஆராய்ந்து பார்த்தால் உலகின் பெருநன்மை புலப்படும்.

இந்த அறிஞர் கூட்டம் நல்லாரை மட்டுமே கொண்டு அமைக்கப்பட வேண்டும். அமையும் என்பதில் சந்தேகம் இல்லை.

நல்லாரைக் காண்பதுவும் நன்றே நலம்மிக்க
நல்லார் சொல் கேட்பதுவும் நன்றே நல்லார்
குணங்கள் உரைப்பதுவும் நன்றே அவரோடு
இணங்கி இருப்பதுவும் நன்று (மூதுரை - 8)

நல்ல அறிவுசார் ஆட்சி அமைய வழிவகுக்கும் நல்லார் சிந்தனை ஔவையாருடையது. இந்த ஆட்சியின்கீழ் அனைவரும் பொது என்ற நிலையில் ஒத்து வாழ்ந்தால் அவ்வாழ்வே சிறந்த வாழ்வாகும்.

தேசத்தோடு ஒத்து வாழ் (ஆத்திசூடி 62)

என்பன ஒத்துவாழும் வாழ்க்கைக்கு ஔவையால் தரப்படும் மொழிகள் ஆகும்.

ஒருவனைப் பற்றி ஓர் அகத்து இரு (கொன்றை வேந்தன் 10)

என்ற இவ்வடி தரும் பொருள் ஒருவனைப் பற்றிக் கொண்டு ஓர் நிலைப்பாட்டில் இருந்திடல் வேண்டும் என்பது ஆகும். ஒருவன் என்பது அவரவர் கருத்திற்கேற்பப் பொருள் மாறுபடலாம் என்றாலும் அனைவராலும் ஏற்கப்படுகிற ஒருவன் எனக் கொண்டால் சிக்கல் வராது.

இவ்வகையில் உலகம் ஒத்து வாழ ஒருலகமாய் நிற்கச் சில வழிமுறைகளை ஔவையின் பாடலடிகள் வழி பெற முடிகின்றது.

இந்த ஓர் உலகில் அனைவரும் மகிழ்ந்து வாழும் வாழ்க்கை கைவர வேண்டும் என்று ஔவையார் எண்ணுகிறார். ஒருவேளை உணவின்றி ஒருவர் கூட வாடக்கூடாது என்பது அவர் கருத்து.

வையகம் எல்லாம் வயலாய் வானோர்
தெய்வமா முகடு சேரியாகக்
காணமும் முத்தும் மணியும் கலந்தொரு
கோடானு கோடி கொடுப்பினும் ஒருநாள்
ஒருபொழுது ஒருவன் ஊண் ஒழிதல் பார்க்கும்
நேர்நிறை நில்லாது என்னும் என் மனனே
நேர்நிறை நில்லாது என்னும் என் மனனே (தனிப்பாடல்)

இப்பாடலில் வையகம் ஓர் உணவைத் தரும் வயலாக அமைந்துள்ளது கருதத்தக்கது. தெய்வம் வாழும் உலகம் இதனினும் கீழானதாகக் கொள்ளப் பெற்றுள்ளது. முத்து, மணி இவற்றைத் தவிர தனி மனிதனுக்கான உணவின் உரிமைக்கு முன்னுரிமை தரப் பெற்றுள்ளது. தனிமனிதனுக்கு உணவில்லை எனில் சகமழிக்கும் ஔவையாரின் ஒருலகக் கோட்பாடு வரவேற்கத்தக்கது.

# தமிழ் இலக்கிய உலகில் மானுடம்

முனைவர் பெ.சுபாசு சந்திரபோசு
முதுகலை- தமிழாய்வுத் துறைத் தலைவர், பிஷப்ஹீபர் கல்லூரி, திருச்சி.

அரசியல் ரீதியாக இன்றைக்கு "உலகமயமாதல்" (Globalisation) ஒருபக்கமும், தொழில் நுட்ப நோக்கில், "உலகம் ஒரு கிராமம்" (Global Village) இன்னொரு பக்கமும், தமிழர் வாழ்விலும், இலக்கியத்திலும் ஏற்பட்டுள்ளன. அதனால் சிலப்பதிகாரம் தமிழில் எழுதப்பட்ட உலகக் காப்பியம் என்னும் புதிய இலக்கிய அணுகுமுறை தோன்றியுள்ளது. அது உலகில் பிரெஞ்சு, ஆங்கிலம் போன்ற மொழிகளிலும் மொழிபெயர்க்கப்பட்டுள்ளது. இன்றைக்குத் தமிழர் உலக அளவில் போலந்து, அமெரிக்கா, ஆஸ்திரேலியா, கனடா போன்ற நாட்டைச் சேர்ந்த பெண்களை மணந்து ஓர் உலகவாழ்வைப் பண்பாட்டில் உருவாக்கி வருகின்றனர்.

திருக்குறள் உலக மானுடத்தைப் பல கோணங்களிலும் வலியுறுத்தும் ஒரு பொதுமறை.

"பிறப்பொக்கும் எல்லா உயிர்க்கும் சிறப்பு ஒவ்வா
செய்தொழில் வேற்றுமை யான்"

(Birth is a like to all but not their worth
Because of their diverse deeds)

என்னும் குறளில் உலகமானுட நேயத்தின் பெருமையை (Greatness) நிலைப்படுத்தியுள்ளார் திருவள்ளுவர். இந்த நேயத்தை அடைய வள்ளுவர் கூறும் ஒழுக்க நெறி (Right Conduct) சாதி, மதம், நாடு, இனம், மொழி கடந்த நிலையை,

"உலகத்தோடு ஒட்ட ஒழுகல் பலகற்றும்
கல்லார் அறிவி லார்"

(Those are fools however learned who have not learned
to walk with the world)

என்றும் நெறிப்படுத்தியுள்ளார்.



விரியு மறிவு நிலை காட்டுவீர்! – அங்கு
வீழும் சிறுமைநிலை யோட்டுவீர்!
தெரியு மொளிவிழியை நாட்டுவீர்!
தீரப் பெருந் தொழிலிற் பூட்டுவீர்!

## தமிழர்தம் உலகியல்

**அரங்க. கண்ணன்**
**முனைவர் பட்ட ஆய்வாளர், தமிழ்க்கல்லூரி, பேரூர், கோவை.**

தாயுமானவர், இவ்வுலகில் வாழக்கூடிய அனைத்து உயிர்களும் இன்பம் பெற விரும்புதலையே, தான் விரும்புவதாகப் பாடுகிறார். இதை,

"எல்லாரும் இன்புற்றிருக்க நினைப்பதுவே
அல்லாமல் வேறொன்றறியேன் பராபரமே"

என்ற அடிகள் உணர்த்தும்.

புறத்தில் மக்கள் உணர்ச்சியும், ஊக்கமும் கொண்டு எவ்வாறு திகழ்ந்தனரோ அதுபோல, அகத்திலும் அறம் பிறழாது உள்ளத்து உணர்ச்சியை வளர்த்து உலக வாழ்வின் இன்பத்தைப் பெற்று வாழ்ந்தனர்.

"காமஞ் சான்ற கடைக்கோட் காலை
ஏமஞ் சான்ற மக்களொடு துவன்றி
அறம்புரி சுற்றமொடு கிழவனுங் கிழத்தியுஞ்
சிறந்தது பயிற்றல் இறந்ததன் பயனே"

என்று தொல்காப்பியம் தமிழர்களின் அறவாழ்வைக் காட்டுகிறது. அதன் அடிப்படையில் வாழ்வை நடத்தி வளம் கண்டவர்கள் தமிழர் என்பதைச் சங்க இலக்கியங்களால் அறியலாம்.

'அன்பு' என்ற சொல் சுகம் என்ற உள்ளார்ந்த பொருளைக் குறிக்கும். மனிதனின் உள்ளத்திலிருந்து ஊறிவரும் உணர்ச்சியே அன்பாக மாற்றம் பெறுகிறது. அன்பு என்பது அனைவரது உள்ளத்திலும் மலரக்கூடிய மலராகும். அம்மலர் எங்கும் பரவி மணத்தைப் பரப்புகிறது. அம்மணம் நுகர்பவரையும் ஒன்றிணைக்கிறது. அப்பொழுது தன்னையறியாமல் ஒருவித உள்ளார்ந்த உணர்வை உலக மக்கள் அனைவரும் விரும்புபவர்களாயின் உலகெங்கிலும் மலரின் மணம் கமழும்.

தமிழில் தோன்றிய அகப்பாடல்கள் அனைத்தும் அன்புநெறியை விளக்கியுள்ளன. இந்த அன்பு நெறி உலகியல் நெறிகளை வளர்க்கக் கூடியதாய் அமைந்துள்ளது.



துன்ப மிலாத நிலையே சக்தி!
தூக்க மிலாக்கண் விழிப்பே சக்தி!
அன்பு கனிந்த கனிவே சக்தி!
ஆண்மை நிறைந்த நிறைவே சக்தி!

## உலகம் ஒன்றுதான்...

எம்.மாலதிமணியன்
கம்பன் நகர், ரெட்டியார் பாளையம், புதுச்சேரி.

உலகம் முழுவதும் தழுவிய நல்ல உறவை ஏற்படுத்திக்கொள்ள வேண்டும். உலகம் பல நாடுகளாகச் சிதறிக் கிடக்கிறது. ஒவ்வொரு நாட்டிற்கும் தனித்தனியான பதவியாளர்கள் இருக்கிறார்கள். தங்களின் புகழ், வசதிகள் போன்றவற்றிற்குக் கொடுக்கப்படும் முக்கியத்துவம், உலகஅமைதி, உலக சுபிட்சம், மனித இனத்தின் மகிழ்ச்சி போன்றவற்றிற்குக் கொடுக்கப்படுவதில்லை. வன்முறையோ, யுத்தமோ, தீவிரவாதமோ தானாக உருவாகி வருவதில்லை. இராணுவம், போலீஸ், நீதிமன்றங்கள் போன்றவையோ, சட்டங்கள் தண்டனைகளோ எந்த ஒரு உலகப்பிரச்சனையையும் தீர்க்கப்போவதில்லை என்பதை உணர்ந்து கொள்ள வேண்டும். மனிதர்கள் அனைவரும் ஒரே குடும்பத்தைச் சேர்ந்தவர்களாக மாறிவிடுவார்கள். நாம் கற்கும் கல்வி, மனித மாண்புகளை வளர்ப்பதாக இருக்க வேண்டும். உலக சாதனை, சுயமுன்னேற்றம், திறமை என்று சொல்லிக்கொண்டு அவற்றை நியாயப்படுத்தி வருகிறோம். நாம் இந்த உலகம் மோசமானது, மக்களை மோசமானவர்கள் இந்த உலகில் நியாயம், சத்யம், நேர்மை போன்றவை இல்லை என்றெல்லாம் சொல்வதற்கு நமக்குத் தகுதி கிடையாது. நாம்தான் இந்த நிலையை உருவாக்கியிருக்கிறோம். மனிதர்களின் வசதியான வாழ்க்கைக்காக இயற்கை நிறைய கனிவளங்களை அள்ளி அள்ளிக் கொடுத்திருக்கிறது. தானியங்கள் விளையும் விளைச்சல் நிலங்களையும் நீர் வளத்தையும் சகலங்களையும் கொடுத்திருக்கிறது. ஆனால் உலக அமைதியை உருவாக்க உதவும் ஒரு நல்ல ஜீவிதத்தை அமைத்துக் கொள்ள முடியாத நிலையில் சில மனிதர்களும் இருக்கத்தான் செய்கிறார்கள். பிறவிப் பணக்காரர்களும், ஓய்வு பெற்றவர்களும், நல்ல உலகத்தை உருவாக்குவதில் பொறுப்புகளைச் சற்று அதிகமாக ஏற்றுக் கொண்டால் போதும். உலகப் பிரச்னைகள் முற்றிலுமாக மறைந்து விடும்.

## எல்லாம் ஒன்றே!

கவி. வெற்றிச்செல்வி சண்முகம்
மஞ்சக்குப்பம், கடலூர்.

**அன்னை சாரதாதேவியின் உலக ஒருமைப்பாடு**

"யாரும் அன்னியர் அல்லர்
உலகம் முழுவதையுமே
உன் சொந்தமாக்கக் கற்றுக்கொள்"

என்று அன்னை ஸ்ரீசாரதாதேவி அவர்களும் உலகு தழுவிய மானுடப் பார்வையோடு கூடிய உயரிய சிந்தனையை முன்வைக்கிறார்.

உலக மக்கள் அனைவரையும் உறவினராய் ஏற்றுக்கொள்ளக் கற்றுக்கொள் என்று நல்லதொரு உலக ஒருமைப்பாட்டினை நம்முள் விதைக்கிறார்.

'எல்லாம் ஒன்றே' என்ற உண்மையை நம் வேதங்கள், இதிகாசங்கள், சாத்திரங்கள், புராணங்கள் எல்லாம் தெளிவாக விளக்குகின்றன.

## தமிழில் உலகு தழீஇய மானுடமூலம்

தெ.முருகசாமி
முதல்வர் (ஒய்வு), இராமசாமி தமிழ்க்கல்லூரி, காரைக்குடி.

மனித வாழ்வு இருகரைக்குள் ஓடும் ஆறு போன்றது. வாழ்க்கை என்ற நீரோட்டத்திற்குப் பிறப்பும் இறப்பும் இருகரைகள். மனிதகுல முழுமைக்குமான இவ்வுண்மையில் எந்தக் கண்டத்தில் பிறக்கும் ஆணும் பெண்ணும் எதையும் கொண்டு வருவதில்லை. அவ்வாறே இறப்பில் எதையும் கொண்டு போவதில்லை. இம்மானுட உண்மையைக் கீழ்வரும் பட்டினத்தார் பாடல் உணர்த்துகிறது.

"பிறக்கும் பொழுது கொடுவந்த தில்லைப் பிறந்து மண்மேல்
இறக்கும் பொழுது கொடுபோவ தில்லை யிடை நடுவிற்
குறிக்குமிச் செல்வம் சிவன்தந்த தென்று கொடுக்க றியாது
இறக்கும் குலாமருக்கு என்சொல்வேன் கச்சி யேகம் பனே"

இப்பாடல் கூறும் சிவன், கச்சியேகம்பன் என்ற சொற்களை நீக்கிப் பொருள் கொண்டால் அது உலகின் உயர் மானுடக் கருத்தைத் தாங்கியுள்ள உண்மையை உணரலாம். இதே கருத்தை இஎம். பார்ஸ்டர் என்ற வெளிநாட்டறிஞர், "Naked I came into the world. Naked I shall go out of it; And a very good thing too for it reminds me that I am Naked under my shirt, whatever its colour" என்று கூறுகிறார்.

## குலோத்துங்கன் கவிதைகளில் தமிழின் ஒருலகக் கருத்துணர்வு

ப.கௌரி
முனைவர் பட்ட ஆய்வாளர், எத்திராஜ் மகளிர் கல்லூரி, சென்னை.

தன் உள்ளத்தில் ஆழ்ந்து நோக்கியபோது மானிடத்திற்கு மிகையாக ஒன்று இல்லையெனக் கவிஞர் உணர்ந்தார். மானிடர் எம்மினம் என்பதில் பெருமிதம் கொள்கிறார்.

"முத்தமிழன், தமிழினத்தின் மானிடத்தின்
முன்னேற்றம் எனைஆளும் முழுமை கண்டேன்
எப்பொருளும், எவ்வுறவும் மானிடத்தின்
ஏற்றம்போல் என்மனதை ஈர்த்த தில்லை" (கு.க.ப.128)

"புனிதனு மவனே. சக்திப்
புதையலு மவனே யன்றோ ?" (கு.க.ப.192)

மனிதனைச் சக்திப்புதையல் என்கிறார் குலோத்துங்கன். மானுடத்தைப் பாடுவேன் என்னும் கவிஞர் அண்டம்வரை துருவித்தேடும் மதியினைப் போற்றுகிறார். மன உறுதியைப் பாடாமல் இருக்க இயலாது. ஓயாது உழைக்கும் முயற்சிகளைப் போற்றி, படைத்திடும் தொழிலிலும் இறைவனுடன் மானிடத்திற்குப் பங்கு உள்ளது என்ற மனத்திடத்தினைப் புகழ்கிறார். மானுடத்தின் நிலையைக் கூறும் கவிஞர், மானிடச் சிறப்பினைக் கூறத் தவறவில்லை.

"புனிதத்தைப் போற்று வேன்யான்
புகழ் ஒன்றே வய்ய வாழ்வில்
மனிதத்தின் உரைகல் என்னும்
மாண்பினைப் போற்று வேன்யான்" (கு.க.ப.273)

## மொழியும் வாழ்வும்

நா.முத்துராஜன்
அரியாங்குப்பம், புதுச்சேரி.

மொழியைப் பிழைப்புக்கான ஒன்றாகப் புரிந்து கொண்டு நாம் சீரழிந்து விடக்கூடாது. எந்த மொழியையும் தாழ்மைப்படுத்துவது நமது நோக்கமல்ல. நாம் நமது மொழியை வளர்க்க வேண்டும். நாம் வளரவேண்டும்.

நம்மில் ஆங்கிலம் கற்ற பலர் நமது தேசத்திற்கு வெளியே வாழ்வைத் தேடுகின்றனர். ஒருதேசம் முழுவதும் தன் வாழிடத்தை மாற்றிக் கொள்ள முடியாது. அவ்வாறாயின் ஈழத்துத் தமிழ் மக்கள் அங்கு போர் புரிந்து வாழ அவசியமே இல்லை. ஈழம் தமிழ் மக்களின் தாயகம் ஆகும்.

நாம் நமது மொழியை உயர்வாக மதிக்கப் பழகவேண்டும். நமது மக்கள் ஆங்கிலம் கற்பது தவறல்ல. நான் படிக்கத் தெரிந்தவன் என்பதைக் காட்டிக் கொள்ள வேண்டுமானால் ஆங்கிலத்தில் கையெழுத்திடவேண்டும் என நமது மக்கள் பலர் எண்ணுகின்றனர். நமது ஆண்டைகள் பலரிடம் இந்த மனப்போக்கு உள்ளது. இது நமது மக்களைப் பாதித்தது. நாம் அடிமைப்படுத்தப்பட்ட வரலாற்றைக் கொண்டுள்ளோம்.

நாம் தாழ்ந்தவர்கள் என்ற எண்ணம் நமக்குள் மறைந்து கிடக்கிறது. நமது மண்ணை நாம் வளப்படுத்த வேண்டும். நமது சிந்தனையை நாம் வளப்படுத்த வேண்டும். நமது மொழியை நாம் போற்றி வளர்க்க வேண்டும்.

## அறநெறி இலக்கியங்கள்

புலவர் பெ. செயராமன்
கள்ளக்குறிச்சி

உலகு தழுவிய மானுடப்பார்வையைத் தமிழின் அனைத்து இலக்கியங்களிலும் காணலாம். இளஞ்சிறார்கட்காக எழுதப்பட்ட அறநெறி இலக்கியங்களில் கூடத் தமிழனின் பரந்த மனப்பான்மையைக் காணலாம்.

உலகத்தோடு ஒட்ட ஒழுக வேண்டுமென்பதைத் தேசத்தோடு ஒத்துவாழ் (61) எனவும், நாடொப்பன செய் (66) எனவும் ஆத்திசூடி கூறுகிறது. 'ஊருடன் பகைக்கின் வேருடன் கெடும்'(6) எனவும், 'நாடெங்கும் வாழக்கேடொன்றும் இல்லை(49) எனவும், பையச் சென்றால் வையம் தாங்கும் (67) எனவும், 'வையந்தோறும் தெய்வந்தொழு'(89) எனவும் கொன்றைவேந்தன் குறிப்பிடுகிறது. 'இவைகாண் உலகிற்கு இயல்பாம் ஆறே' (82) என வெற்றி வேற்கை விளம்புகிறது. நீதிநூல்களில் ஒன்று உலகநீதி என்பதாகும். 'நெல்லுக்கு இறைத்த நீர்' எனத் தொடங்கும் வாக்குண்டாம்' (10) பாடல் நல்லவர் ஒருவராவது இருப்பதால் தான் உலகிற்கு மழையே பொழிகிறது என்கிறது. கல்வியின் அருமையை உலகத்து மக்கட்கெல்லாம் அறிவுறுத்தும் ஒரு பாடல் (26) மன்னனையும் கற்றவனையும் ஒப்பிட்டுக் கற்றோனே சிறந்தவன், கற்றவனுக்கு உலகம் முழுவதும் சொந்தம் என விளக்குகிறது. இது, 'யாதானும் நாடாமால்' எனும் குறள் கருத்தைச் சிறுவர்க்கு விளக்கும் பாடலாகும்.

இளம்பருவத்தில் குழந்தைகள் மனத்தில் சாதி என்னும் பேதைமை இருத்தல் கூடாது என்பதை அறிவுறுத்த ஔவையார் தமது நல்வழியில் கூறியுள்ள அறவுரை (2) காலங்காலமாய் உலகுக்கு நின்று அறிவுறுத்தும். உலகினரை நோக்கிக் கூறும் மற்ற அறவுரைகளை 6,8,9,10,13, 16, 17,18,19,29, 32 எண்களைக் கொண்ட பாக்களில் காணலாம். பொருளின் முதன்மையை நீதிநெறி விளக்கம் (10) 'இன்சொல்லன்' எனும் பாடல் தெரிவிக்கிறது.

# கொங்குநாட்டில் வேளாண்மை - சில செய்திகள்

முனைவர் சி.ஆர். லட்சுமி நரசிம்மன்
பேராசிரியர் (ஓய்வு), மண்ணியல்துறை, தமிழ்நாடு வேளாண்பல்கலைக்கழகம், கோவை.

**பாசனமுறைகள்**

மருதநிலப் பகுதிகளில் அணைகள் கட்டி, நீரைத் தேக்கி அதன்மூலம் பயிர்கள் சாகுபடி செய்துவரச் செல்வவளம் பெருகிற்று. இதன் காரணமாகவே சேர, சோழ, பாண்டியர்களின் ஆட்சி அமைய அடித்தளமாக இருந்துள்ளது. கொங்குநாட்டில் 'வன்கைவிளைஞர்' என்ற வல்லுநர்கள் ஆழமான கிணறுகள் அமைப்பதில் வல்லவர்களாகத் திகழ்ந்தனர். இவர்களாலும், பின்னர் சோழர் வருகையாலும் பாசன வசதிகள் மேம்படுத்தப்பட்டு அதன் காரணமாகவும் வளம் பெருகிற்று.

ஆற்றுநீரைப் பெருவாய்க்கால் வழியாகத் திருப்பிவிட 'வாய்த்தலை' எனும் மதகமைப்புப் பயன்பட்டது. இதுவே இடப்பெயராக, 'பேட்டை வாய்த்தலை' என்று அழைக்கப்படுகிறது. பாசனக்கால்கள் 'வதி' எனக் குறிக்கப்பட்டன. இவையெல்லாம் நிலத்தை இனங்காணவும் பயன்பட்டன. நொய்யல் ஆற்று நீர், ஏரி, குளங்களில் தேக்கிப் பாசனவசதி செய்யப்பட்டது.

**மந்தைப் பொருளாதாரம்**

பழங்காலந்தொட்டே கொங்கு நாட்டில் மந்தைப் பொருளாதாரம் சிறப்பிடம் பெற்றிருந்தது. இதனை மேற்கொள்ளும் மக்கள், 'ஆயர், இடையர், பொதுவர், கோவலர், யாதவர்' ஆகிய பெயர்களில் அறியப்பட்டனர். ஆலய வழிபாட்டுக்குப் பால், தயிர், நெய், சாணம், கோமியம் சேர்ந்த பஞ்சகவ்யம் தேவைப்பட்டது. ஆலய விளக்கு எரிக்க நெய் வேண்டியிருந்தது. இதற்கெனத் தனிக்கொடைகள் பெறப்பட்டு அதன்மூலம் கால்நடைகளும் பராமரிக்கப்பட்டு வந்தன. ஆயர்கள் சமுதாயத்தின் முக்கிய அங்கமாக விளங்கினர். அவர்கள் 'ஆயர் மக்கள்', 'சான்றோர்', 'மன்றாடி' முதலான பல சிறப்புப் பெயர்களாலும் அழைக்கப்பட்டனர். காங்கேயம் போன்ற மழை குறைந்த பிரதேசங்களில் கால்நடை வளர்ப்பில் தனிக்கவனம் செலுத்தி வலிமை மிகுந்த காளைகளைப் பராமரித்து வந்தனர். வயல்வேலைகளுக்கு அவை கடினமாக உழைக்கக்கூடியவையாதலால், பிறர் நல்ல விலைக்கு வாங்கிச் சென்றனர். இதேபோல் கரூர் பகுதியில் ஆலம்பாடி இனமாடுகளும் பராமரிக்கப்பட்டன. இவற்றின்மூலம் பால் பொருட்கள் மட்டுமல்லாது இவற்றின் இறைச்சிக்கும் நல்ல மதிப்புப் பெற முடிந்தது. ஆடுகளிலிருந்து கம்பளி உற்பத்தி செய்யப்பட்டு விற்பனையானது. கால்நடைகளைத் திருடுவோருக்கும், தீங்கிழைப்பவர்களுக்கும் தண்டனை தருவதற்கு நடுகற்கள் பல இருந்துள்ளன. இவ்வாறு தண்டனை பெற்றவர்களின் உடைமைகள் பறிக்கப்பட்டு ஆலயத்திற்கு உரிமையாக்கப்பட்டன எனக் கல்வெட்டுகள் தெரிவிக்கின்றன.



மண்ணெடுத்துக் குடங்கள் செய்வீரே!
மரத்தை வெட்டி மனைசெய்கு வீரே!
உண்ணக் காய்கனி தந்திடு வீரே!
உழுது நன்செய்ப் பயிரிடு வீரே!
எண்ணெய், பால்,நெய், கொணர்ந்திடு வீரே!
இழையை நூற்றுநல் லாடைசெய் வீரே!

# தொல்காப்பியத்தில் உலக ஒருமைப்பாடு

**முனைவர் தி.செல்வம்**
**தமிழ் இணைப்பேராசிரியர், தாகூர் கலைக்கல்லூரி, புதுச்சேரி.**

**அகத்திணை புறத்திணை ஆகியவற்றில் உலக ஒருமைப்பாடு**

கைக்கிளை, புணர்தல், இருத்தல், பிரிதல், இரங்கல், ஊடல், பெருந்திணை ஆகிய ஏழு அகத்திணைகளில் காதலுக்குரிய தலைவன், தலைவியர் பெயர் சுட்டப்படுவதில்லை. மேலும் தோழி, நற்றாய், செவிலித்தாய் முதலிய பாத்திரங்களின் பெயரும் சுட்டப்படுவதில்லை.

"மக்கள் நுதலிய அகனைந் திணையும்
சுட்டி ஒருவர்ப் பெயர்கொளப் பெறாஅர்" (அகத்திணையியல் 54)

பெயரைச் சொன்னவுடன் அவர் எந்த நாட்டுக்குரியவர், எந்த இனத்தவர், எந்தச் சமயத்தைச் சார்ந்தவர், எத்தகைய் பழக்கவழக்கத்திற்கு உரியவர், எத்தகைய செயல் புரிபவர் என்று பல பிரிவுச் சிந்தனைகள் தோன்ற வாய்ப்புண்டு. எனவே, பெயரை நீக்கிப் பொதுப்பட மக்களையும் அவர்களின் பொதுமையான காதலையும் தொல்காப்பியர் பேசியுள்ளார்.

உலகப் பொதுமையாக உடற்கூற்று நிலையில் உணரத்தக்க ஆண், பெண் பகுப்பை மட்டும் சுட்டி, அவர் தம் உடற்கூற்று நிலைக்கேற்ப அவர்களிடத்தில் அமைந்துவரும் பண்புகளையும் செயல்களையும் தொல்காப்பியர் பேசியுள்ளார்.

பெருமையும் உரனும் ஆடூஉ மேன (களவியல் 7)

அச்சமும் நாணமும் மடனும்முந் துறுதல்
நிச்சமும் பெண்பாற் குரிய வென்ப (களவியல் 8)

உலகப் பொதுமை சான்ற நிலையில், தொல்காப்பியர் பெருமை, உரன் ஆகிய பண்புகள் ஆணிற்கும், அச்சம், நாணம், மடன் ஆகிய பண்புகள் பெண்ணிற்கும் இருப்பதாகக் கருதியமை உணரலாம்.

தொல்காப்பியர் அகப்பொருளில் மொழி, இனம், நாடு கடந்த சிந்தனையை முன்வைத்துள்ளார். தமிழ் ஆண், தமிழ்ப்பெண் என்றோ, தமிழ்நாடு, ஆரிய நாடு என்றோ அகப்பொருளில் எந்த வேறுபாடுகளும் உரைக்கப்படவில்லை. மதுரைக்காரன், தஞ்சாவூர்க்காரன் என்பது போலவும் தமிழக ஊர்களையும் அகப்பொருளில் கருதவில்லை. உலகப்பொது இயற்கையோடு ஒத்த நிலைப்பாட்டை மட்டுமே கொண்டுள்ளார்.



ஆணும் பெண்ணும்
நிகரெனக் கொள்வதால்
அறிவில் ஓங்கி
இவ்வையம் தழைக்குமாம்!

## உலகத்தோடு ஒட்ட ஒழுகல்

**வே.விமல்குமார்**
**சன்மார்க்கத் தொண்டர், தாழத்துவீடு, கன்னியாகுமரி.**

திருக்குறள் தலைசிறந்த நீதிநூல், தமிழ் இலக்கியம். அதில் இல்லாத நீதியோ, அறமோ எங்ஙனும் இல்லை. சாதாரணக் குடிமகனும், அரசனும், துறவியும், அனைவரும் ஒன்றே. பொதுவான நீதிகளையும் அறங்களையும் போதிக்கும் ஒப்புயர்வற்ற நூல். இதில் சொல்லப்பட்டிருக்கும் செய்திகள் அனைத்தும் உலக மக்கள் அனைவருக்கும் பொதுவானவை.

திருக்குறள் ஆசிரியரான திருவள்ளுவர் தமிழர்களுக்கென்று தனித்து எந்த நீதியையும் சொல்லவில்லை. தமிழ்நாட்டுக்கென்று எவ்விதத் தனிஒழுக்கத்தையும் கூறவில்லை. உலக மக்கள் எல்லோரும் ஒப்புக்கொள்ளக்கூடிய அறங்களையே திரட்டிக் கூறியிருக்கிறார். இதற்குச் சில சான்றுகள்:-

உலகத்தோடு ஒட்ட ஒழுகல் பலகற்றும்
கல்லார் அறிவிலா தார் (ஒழுக்கமுடைமை 140)

உலகத்து உயர்ந்தவரோடு பொருந்த ஒழுகும் முறையைக் கற்காதவர், பல நூல்களைக் கற்றாலும் அறிவில்லாதவரேயாவார்.

எவ்வது உறைவது உலகம் உலகத்தோடு
அவ்வது உறைவது அறிவு (அறிவுடைமை 426)

உலகம் எவ்வாறு நடக்கின்றதோ, அவ்வாறு உலகத்தோடு சேர்ந்து வாழ்தல் அறிவாகும்.

## புற இலக்கியங்களில் அறம்

**வி.சேகர்**
**உதவி மேனிலைப்பள்ளி, ஆரோவில்.**

புறத்திணை இலக்கியங்களில் வரும் பெருங்காஞ்சி, பொருண்மொழிக் காஞ்சி, முதுமொழிக் காஞ்சி, செவியறிஉறூஉ, வாயுறை வாழ்த்து ஆகிய துறைகள் அறத்தைப் பற்றிப் பேசுகின்றன. இவை மட்டுமின்றி புறப்பொருள் வெண்பாமாலை கூறும் பன்னிரண்டு திணைகளும் புற அறத்தினைக் கூறியுள்ளது எனலாம். காரணம் அங்கும் இருநாடுகளுக்கும், இரு அரசுகளுக்கும் இருநாட்டு வீரர்களுக்கும் உரிய அறத்தைத்தான் பேசியுள்ளது எனலாம்.

அறந்துஞ்சும் செங்கோல்
அறம் புரிந்தென்ன செங்கோல்
அறநெறி முதற்றே அரசின் கொற்றம்
அறத்தின் மண்டிய மறப்போர்
அறம் புனையாகலு முண்டு

என்னும் பாடல்களில் அறம், தர்மம் என்று பேசும் இடங்களில் எல்லாம் அறம் நினைவு கூறப்படுகிறது. அரசின் கொற்றம் அறநெறியை முதலாகக் கொண்டு விளங்க வேண்டும் என்று கூறுகிறது புறநானூறு.

சங்க புற இலக்கியங்களில் நிலையாமையை எடுத்துக் கூறி அறம் செய்யுமாறு தூண்டுதல் காணப்படுகிறது. நிலையாமையை உணர்ந்தால் உலகில் நல்ல புகழ் ஏற்படும். நிலையாமை எண்ணம் எழுந்தது அறத்தினை வலியுறுத்துவதற்கே.

# திருமூலரின் ஆன்மிகக் கொடை

**க. மங்கையர்க்கரசி**
**தமிழ்த்துறைத் தலைவர், ஸ்ரீசாரதா மகளிர் கல்லூரி, சேலம்.**

திருமூலர் அட்டாங்க யோகப் பேறு பற்றித் தனியே விவரிக்கின்றார். 'இமயம்' என்ற தீது அகற்றல் முதலான எட்டு யோகங்களில் சித்திபெற்றவர் இந்திர உலகினை எய்துவர். நியமத்தில் நின்றவர் சிவவுலகு எய்துவர். அகத்தவத்திற்குத் தேவையான ஆசனப்பேறு பெற்றவர் சிவனது திருவருள் இன்பத்தைப் பொருந்தி மகிழ்வெய்துவர். பிராணாயாமத்தால் செம்பொன் சிவகதி அடைவர். சிவனுடன் இன்பக்கலப்பில் இருப்பர். பிரத்தியாகாரப் பலனால் சிவ சொரூபம் பெற்றுச் செல்வர். தாரணை வழிநின்றவர் ஆருயிர்கட்கு அருள்புரியும் பிரமன், திருமால் நிலை எய்துவர். முதிர்ந்த தியானத்தால் இறந்த கால எண்ணங்களால் அசுத்தப்படாமல் வருங்கால எதிர்பார்ப்புகளால் மாசுபடுத்தப்படாமல் செயல் அற்ற தன்மையின்மூலம் செயல்படுதல் நிகழும். சமாதி அடைந்தவர் அட்டமாசித்தி அடைவர். தூக்கத்தில் இருப்பதுபோன்றே பிற உணர்வு தவிர்ந்தாலும், யோகத்திலிருக்கும் உணர்வு பிரியாது இருப்பதால் இதைத் 'தூங்காத் தூக்கம்' என்பர். 'தூங்காமல் தூங்கி'ச் சுகம்பெறுதல் என்றும் இதனைக் கூறுவர். 'தாரியல் தற்பரம் சேர்தல் சமாதியே' (திருமந்திரம் 632) என்பதால் முடிவான நிலையாம் கடவுளைச் சார்ந்தே சமமாகுதல் சமாதி.

> அட்டாங்க யோகம் அறிந்த மெய்ஞ்ஞானிக்கு
> முட்டாங்கம் ஏதுக்கடி- குதம்பாய்
> முட்டாங்கம் ஏதுக்கடி.

என இதன் பெருமையைக் குதம்பைச் சித்தர் குறிப்பிடுவார்.

> அட்டாங்க யோகமும் ஆதாரம் ஆறும்
> விட்டேறிப்போன வெளிதனிலே வியப்பொன்று கண்டேன்

என, பட்டினத்தார் அட்டாங்க யோகத்தால் ஆதாரம் கடந்த பெருவெளியில் தனக்குள் பேரின்பம் ஏற்பட்டது எனக் கூறவந்தவர், பேரின்பத்துக்குள் தான் மூழ்கிக் கிடந்தமையைக் குறிப்பர்.

**ஆன்மிகக் கொடை**

யோகமும் ஞானமும் சமய எல்லை கடந்தவை. உடல் பண்பினை மனப்பண்பால் பகுத்தறிந்து, அடக்கி ஒழுகினால், தெய்வப் பண்பு புலப்படுவதுடன் தெய்வமும் ஆகலாம் என்ற கருத்தாக்கம், 'அட்டாங்க யோகத்தால்' உலகத்திற்கு அளிக்கப்பட்டுள்ளது. சித்தர் தம் சிந்தனை தெய்வம் பலப் பலச் சொல்லி, பகைத் தீயை வளர்க்கும் மனிதனை மாற்றி உயர்த்தும். வேறுபாடு இன்றி உலக மக்கள் அனைவரையும் உய்யச் செய்யும். எனவே, தமிழகத்தில் இம்மண்ணுக்கே உரிய நிலையில் பொதுமை நெறிகளும், பிரபஞ்சத்தைத் தழுவிய பேருணர்வுப் பார்வையும், தான் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம் என்ற சிந்தனையும் தான் மேற்கூறிய உண்மைகளை நமக்கு வழங்கியுள்ளன. அவற்றின் வழிநின்று வாழ்வை அழியா வரமாக்குவோம்.

# உலக ஒழுக்கம்

முனைவர் தே.வீ.சுமதி
தமிழ் விரிவுரையாளர், ஸ்ரீசாரதா மகளிர் கல்லூரி, சேலம்.

தனிமனித ஒழுக்கமே சமூக ஒழுக்கத்தின் உயிர்நாடியாகும். அகம், புறம் எனும் இருதளங்களிலும் சமூக ஒழுக்கம் பிறழாமல் இருக்கும்போது மானுட நிலை செம்மையுற்றுத் திகழும். தனிமனித ஒழுக்கத்தை உயிரினும் மேலானதாக வலியுறுத்துகின்றது புறநானூறு.

வாழ்தல் வேண்டிப்
பொய்கூறேன்; மெய்கூறுவல் (புறம்- 139)

என வாய்மையை வலியுறுத்துகிறது. வாய்மை தவறாமல் இருக்கும்போது பிற மனிதர்களை, சிந்தை, சொல், செயல் என எந்நிலையிலும் காயம் கொள்ள வைக்கும் நிலை ஏற்படாது. பொருளாதார வலிமையில் நிகரற்று விளங்கும் மனிதனும் வாழ்வின் உயரிய நிலையாமைத் தத்துவத்தை உணர்ந்து கொள்ள முடியும்.

தென்கடல் வளாகம் பொதுமை யின்றி
வெண்குடை நிழற்றிய ஒருமை யோர்க்கும்
நடுநாள் யாமத்தும் பகலும் துஞ்சான்
கடுமாப் பார்க்கும் கல்லா ஒருவற்கும்
உண்பது நாழி, உடுப்பவை இரண்டே,
பிறவும் எல்லாம் ஓர் ஒக்கும்மே
செல்வத்துப் பயனே ஈதல்
துய்ப்பேம் எனினே, தப்புன பலவே (புறம் - 189)

என்பதில் செல்வமுற்றவன், வறுமையுற்றவன் ஆகிய இருதிறத்தார்க்கும் உணவு இடை முதலான அடிப்படைத் தேவைகள் ஒரே தன்மையுடையவை; அளவுகளே வேறுபடுகின்றன. எனவே செல்வத்தின் பயன் பிறர்க்குக் கொடுப்பதில்தான் அடங்கியுள்ளது. அவ்வாறன்றி தனியே சுயநலத்துடன் நுகரும் நிலையிருந்தால் 'நாற்பொருட்பயன்' இல்லாத வெற்று வாழ்க்கையைப் பெறவேண்டிய நிலை ஏற்படும் எனும் கருத்துகள் காணப்படுகின்றன. இது இன்றைய பொருளாதார ஏற்றத்தாழ்வுகள் நிறைந்த சமூகத்திற்கு இடித்துரைத்து அறம் கூறும் உயரிய கருத்தமைவாகும்.

**ஒருலகக் கருத்துணர்வு**

வீரயுகக் காலம் முதலான புறநெறிகள் பாடப்பட்ட காலமாகும். இன்றைய இயந்திரத் தொழில்நுட்ப வசதிகள், உலகத்தை உள்ளங்கை அளவிற்குச் சுருக்கிவிட்டன. ஆகையால் உலகின் எந்தவொரு மூலையிலும் நடைபெறும் சிறு நிகழ்ச்சிகள் கூட மறுகணமே உலகம் முழுமைக்கும் காட்சிப் பதிவுகளுடன் சென்றுசேரும் தன்மையைப் பெற்றுவிடுகின்றன. அதனால், கண்டம், நாடு, மாநிலம், மாவட்டம் என்றளவில் உலகம் குறித்த செய்திகளும், கருத்துகளும் பரவலாகியுள்ளன. ஆனால் சங்க காலம் இத்தகைய நிலைகள் இல்லாத காலமாகும். எனினும் புலவர்கள் பாடிய, வலியுறுத்திய எந்தவொரு கருத்தும் தமிழ்ச்சமூகம் எனும் குறுகிய கண்ணோட்டத்தில் மட்டும் அடங்கிவிடாது. உலகம் முழுமைக்கும் பொருந்துவதாகவே காணப்படுகிறது. சங்க இலக்கியத்தில் பரவலாகக் காணப்படும் ஒருலகக் கருத்துணர்வு புறநானூற்றில் மிக ஆழமாகப் பதிவு செய்யப்பட்டுள்ளது,

'நனந்தலை உலகம்' (குறுந்தொகை 4-3) 'மலர் ஞாலம்' (கலித்தொகை 34-1) 'வறந்த ஞாலம்' (கலித்தொகை 45-2) என்றெல்லாம் குறுந்தொகை, கலித்தொகையில் உலகின் தன்மை உரைக்கப்படுகிறது. இந்நிலை புறநானூற்றில் விரிவாகக் காணப்படுகிறது. 'முறை முறை ஆடுநர் கழியுமிவ் வுலகத்து' (புறம் 29:23-24), 'மன்னா உலகம்' (புறம் 165:1-2) 'பெரிதே உலகம்' (புறம் - 207-7) 'உலகத்து மன்பதை' (புறம் 356: 7,8) 'பருதி சூழ்ந்த பயன்கெழு மாநிலம்' (புறம் - 358-1) 'வையகம் எல்லாம்' (புறம் - 358-3) 'இவ்வுலகம்' (புறம் 182-1) 'இழுங்கடல் உடுத்த இப்பெருங்கண்மா நிலம்' (புறம் - 363-1), 'இவ்வுலகத்து இயற்கை' (புறம் - 76) 'இன்னாது அடி, இவ்வுலகம்' (புறம் - 191-6) 'உலகமும் கெடுமே' (புறம் 184-11) என்றவாறு உலகம் குறித்த பார்வையைப் பதிவு செய்துள்ளது.

உலகம் என்பதற்கான 'நனந்தலை', 'வரைஇய', 'மலர்', 'வறந்த', 'மன்னா', 'பெரிதே', 'பெருங்கண்மா', 'பயன்கெழு', இவைமுதலான அடைமொழிகளின்வழி உலகத்தின் தன்மை மட்டுமல்லாது, அதைப்பற்றியுணர்ந்த சங்கத்தமிழரின் புலமையையும் அறிந்து கொள்ள முடிகிறது.

மேலும், கடல், மலை, ஐம்பெரும்பூதங்கள் பல்வேறு உயிரினங்கள் முதலானவற்றைக் கொண்டது உலகம் என்பதுடன் மட்டுமன்றி, உலகம் பரவலாகவுள்ளது என்னும் கூர்மையான கருத்தமைவும் புறநானூற்றில் காணப்படுகிறது. அதனடிப்படையிலேயே உலகம் நரலோகம், திரியலோகம், பிரேதலோகம், ஆசுரிக லோகம், நான்கு பாபலோகங்கள் மனுஷியலோகம், மகாராஜிகலோகம் உள்ளிட்ட ஆறு தேவலோகங்கள், ப்ரஹமலோகம் என 21 ஆகவும் (மணிமேகலை:பதிகம்:- 28 - 29 உரை 3- மணிமேகலை 6-175-185 உரை 30-55) அவற்றிற்கு மேற்பட்டவையாகவும் பிற்கால இலக்கியங்களில் உலகம் குறித்த கருத்துப் பதிவுகள் காணப்படுகின்றன. எனவே புறநானூறு மட்டுமின்றி சங்க இலக்கியம் முழுவதிலுமே உலகம் என்பது தமிழர்வாழ் பகுதிகளையோ, அல்லது தமிழ்ச் சமூகத்தை மட்டுமே குறிப்பதாக அமையாமல் முழுவுலகத்தையும் குறிப்பதாகவே அமைந்தது எனலாம். அத்தகைய கண்ணோட்டத்திலேயே உலகம் முழுமைக்குமான கருத்துகள் வாய்ப்பு நேரும் பொழுதெல்லாம் பரவலாக வலியுறுத்தப்பட்டன.



இவ்வுலகம் இனியது.
இதிலுள்ள வான் இனிமையுடைத்து;
காற்றும் இனியது.
தீ இனிது. நீர் இனிது. நிலம் இனிது.
ஞாயிறு நன்று; திங்களும் நன்று.
வானத்துச் சுடர்களெல்லாம் மிக இனியன.
மழை இனிது. மின்னல் இனிது. இடி இனிது.
கடல் இனிது.மலை இனிது. காடு இனிது.
ஆறுகள் இனியன.

# சித்தர்களின் ஞானமும் ஆழ்வார்களின் பக்தியும்

ஹரிப்ரியா
புதுச்சேரி-1.

ஆழ்வார்கள் மற்றும் சித்தர்களின் சிந்தனைகளை ஒப்பிடுகையில் சிலநேரங்களில் ஒன்றுபோலத் தோன்றினாலும் பிற நேரங்களில் முரண்பட்டிருப்பதையும் காணலாம். அவற்றைக் காண்போம். சித்தர்களின் ஞானம், நாடோடிப் பாடல்கள் வடிவம் பாமரர்களை ஈர்த்து, நுட்பமான தத்துவங்களோடு மனதில் எளிதில் பதியும், நாம் சர்வ சாதாரணமாக அறிந்த கடுவெளிச் சித்தரின் ஒரு பாடல்,

நந்த வனத்தில் ஓர் ஆண்டி- அவன்
நாலாறு மாதமாய்க் குயவனை வேண்டி
கொண்டு வந்தான் ஒரு தோண்டி - மெத்தக்
கூத்தாடிக் கூத்தாடிப் போட்டுடைத்தாண்டி

என்று மானுட வாழ்க்கையின் நிலையாமை அதை உணராமை ஆகியவற்றை நம் சிந்தைக்கு இடியென உரைக்கும். ஆழ்வாரும் "மின்னின் நிலையில. மன்னு யிராக்கைகள்" என்னுமிடத்து இறை உன்னுமின் நீரே என்பார். 'காதற்ற ஊசியும் வாராது காண் கடைவழிக்கே' என்ற வரிகளே பட்டினத்தார், துறவை ஏற்று ஞான மார்க்கத்தை ஏற்க வைப்பதற்குப் போதுமானதாயிருந்தது. நம்மாழ்வாரும் உலகின் நிலையற்ற தன்மையை

ஒருநாயகமாய் ஓட
வுலகுட னாண்டவர்
கருநாய் கவர்ந்த காலர்
சிதைகிய பானையர்
பெருநாடு காண இம்மையிலே பிச்சை தாம் கொள்வர்

எனவே, காலத்தோடு நாரணன் தாளைப் பற்றுக என்கிறார்.

'சாவினை வெல்வதாகிய காலதகனமே வீடுபேறாம், அந்நிலையை இயம நியமாதி வழியில், ஒவ்வோர் உயிரணுவையும் தூய்மையாக்குவது உள்ளிட்ட நிலைகளைத் தாண்டி ஞான ஒளிமயமாகி நாத தத்துவத்தோடு இணைவதே பேரின்ப வீடுபேறாகும்' என்பர் சித்தர்கள். இந்த காலத்தை வென்று, முன்னைப் பழமைக்குப் பழமையாய்ப் பின்னைப் புதுமைக்கும் புதுமையாய் நிற்கும் இறை நிலையினை, "எப்பொழுதும் நாள் திங்கள் ஆண்டூழி யூழிதொறும் அப்பொழுதைக் கப்பொழுதென் ஆரா அமுதமே" என நம்மாழ்வார் சொல்கிறார்.

தனித்திரு, விழித்திரு, பசித்திரு என்ற அருளாளர் முழக்கத்திற்கு மாற்றாக நம்மாழ்வார் "குழங்களா யாடியீருடன் கூடிநின்றாடுமினே" என்று குழாத்துடன் கூடிய ஆன்ம அனுபவத்தைப் பெற அழைக்கிறார்.

நம் சிந்தையை ஊடுருவி நம் அறியாமையை எள்ளும்,

நட்ட கல்லைத் தெய்வம் என்று நாலு புட்பம் சாத்தியே
சுற்றி வந்து முணமுண என்று சொல்லும் மந்திரம் ஏதடா
நட்ட கல்லும் பேசுமோ நாதன் உள்ளிருக்கையில்
சுட்ட சட்டி சட்டுவம் கறிச்சுவை அறியுமோ

என்ற இந்தப் பாடலை இயற்றியது ஒரு நவீன பகுத்தறிவாளி அல்லர். சிவவாக்கியச் சித்தராவார். இது தொடர்பான நம்மாழ்வாரின் மாற்றுச் சிந்தனையைப் பார்ப்போம்.

புண்ணியம் செய்து நல்ல புனலோடு மலர் தூவி
எண்ணுமின் எந்தை நாமும் இப்பிறப் பறுக்கும்பால்

என்று இறைவனிடம் பரத்துவம் இருப்பது போல சௌலப்யமும் உள்ளதால் பூசை முறையைப் பரிந்துரைக்கிறார்.

ஆண்டாளும் தூமலர் தூவித்தொழுது, வாயினால் பாடி மனத்தினால் சிந்திக்கச் சொல்கிறாள்.

குருகையர் கோனுக்கு 'இருப்பிடம் வைகுந்தம் வேங்கடம்' ஆகும். இவருக்குப் பெருமாள் தானே, முன்னின்று சேவை சாதித்தான். கண்டவர் விண்டிலர், விண்டவர் கண்டிலர் என்பதைப் பொய்யாக்கியவர். விண்ணுலகம் புகுந்த எவரும் மீண்டு வந்து அனுபவம் பகிர்ந்ததில்லை. மீண்டு வரும் எவரும் விண்ணுலகம் புகுந்ததில்லை. ஆனால், நம்மாழ்வாரோ வைகுந்தம் புகுந்து மீண்டு வந்து அதை விவரித்துள்ளார். மகான் ஸ்ரீஅரவிந்தருக்கும் இருப்பிடத்திலேயே சித்தியேற்பட்டு அதிமன ஆற்றல் வெளிப்பட்டதும் இவ்வகையில்தானோ?



மந்திரம் கூறுவோம். உண்மையே தெய்வம்.
கவலையற் றிருத்தலே வீடு. களியே
அமிழ்தம். பயன்வரும் செய்கையே அறமாம்.
அச்சமே நரகம்; அதனைச் சுட்டு
நல்லதை நம்பி நல்லதே செய்க!

# ஒத்தது அறிதல்

**முனைவர் சு.மாதவன்**

**தமிழ் விரிவுரையாளர், பாரத் அறிவியல் நிர்வாகவியல் கல்லூரி, தஞ்சாவூர்.**

அறி, அறிவு என்ற சொற்களின் தொடர்புடைய சொற்கள் திருக்குறளில் 152 இடங்களில் வள்ளுவரால் கையாளப்பட்டுள்ளன. (தில்லைநாயகம், வே. 1981, 497) 'எப்பொருள் எத்தன்மைத்து ஆயினும், யார்யார்வாய்க் கேட்பினும் அப்பொருள் - மெய்ப்பொருள் காண்பது அறிவு' (36-5, 43-3) 'அறிதோறும் அறியாமை கண்டாற்றால்' (1112-10) 'பெறப்படும் அறிவு அற்றம் காக்கும் கருவி' (43-1) ஏனெனில், 'அறிவுடையார் ஆவது அறிவார்' (43-7) இத்தகைய 'அறிவிலார் தாம் தம்மைப் பீழிக்கும் பீழை செறுவார்க்கும் செய்தல் அரிது' (85-1) 'அறிவுடையார் எல்லாம் உடையார் அறிவிலார் என்னுடையரேனும் இலர்' (43-10) 'அறிவு உரு ஆராய்ந்த கல்விஇம் மூன்றன் செறிவுடையான் செல்க வினைக்கு' என்று நெறிப்படுத்தினார் வள்ளுவர் என்பது எண்ணி எண்ணி இன்புறத்தக்கது.

ஆவது அறியும் ஆற்றல் வாய்ந்த அறிவுடையோரால் மட்டுமே ஒத்தது அறிதல் இயலும். ஆவது அறிந்து அற்றம் காக்கும் கருவியாகச் செயற்பட வேண்டிய அறிவு உலக மானுடத்தின் மலர்ச்சிக்குத் தேவையான ஒத்தபண்புகளை ஆராய்ந்து அறிதல் அவசியமாகிறது. திருவள்ளுவர் கூறும் அறிவு, பண்பை உள்ளடக்கியது. பண்பற்ற அறிவை, அவர் அறிவாக ஏற்பதில்லை (997) (ஆனந்தன் கு.ச. 2001-60)

மதியுடைமை மக்கட்குச் சிறப்புரிமையன்று. மாக்களும் மதிநுட்பமுடையவே என்பது தமிழர் கொள்கை மக்களும் மாக்களும் தம்முள் மதி அளவால் மாறுபடுவதன்றி, தன்மை அல்லது பண்பால் அவருள் வேறுபாடு காணற்கில்லை. (சோமசுந்தர பாரதியார், ச. நாவலர் 1998-33)

இத்தகைய ஒத்த பண்புகளென வள்ளுவரால் வரையறுக்கப்படுவன கீழ்வருமாறு.

1. ஐம்புலன்களின் வகைதெரிதல் (3-7),
2. கண்ணோட்டம் (58-1,2,6,8)
3. குறிப்பறிதல் (7-1,3,53,8,9,10)
4. மெய்யுணர்தல் (36-2,5,9)
5. அவா அறுத்தல் (37-1,6,8)
6. சான்றாண்மை (99-1,3,7)
7. நடுவுநிலைமை (12-6)
8. பெரியாரைத் துணைக்கோடல் (45-2)
9. வினைத்தூய்மையும் திட்பமும் (4,6,9,67-6,9)
10. மனித உடைமைகள் பத்து

**அறத்துப்பால்**

1. அன்புடைமை(8), 2. அடக்கமுடைமை (13), 3. ஒழுக்கமுடைமை (14), 4. பொறையுடைமை (16), 5. அருள்உடைமை (25)

**பொருட்பால்**

**1. அறிவுஉடைமை (43), 2. ஊக்கம் உடைமை (60), 3. ஆள்வினை உடைமை (62), 4. பண்புடைமை (100), 5. நாண் உடைமை (102)**

மேலே பகுத்த ஒத்தபண்புகள் ஒவ்வொரு மனிதரிடமும் ஒளிர்ந்தால் வீடும், நாடும் ஒளிரும் என்பது உறுதி. இத்தகைய உறுதியான கருத்துத் தெளிவு இருந்ததால்தான் வள்ளுவர் பின்வருமாறெல்லாம் அறிவுறுத்துகிறார் என்பதை ஒப்புநோக்கி உணர்வது உலகு தழுவிய மானுடப் பார்வையை ஒவ்வொருவருள்ளும் விதைக்கும்.

# பாவேந்தரின் மானுடச் சிந்தனை

**முனைவர் ந.கிருட்டினமூர்த்தி**
**தமிழ்ப் பேராசிரியர், ஆர்.வி.எஸ். அமர்நாத் கல்வியியல் கல்லூரி, காரைக்கால்.**

பல கவிஞர்களும் அறிஞர்களும் காலங்காலமாகக் கல்வியின் இன்றியமையாமையைக் கூறி மனித சமுதாயத்தைக் கல்வி பெறுமாறு அறிவுறுத்தி வந்தாலும் 'இளமையில் கல்' என்பதற்கே அவர்கள் முக்கியத்துவம் அளித்து வந்துள்ளனர். ஆனால் பாரதிதாசனோ கல்லார் முதிய ராயினும் முயல்க கல்வியில் என்று முதியோர்க்கல்வி குறித்த சிந்தனையை முன்வைக்கிறார். அது மட்டுமின்றி ஊனமுற்றோரும் கட்டாயம் கல்வி பெறவேண்டும், என்றும் அவர்தம் எதிர்காலத்திற்குரிய சிறந்த வழி கல்வியே என்பதனையும் எடுத்துரைக்கிறார்.

எதுபொருள் என்னும் இருவிழி யிலாரும்
படித்தால் அவர்க்குப் பல்விழி கள்வரும்
ஊமையும் கற்க ஊமை நிலைபோம்
ஆமைபோல் அடங்கும் அவனும் கற்க,
அறத்தைக் காக்கும் மறத்தனம் தோன்றும்
கையும் காலும் இல்லான் கற்க
உய்யும் நெறியை உணர்ந்துமேம் படுவான்

என்னும் இருண்ட வீட்டில் இடம்பெறும் அவர்தம் கவிதை அனைவருக்கும் கல்வி என்னும் சித்தாந்தத்தை முன்வைக்கிறது. வறுமை காரணமாகத் தாம் கல்வி பெறவில்லை என்று கூறிக்கொள்பவர் பலருண்டு. பாரதிதாசன் வறுமையைப் போக்க வேண்டுமெனில் கல்வி கற்க வேண்டும் என்று வறுமையை விரட்டும் வழியாகக் கல்வியை எடுத்துரைக்கிறார்.

இல்லார்க் கெல்லாம் ஈண்டுக்
கல்விவந் ததுவெனில் கடைத்தேறிற் றுலகே

என வறுமையின் ஒழிப்புக்கு ஒரே தாரக மந்திரம் கல்வி கற்றலே என்றும் அறுதியிட்டுக் கூறுகிறார். மக்களனைவருக்கும் வாக்குரிமை அளித்து விடுதல் மட்டும் குடியாட்சியின் பெருமையை நிலைநாட்டிவிடுவதாக அமையாது. தம் வாக்குகளை முறையாக அளிக்க மக்களுக்கு விழிப்புணர்வு வேண்டும். அதற்குக் கல்வி இன்றியமையாதது. எனவே வாக்களிக்கும் அனைவருக்கும் கட்டாயக் கல்வி அவசியம் என்ற புதியதொரு சிந்தனையையும் பாவேந்தர் முன்வைக்கிறார்.

கல்வி இருட்டிற்குக் கலங்கரை விளக்கு
யாவர்க்கும் வாக்குரிமை இருக்குமிந் நாட்டில்
யாவர்க்கும் கல்வி இருக்க வேண்டும்

என்ற நாட்டியல் நாட்டுவோம் என்னும் பாவேந்தரின் கவிதை, கல்வியால் தழைக்கும் புதியதொரு மானுட சமுதாயத்தைக் காண விழைகிறது. இச்சமுதாயத்தில் தம் கல்விப்பெருமை பிறரால் சிறப்பித்துப் பேசப்படவும் தம் கல்வியின் சிறப்பைப் பிறர் உணரவும் கல்லாதவர் இச்சமுதாயத்தில் இருக்க வேண்டும் என்று கற்றோர் உள்ளூற நினைக்கும் மனப்பாங்கைப் பாவேந்தர் தோலுரித்துக் காட்டுவதை,

கற்றவர் சிலர் கல்லாதவர் பலர்
என்னும் இழிவு நாட்டில் இருக்கலாம்
என்பது கற்றவர் எண்ணர் போலும்
எல்லாரும் இந்த நாட்டில் கற்றவர்
எனும்நிலை இயற்றுதல் கற்றவர் பொறுப்பே

என்னும் 'நாட்டியல் நாட்டுவோம்' என்ற அவரது கவிதை வரிகள் புலப்படுத்துகின்றன. ஒண்மை இல்லை பல்கேள்வி மேவலால் என்னும் கம்பராமாயணப் பாடலின் அடிக்கருத்து நடைமுறையுலகில் மெய்ப்பிக்கப்பட வேண்டும் என்ற பாவேந்தரின் அவாவினை வெளிப்படுத்துவதாய் மேற்குறித்த கவிதை அமையக் காணலாம்.

# புறநானூற்றில் மானுடப் பொதுமை

இரா.நிர்மலா
முதுநிலைத் தமிழ் விரிவுரையாளர், ஔவையார் அரசினர் மகளிர் கல்லூரி, காரைக்கால்.

பண்டைக் காலந்தொட்டு மானுட அறத்தின் அடிப்படையான செயலாக ஈகை கருதப்படுகிறது. ஒருவரிடம் கையேந்திப் பொருள் கேட்டல் என்பது இழிவானது என்று கூறும் அதேநேரத்தில், அப்படிக் கேட்டவருக்குத் தம்மிடம் பொருள் இருந்தபோதும் 'நான் தரவியலாது' என்று மறுத்தரைத்துத் தராமல் விடுப்பது மேலும் இழிவான செயலாகும் என்னும் கருத்தைக் கழைதின் யானையார் முன்வைக்கிறார். ஈயென விரத்த லிழிந்தன் றதனெதிர்/ஈயே னென்ற லதனினு மிழிந்தன்று (புறம் 204) என்ற கோட்பாட்டை முன்வைக்கும் புலவர் இதற்கு எதிர்மாறானதுபோல் மற்றொரு கோட்பாட்டையும் முன்வைக்கிறார். பிறரிடம் பொருளைக் கொள் என்பது கொடுப்பது உயர்ந்ததாகும். ஆனால் அப்பொருளை மறுத்துவிடுதல் அதனினும் சிறந்ததாகும். இந்த இருவகைப்பட்ட கருத்துகளும் வேறுபட்ட சூழல்களில் சரியாகப் பொருந்துவதைக் காணலாம். இக்கருத்து காலங்கடந்து எக்காலத்திற்கும் ஏற்புடைத்தாய் உளவியல் பாங்கோடு அமைந்திருக்கக் காணலாம்.

செல்வம் ஒருவரிடத்துக் குவிந்திருந்தாலும் அவர் பிறருக்கு ஈத்துவக்கும் இன்பம் அறியாதவராயின் அவரிடத்து யாரும் பொருள்வேண்டிச் செல்ல மாட்டார்கள். அதேநேரத்தில் பிறருக்கு அளிக்கும் மனப்பாங்கு உடையவரிடத்து அதிக அளவில் செல்வம் இல்லையென்றாலும் பொருள் வேண்டுவோர் அவரையே நாடிச் சென்று பொருள் பெறுவர். இக்கருத்தை விளக்க முறையே பரந்தநீர் கொண்ட கடலையும் கால்நடைகளாலும் விலங்குகளாலும் உண்ணப்பட்டுக் கலங்கிய சிறிதளவு நீருடைய நீர்த்துறையையும் உவமை காட்டுகிறார் புலவர்.

தெண்ணீர்ப் பரப்பி னிமிழ்திரைப் பெருங்கடல்
உண்ணா ராகுப நீர்வேட் டோரே
ஆவும் மாவுஞ் சென்றுணக் கலங்கி
சேறொடு பட்ட சிறுமைத் தாயினும்
உண்ணீர் மருங்கின் அதர்பல வாகும்

என்று விளக்கும் கழைதின் யானையாரின் கருத்துச் சமுதாயச் சூழலில் உண்மையாவதை நம்மால் அறியமுடிகிறது.

நாடாளும் அரசனானாலும் செல்வமே இல்லாத வறியவனானாலும் ஒரே அளவில்தான் உணவு உட்கொள்ள முடியும். செல்வந்தர் என்பதற்காக அளவில்லா உணவை வயிறு ஏற்றுக் கொள்ளாது. அதேபோன்று உடையும் குறைந்தது இரண்டிருந்தால் போதுமானது. நிறைய ஆடைகள் இருக்கின்றன என்பதற்காக ஒரே நேரத்தில் கணக்கற்ற ஆடைகளை ஒன்றன்மேல் ஒன்றாக உடுத்திக் கொள்ளவும் இயலாது. அதனால் தேவைக்குப் போக அதிகமிருக்கும் செல்வ வளங்களைப் பிறருக்கு அளித்து மகிழ்தல் வேண்டும். நாம் பின்னாளில் அளிக்கலாம் என்றால் அதனைச் செய்யவியலாது போதலுங் கூடும் என்னும் உலகப் பொதுவான செய்தியை,

தெண்கடல் வளாகம் பொதுமை யின்றி
வெண்குடை நிழற்றிய வொருமை யோர்க்கும்
நடுநாள் யாமத்தும் பகலுந் துஞ்சான்
கடுமா பார்க்குங் கல்லா வொருவற்கும்
உண்பது நாழி யுடுப்பவை யிரண்டே
பிறவு மெல்லா மோரொக் கும்மே
செல்வத்துப் பயனே யீதல்
துய்ப்பே மெனினே தப்புந பலவே

என மதுரைக் கணக்காயனார் மகனார் நக்கீரர் விதந்துரைக்கிறார்.

# வள்ளலாரின் உலகளாவிய மானுடப் பார்வை

கீதாபாய்
மதுரை

ஒருருவாம் இறைவனைச் சோதிமயமாகக் கண்டவர் வள்ளலார். சோதியைக் கடவுளாக வணங்குதல் பற்றி கடவுள் வாழ்த்துப் பாடலாக,

உலகநிலை முழுதாகி ஆங்காங் குள்ள
உயிராகி உயிர்க்குயிராய் ஒளிதான் ஆகிக்
கலகநிலை அறியாத காட்சி ஆகிக்
கதியாகி மெய்ஞ்ஞானக் கண்ணதாகி
இலகு சிதா காசமதாய்ப் பரமாகாச
இயல்பாகி இணையொன்றும் இல்லாதாகி
அலகில் அறிவானந்த மாகிச் சச்சி
தானந்த மயமாகி அமர்ந்த தேவே.

என வள்ளலார் அருளிய திருவருட்பா, மகாதேவ மாலையின் முதற்பாடலாக அமைந்துள்ளது.

விக்கிரக வழிபாடு செய்யும் மக்களுக்கு இது சற்று மாறுபட்டதாக இருப்பதாகத் தெரியலாம். ஆனால் பலரும் இறைவனைச் சோதியுருவில் கண்டு தரிசித்திருப்பது இங்கு கண்ணுறத்தக்கது. அப்பர் சுவாமிகள், மாணிக்கவாசகர், தாயுமானவர் போன்றோர் தமது பாடலிலே தெய்வத்தைச் சோதியாகக் கண்டு போற்றுகின்றனர்.

**வள்ளலாரின் உலகளாவிய மானுடப் பார்வை**

'வாடிய பயிரைக் கண்ட போதெல்லாம் மனம் வாடினேன்' என்றார் இராமலிங்க வள்ளலார். இதனை நோக்குங்கால் அவர் ஒருயிரினமான தாவர இனத்தின்மீது கழிவிரக்கங் கொண்டு வாடிய பயிரைக் கண்டபோதெல்லாம் மனம் வாடினாரா? அல்லது மனித இனத்தின் பசிப்பிணியைப் போக்கவல்ல பயிர்கள் வாடியிருப்பது கண்டு மனம் வெதும்பினாரா?

மாறாத் தாயன்பு கொண்டவர் என்பதை இதன்மூலம் நாம் நன்கு உணரலாம். உலகில் தோன்றிய சீர்திருத்தவாதிகளுள் தமக்கு ஒப்பும் உயர்வும் அற்றவர் அருள்ஞானி திருவருட்பிரகாச வள்ளலார்தான். ஆம். சீர்திருத்தவானில் அவர் ஒரு சூரியன் என்றே சொல்லலாம். மேலும் பொதுமக்களுக்கு முதன்முதலாகத் திருக்குறள் வகுப்பு நடத்தியவர். முதியோர் கல்வியை ஏற்படுத்தியவர். மேலும் மக்கள் பிற மொழிகளையும் அறிந்து கொள்ள வேண்டும் எனும் உயரிய நோக்கில் தமிழ்நாட்டில் முதன்முதலில் மும்மொழிப் பாடசாலை நிறுவியவர். இங்ஙனம் வள்ளலார் மக்களின் வயிற்றுப்பசியைப் போக்குவதோடல்லாமல் அவர்களது அறிவுப்பசிக்கும் கல்வி எனும் உணவளித்தவர்.

வள்ளலார், பசியினால் வருந்துகின்றவர்கள் எந்தத் தேசத்தாராயினும் எந்தச் சமயத்தவராயினும், எந்தச் சாதியினராயினும் அவர்கள் அனைவரிடத்திலும் கடவுள் விளக்கம் பொதுவாக விளங்குவதை அறிந்து அவர்கள் பசியை நிவர்த்தி செய்விப்பதே ஜீவகாருண்யம் என்றார்.

பசித்துன்பமே நரகம்
உண்டு பசி நீங்கிய இன்பமே மோக்ஷம் என்றார்.

மோக்ஷ நரகத்திற்கு இப்படியொரு விளக்கமளித்தோர் வள்ளலாரைத் தவிர வேறு யாருமிருக்க முடியாது.

# தமிழின் கலை கோலக்கலை

காயத்ரி சங்கர் நாராயணன்,
முனைவர் பட்ட ஆய்வாளர், இசைத்துறை, அன்னை தெரசா பல்கலைக்கழகம், கொடைக்கானல்.

ஒவ்வொரு நாட்டின் பண்பாட்டின்படி நாகரீகம் வளர்ந்து வந்துள்ளது. தமிழர் பண்பாடு என்பது முதற்குடிமகனின் பண்பாட்டிற்கு இணையானது. தொன்மையானது. மேன்மையானது. தமிழன் இயற்கையோடு இயைந்த வாழ்க்கை நடத்தியுள்ளான் என்பது இலக்கிய வரலாற்றில் அறியப்படும் உண்மை. இயற்கையின் ஒழுங்கான வளர்ச்சியை உலகின் எந்தவிதமான செயலாலும் அழிக்க முடியாது. தமிழர்களின் இயற்கையான வளர்ச்சி தமிழர்களின் பண்பாட்டில் வளர்ந்ததாகும்.

கலை என்பது நாட்டின் பொதுவுடைமை. எந்தப் பிரிவினையோ, பகுதியையோ சேர்ந்ததாக எண்ணாமல் கலைகளைப்போற்றிப் பாதுகாத்து வளர்ப்பதே நம் சமுதாயத்தின் கடமையாகும். அதுபோலப் போற்றி வளர்க்க வேண்டிய சிறப்புடைய தெய்வீக அம்சமுடைய கலை கோலக்கலையாகும்.

ஆதிகால மனிதர்கள் குகைகளில் பச்சிலைகளைப் பறித்துக் கற்பாறைகளின்மீது சித்திரம் திட்டினர். பின் படிப்படியாக உருவங்கள், கோடுகள் என வரைந்து மகிழ்ச்சியடைந்தனர். இப்பொழுதும் ஆஸ்திரேலியாவில் பழங்குடி இனத்தினர் தங்கள் உடலின்மீது பலவகைக் கோலங்களை வரைந்து பண்டிகை கொண்டாடி வருகிறார்கள்.

புராணக்காலங்களிலிருந்து கோலங்களைப் பற்றிய பல செய்திகள் தெரிய வருகின்றன. திரௌபதி நீர்மேல் கோலத்தை, ‘கம்பளப் போர்வை’ போல வரைந்ததும், துரியோதனன் அதுவழியே வரும்போது, அது நீர்நிலை என அறியாமல் ‘கம்பளவிரிப்பு’ என எண்ணி நடந்து, நீரில் மூழ்கியதாகவும் ஒரு கதை உண்டு.

சங்க இலக்கியங்களில் கோலம் எனப் பொருள் வைத்துப் பாடல்கள் உள்ளன. கோலம் என்பதற்குப் பல்வேறு பொருள் வழங்கப்பட்டன. அதாவது, அலங்காரம் அழகு, வடிவம், என பலபொருளில் கூறியுள்ளது. முதன்முதலில் வாசற்கோலம் என்ற குறிப்பு பெரியாழ்வாரின் திருமொழியிலும் ஆண்டாளின் நாச்சியார் திருமொழியிலும் காணப்படுகிறது.

பொங்கு வெண்மணல் கொண்டு சிற்றிலும்
முற்றத் திழைக் கலுறில்
சங்கு சக்கரம் தண்டுவாள் வில்லும்
அல்ல திழைக் கலுறாள் (பெரியாழ்வார் தி. 3,7,3)

மற்றும், ஆண்டாள் திருமாலின் பஞ்சாயுதங்களை வீட்டின் வாசலில் உருவக் கோலங்களாக வரைந்திட்டதை உரைக்கிறார். இலக்கியத்தைப் பொருத்தவரை, ‘கோலம்’ என்ற சொல்லை, வாசற்கோலத்திற்குக் கையாண்டவர் ஆண்டாளே.

வெள்ளை நுண்மணல் கொண்டு சிற்றில்
விசித்திரப்பட வீதிவாய்த்
தெள்ளி நாங்கள் இழைத்தகோலம்
அழித்தியாகிலும் உன்றன்மேல்
உள்ள மோடி ருகல்லால்
உரோட மொன்று மிலோம் கண்டாய்! (நா. தி. 2.5)

என்று கண்ணனை நோக்கிப் பாடுகிறார்.

17-ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த குமரகுருபரர் மீனாட்சியம்மைக் குறம் 25-இல் தரையை மெழுகிக் கோலமிடு எனவும், திரிகூட ராசப்பக் கவிராயர், கோலமிடு. முறைபெறவே கணபதியை அம்மே (8866:1) எனக் கூறுவதால் கோலமிட்ட பின்னரே பிள்ளையார் பிடிபிடித்து வைத்து, இறைவனைத் தொழுதமை புலனாகிறது.

## தமிழின் மானுடப் பார்வை

தா.பெ.அ.தேன்மொழி,
பாவலரேறு தெரு, தமிழூர், புதுச்சேரி.

"நின் நயந்து உறைக்குநர்க்கும் நீநயந்து உறைநர்க்கும்
பல்மாண் கற்பின் நின்கிளை முதலோர்க்கும்
கடும்பின் கடும்பசி தீர யாழநின்
நெடுங்குறியெதிர்ப்பை நல்கியோர்க்கும்
இன்னோர்க்கு என்னாது, என்னொடும் சூழாது,
வல்லாங்கு வாழ்தும் என்னாது, நீயும்
எல்லோர்க்கும் கொடுமதி- மனைகிழவோளே- புறம் -163)

மிகு வறுமையில் அரசன் குமணனிடம் வாங்கிவந்த பரிசுப்பொருட்களை இல்லம் வந்ததும் மனைவியிடம் கொடுத்து, நின்னை அன்புசெய்து வாழும் மகளிர்க்கும், நீ அன்பு செய்து ஒழுகும் மகளிர்க்கும், பல குணங்களையுடைய மாட்சிமைப்பட்ட கற்பினையுடைய நின் சுற்றத்து மூத்த மகளிர்க்கும் அளிப்பாயாக. நம் சுற்றத்தின் பசி நீங்க நினக்கு நெடுநாள் கடன் தந்து உதவியோர்க்கும், மற்று இன்ன தன்மையார் என்று கருதாதும், என்னோடும் கேளாதும், வளமோடு வாழலாம் என்று பாதுகாத்துவைத்துக்கொள்ள நினையாதும் நீயும் எல்லோர்க்கும் வழங்கி மகிழ்வாயாக. என்று ஒரு புலவர் எல்லோர்க்கும் கொடுமதி மனைகிழவோயே என்று,பிறர்நலம் எண்ணும் தமிழனின் தமிழ்வழியான மானுடப்பார்வையை நாம் என்றும் மதித்துப் போற்றுதல் வேண்டும். அவ்வாறே "யாதும் ஊரே யாவரும் கேளிர்" (புறம்-192) என்று அன்றைய நாளிலேயே எல்லா ஊரையும் தன் ஊராகவும், எல்லா மக்களையும் தன் உறவாகவும் எண்ணிக் கூறிய கணியன் பூங்குன்றனாரை இன்று உலகே உறவாய்க் கொள்கின்றது.

## ஞேயம் காத்தல் செய்

முனைவர் ம.ஏ.கிருட்டினகுமார்
தமிழ் விரிவுரையாளர், தாகூர் கலைக் கல்லூரி, புதுச்சேரி.

இரக்கம் காட்டுதல் மனிதனின் அருமைப் பண்புகளில் ஒன்று. துன்பம் செய்யும் ஒருவரின் அறியாமையை உணர்ந்து இரக்கம் காட்டும்போது அன்பு மேலிடுகிறது. சினத்தால் அக அழகும், முக அழகும் சிதைகிறது. எனவே, ஞேயம் காத்தல் செய் என்கிறார். மனிதன் மட்டுமே அனைத்து உயிர்களின் தன்மை அறிந்து அன்பு காட்டும் வல்லமை உடையவன். மாறாக விலங்குகள் மனிதர்களிடம் அன்பைக் காட்டுவதும் மனிதர்கள் விலங்குகளைக் கொன்று தின்பதும் வழக்காகி விட்டது. அனைத்து உயிர்களும் ஒரே மதிப்புடையன என்பதை உணர்ந்தால் எவ்வுயிர்க்கும் தீங்கு விளையாது. இதனை உணர்த்தும் வகையில் தூற்றுதல் ஒழி என்கிறார் மகாகவி.

பிற உயிர்களை மதிப்பதனைப் பொறுத்தே தன் மதிப்பு உயரும் என்பதனை இதன்வழி உணர்த்தியுள்ளார். துன்பத்தில் உழல்வோரைக் கண்டால் வெறுக்காது இயன்ற அளவு நன்மை செய்திட வேண்டும். தொழுநோயாளிகளை அரவணைத்த அன்னை தெரசாவையும் எதிரிகளிடமும் அன்பு பாராட்டிய மகாத்மாவையும் அரவணைத்து வாழ வேண்டும். அனைத்து உயிர்களிடமும் அவ்வாறு அன்புகாட்டி வாழவேண்டுமானால் எவரையும் தாழ்வாக எண்ணக்கூடாது. நெற்றிச் சுருங்கிடேல் என்று எளிமையாக வாழ வழிகாட்டுகிறார் மகாகவி.

முதியோர் இல்லங்கள், அநாதை இல்லங்கள், உதவும் கரங்கள், குழந்தைக் காப்பகங்கள் என நாளும் பெருகி வருவதும் நன்கொடைகள் கொடுப்பதில் மகிழ்பவர் எண்ணிக்கை உயர்வதும் கருணையின் வெளிப்பாடாகவே அமைகிறது.

# தமிழனின் ஒருலகும் தற்கால ஒருலகும்

முனைவர் சு.சுஜாதா
பிராவிரென்சு மகளிர் கல்லூரி, குன்னூர்.

தமிழனின் ஒருலகால் தற்கால ஒருலகை வெல்ல முடியுமா? வீழ்ச்சியுறும் மானுடத்தை எடுத்து நிறுத்த முடியுமா? என்ற கேள்விகளை முன்வைத்துப் பார்ப்போம். 'காலம் கருதி இடத்தால் செயின் ஞாலம் கருதினும் கைகூடும்' என்ற குறள்மொழி செவிகளில் ஒலிக்க 'வையத்தலைமைகொள்' எனப் பலகோணத்திலும் நெறிகாட்டிய பாரதிமொழி மனமிருக்க, 'பொதுவுடைமைக் கொள்கை திசையெட்டும் சேர்ப்போம்' என்ற பாவேந்தன் வரி வேதமாய் முழங்க, 'நன்றும் இன்றே செய்' என்ற நல்வாக்கு விரைவூட்ட இப்போதே முயன்றால் வணிக வலையைக் கிழிக்க முடியாதா?

மக்கள்தொகை மிகுதியும் நமக்குள்ள சிக்கல் பலவும் கொண்ட சீனாவால் ஒரு வல்லரசாக எழுந்து நிற்க முடிகிறது. எதிர்ப்புக் காட்ட முடிகிறது. சின்னஞ்சிறுவனால் தீக்கிரையாக்கப்பட்ட ஹிரோஷிமா நாகசாகியைத் தாங்கிக் கொண்டு குறுகிய காலத்தில் ஜப்பானால் புத்துயிர் பெற முடிகிறது. எத்தனையோ சோதனைக்குப் பின் கலைந்தும் பிரிந்தும் கட்டுக்குள் வந்து ரஷ்யாவால் கம்பீரமாக வலம் வர முடிகிறது. ஆத்மசக்தியும் அறிவாற்றலும் மிக்க தமிழர்கள் நினைத்தால் சுருட்ட வரும் ஒரலையைத் துரத்திவிட முடியாதா? உறுதியாய் முடியும். அதற்கு நாம் அணியமாகி அணிதிரண்டால்.

புரையோடிப் போயிருக்கும் லஞ்ச ஊழலிலிருந்து நாட்டை விடுவிக்க வேண்டும். தவறுகளைத் தட்டிக் கேட்கும் நேர்மையும் துணிவும் ஒவ்வொரு தமிழனுக்கும் வரவேண்டும். மக்களாட்சியின் மதிப்பைப் புரிந்து மக்களுக்குள்ள தகுதிகளை அடைந்து 'ஜன'நாயகத்தைக் காப்பாற்ற வேண்டும். தேர்தலின் புனிதமும் தேர்வின் கண்ணியமும் மக்களின் உள்ளத்தில் ஆழப்பதிய வேண்டும். தன்னிறைவு பெற்ற அரசாங்கத்தை யாரால் அமைக்க முடியுமோ அவருக்கே ஆட்சிப் பொறுப்பு வழங்கப்பட வேண்டும். அரசின் பிற துறைகள் யாவும் மாற்றானிடம் மண்டியிடாத - மண்ணுரிமையைப் பறிகொடுக்காத - எதுவரினும் தளராத உறுதியோடும் உள்ளத் தூய்மையோடும் செயல்பட வேண்டும். குடிமக்கள் யாவரும் அரசுக்கு - அரசின் நேராட்சிக்கு உறுதுணையாயிருப்பதோடு இடறுமிடங்களிலெல்லாம் எதிர்த்துக் கேட்கும் விழிப்பைப் பெற்றாக வேண்டும்.



நீதி என்பது பொது ஒழுக்கம். ஒரு கிராமத்தில் வலியவனுக்கு வேறு நியாயம்; எளியவனுக்கு வேறு நியாயமாக இருந்தால் அங்குள்ள நீதிக்காரரை உடனே மாற்ற வேண்டும். இல்லாவிட்டால், கிராமம் விரைவில் அழிந்து விடும். ஜனங்கள் குற்றம் செய்யாமல் நீதிக்காரர் பார்த்துக் கொள்ள வேண்டும். நீதிக்காரர் குற்றம் செய்யாமல் ஜனங்கள் பார்த்துக் கொள்ள வேண்டும். நீதிக்காரரிலே இரண்டு பெரிய பிரிவு உண்டு; நியாயஸ்தலங்களிலிருந்து நீதியைப் பரிபாலனம் செய்வோர் ஒரு பகுதி; நீதி (சட்ட) சபைகளிலிருந்து விதிகள் ஏற்படுத்துவோர் மற்றொரு பகுதி; இவ்விரு திறத்தாரும் கோணல்வழியிலே இறங்காமல் அடக்க வேண்டிய பொறுப்பு பொது ஜனங்களைச் சேர்ந்தது.

# தமிழின் ஆன்மிகச் செறிவும் நுட்பமும்

அருட்கவி. அரங்கனடிகள்
ஆசிரியர், 'இலக்கியப் பூங்கா' கோவை.

பசிப்பிணியைப் போன்ற கொடிய பாவி பிறிதொன்று இல்லை. உயர்குடியிலே பிறந்தவராயினும் அவர்களைப் பசிப்பிணி பற்றிக் கொண்டால் அவர்களது மனிதத்தன்மையே அழித்துவிடும். குடிப்பெருமை குன்றிப் பசிப்பிணியால் பதறுவோர், தீமைக் கடலைக் கடக்க உதவும் அறம் என்னும் தெய்வத்தையும் கைவிட்டுவிடுவர். அதுமட்டுமன்றி, பசிப்பிணி பற்றிக்கொண்டால் மங்கையர்க்கு அணிகலனாய்த் திகழும் நாணமும் அவர்களைவிட்டு நீங்கி விடும் என்கிறார் சாத்தனார் எனும் பெரும்புலவர்.

குடிப்பிறப்பு அழிக்கும்; விழுப்பம் கொல்லும்;
பிடித்த கல்விப் பெரும் புணைவிடூஉம்
நாணணி களையும் மாணெழில் சிதைக்கும்
பூண்முலை மாதரொடு புறங்கடை நிறுத்தும்
பசிப்பிணி என்னும் பாவி

எனவேதான் மண்ணுலகில் உயிர்த்த உயிர்களெல்லாம் - உயிர்களுக்கெல்லாம் உணவளிப்பதே உயர்ந்த பேரறம் என்கிறது தமிழ் ஆன்மிகச் செறிவு மிக்க நுட்பம்.

மண்டிணி ஞாலத்து வாழ்வோர்க்கெல்லாம்
உண்டி கொடுத்தோர் உயிர் கொடுத்தோரே

உணவையே அன்னபூரணியாக வழிபடுகிறது, தெய்வத்தமிழ். அறம் என்பதையே இறைவனாகக் கொண்டாடுகிறது, மறைகூறும் தமிழ். அறம் என்பதற்கே புதிய விளக்கத்தைத் தருகிறது தமிழ்.

அறமெனப்படுவது யாதெனக் கேட்பின்
மறவாது இதுகேள்; மன்னுயிர்க்கெல்லாம்
உண்டியும் உறையுளும் அல்லது
கண்டது இல்....

இது மட்டுமன்றி இறைவனுக்கு முன்னே சாதிகள் இல்லையென்பதே அறம் என்று சிறப்பித்துக் கூறுவதும் தமிழ் மறையாகும்.



ஞானத்தி லேபர மோனத்திலே – உயர்
மானத்தி லேஅன்ன தானத்திலே
கானத்தி லேஅமு தாக நிறைந்த
கவிதையி லேயுயர் நாடு!

# மகாகவி பாரதியார் கவிதைகளில் மானுடப் பார்வை

சோ.முத்தமிழ்ச் செல்வன்
தமிழ்த்துறை, அழகப்பா அரசு கலைக்கல்லூரி, காரைக்குடி.

மானுடப்பிறவியின் மாண்பினை மகாகவி பாரதி,

மானுட சென்மம் பெறுவதற்கு அரிது எனும்
வாய்மையை உணர்ந்தாரேல் - அவர்
ஊனுடல் தீயினும் உண்மை நிலைதவற
உடன்படு மாறுளதோ ?

எனவரும் அடிகளில் கூறுவார். இக்கருத்தினைப் பாரதிக்கு முன்னேயே ஔவை மூதாட்டி, 'அரிது அரிது மானிடராய்ப் பிறத்தல் அரிது' என மொழிந்துள்ளார். இவற்றின்வழி உலகில் உள்ள உயிர்களில் எல்லாம் தலையாய இடத்தைப் பெற்று நிற்பவர் மனிதர்களே என்ற உண்மை புலனாகிறது. இந்த உண்மையினைப் பாரதி,

மண்ணில் உயிர்க்கெல்லாம் தலைவரென மானிடரே
எண்ணி நின்றார்

என்ற அடிகளில் எடுத்துரைக்கிறார். மனித இனம் குறித்துத் தத்துவ அறிஞர் அரிஸ்டாட்டில், "மனிதன் கூடிவாழும் விலங்கு- சமுதாய விலங்கு" என மொழிவார். இத்தகைய கருத்தினைப் பாரதி,

இனத்திலே கூடி வாழ்வர் மனிதர்
என்று இசைக்கும் வேதம் எனவரும் அடிகளில் விளக்குவார்.

### இன்றுபுதிதாய்ப் பிறந்தோம்

கடந்த காலத்தை நினைத்து வருந்தி இறப்பவர்களுக்குப் புத்துணர்வு தந்து மீண்டும் அழைக்கிறார் பாரதி. ஆனால் அதனைச் செவிமடுத்துக் கேட்காத மானுடர் தங்களைத் தாங்களே அடிமைகள் என எண்ணுகின்றனர். அதனைக் கண்டு ஆத்திரம் கொண்ட பாரதி மீண்டும் அவர்களுக்கு,

சென்றதினி மீளாது மூடரே ! நீர்
எப்போதும் சென்றதையே சிந்தை செய்து
கொன்று அழிக்கும் கவலைஎனும் குழியில் வீழ்ந்து
குமையாதீர் ! சென்றதனைக் குறித்தல் வேண்டாம்
இன்றுபுதிதாய்ப் பிறந்தோம் என்று நெஞ்சில்
எண்ணமதைத் திண்ணமுற இசைத்துக்கொண்டு
தின்றுவிளை யாடிஇன்புற்று இருந்து வாழ்வீர் !
அஃதின்றிச் சென்றதையே மீட்டும் மீட்டும்
மேன்மேலும் நினைந்து அழுதல் வேண்டா அந்தோ !
மேதையில்லா மானுடரே ! மேலும் மேலும்
மேன்மேலும் புதிய காற்று என்முன் வந்து
மேன்மேலும் புதியவுயிர் விளைத்தல் கண்டீர் !

என வரும் அடிகளில் இன்று புதிதாய்ப் பிறந்த நாம் மீண்டும் மீண்டும் புத்துணர்வு பெற்றுப் புதிய அவதாரம் எடுப்போம் என உறுதியும் கொடுக்கின்றார்.

# தொல்காப்பியத்தில் ஒருலகக் கருத்துணர்வு

முனைவர் மூ. கருணாநிதி
தமிழ் விரிவுரையாளர், புதுவைப் பல்கலைக்கழகம், புதுச்சேரி.

மக்களுடைய புலன்களை நெறிப்படுத்துவதற்கே வகுத்துக்கொண்ட வழக்காகத்தான் புலனெறி வழக்கம் என்பது மெய், வாய், கண், மூக்கு, செவி என்னும் ஐம்பொறியறிவுகளைப் 'புலன்'என்றும் மனத்தின் மெய்மையான உணர்வை 'அறிவு' என்றும் வேறுபடுத்தி உணர்தல் வேண்டும். இதனை,

அறிவும் புலனும் வேறுபட நிறீஇ

என்னும் தொல்காப்பியர் கூற்றுக்கு நச்சினார்க்கினியர் வகுத்துள்ள உரை தெளிவாக்குகின்றது. இதனால் மனம் மெய்யுணர்வுள்ளது என்றும், அது மெய், வாய், கண், மூக்கு, செவிகளோடு சேரும்போது அவ்வவற்றின் புலனியல்புக்கேற்பத் திரிந்து விடுகிறது என்றும் தெரிகிறது. அவ்வாறு திரியும்போது மனத்தின் பலவகை மாசுக்கள் தோன்றிவிடுகின்றன. அந்த மாசுகளை நீக்குவதற்கு மேற்கொள்ளும் நெறிதான் 'அறம்' எனப்படுவது. இந்த உண்மையைத் தெளிவாக உணர்ந்த பேரறிஞர் தொல்காப்பியர் மனத்தையும் புலன்களையும் நெறிப்படுத்த 'புலனெறி வழக்கம்' என்னும் ஒன்றைப் படைத்துத் தந்துள்ளார். இதனை,

நாடக வழக்கினும் உலகியல் வழக்கினும்
பாடல் சான்ற புலனெறி வழக்கம் (தொல். அகம்- 53)

என்னும் நூற்பாவால் அறியமுடிகிறது. புலனெறி வழக்கம் அறம், பொருள், இன்பம், வீடு என்னும் நான்கு உறுதிப்பொருட்களையும் அடிப்படையாகக் கொண்டே அமைக்கப்பட்டுள்ளது. இன்பம் என்பது எல்லா உலக உயிர்களுக்கும் பொதுவானது; இதை இரண்டு வகையாகப்பிரிக்கலாம். ஒருவகை இன்பம், உணவு, உறையுள் போன்றவற்றால் வருவது. இதனை உயிர்கள் தம்முயற்சியால் தேடிப்பெறுதல் வேண்டும். இதன்பொருட்டே உயிர்க்குலங்கள் இடையறாமல் உழைத்து வருகின்றன. மற்றொரு உலக இன்பம் ஆணும், பெண்ணும் என்னும் இருபாலாய் இசைந்து பொருந்திப் பெறும் இன்பமாகும். இஃது உலகில் உள்ள அனைத்து உயிர்க்குலத்திற்கெல்லாம் அவ்வவற்றின் பருவத்திற்கும் பக்குவத்திற்கும் ஏற்றாற்போலத் தானே வந்து பொருந்துவதாகும். இந்த இன்பம்தான் இனப்பெருக்கத்திற்குத் துணை செய்யும் இன்பமாகும். இதனால்தான் உலகம் இடையறாமல் நடைபெற்று வருகிறது. இஃது அனைத்துலக உயிர்க்குலத்திற்கெல்லாம் தானே வந்து பொருந்தும் ஆற்றலுள்ளதாக அமைந்துள்ளது. இவ்வுண்மையை,

எல்லா வுயிர்க்கும் இன்பம் என்பது
தானமர்ந்து வரூஉம் மேவற் றாகும் (தொல்-பொருள்-29)

என்று உலகுக்கு அறிவித்துள்ளார் தொல்காப்பியர்.



வானம் அளந்தது அனைத்தும் அளந்திடும்
வண்மொழி வாழியவே!
ஏழ்கடல் வைப்பினும் தன்மணம் வீசி
இசை கொண்டு வாழியவே!

# வள்ளுவத்தில் பிறவிப் பெருங்கடல் நீந்தும் வழி

**பேராசிரியர் தி.கோவிந்தன்**
**ஸ்ரீ விவேகானந்தா அறக்கட்டளை, தருமபுரி.**

இறைவன் தாள் பற்றிக் கரை சேர்ந்தார் மிகச்சிலர். இவர் இறைவன் கருவறையில் அரியவித்து' இறைவன் அடி சேர்ந்து நீடுவாழ்வார் மிகப்பலர். இவர் விண்ணுலகினர். பரமபதப்பேறு பெற்றவர். இந்த வேறுபாடு உணரத்தக்கது. மரீசி என்னும் முனிவர் போன்றவர் முதல் திறத்தவர். இப்பேற்றை பிரமனும் விரும்புவான். இவ்வாறு கடவுள் வாழ்த்து தாள் தொழுது பிறவிக்கடல் நீந்த வழிகாட்டுகிறது.

நீந்தத் துணைபுரிய அவதாரம் செய்பவர் எப்படியிருப்பார்கள்?

ஒழுக்கத்து நீத்தார் பெருமை விழுப்பத்து
வேண்டும் பனுவல் துணிபு (குறள்-21)

எல்லா நூல்களும்மேன்மையானதாகத் துணிந்து கூறுவது ஒழுக்கத்தான் நீத்தவர்களையேயாம். இங்கு ஒழுக்கம் என்றது இல்லற ஒழுக்கத்தை. அடுத்த குறட்பாவான் (குறள்-22) துறவற ஒழுக்கத்தை எடுத்துக்கூறுதலால் இங்கு ஒழுக்கம் என்பது இல்லற ஒழுக்கமேயாம்.

திருக்கோட்டியூர் நம்பிகள் முதலானோர் இல்லறத்தில் ஒழுகிப் பிறரையும் ஒழுகச் செய்து வீடு பேறு தந்தமை நூல்களானும் காட்சியானும் விளங்கும்.அன்றி,

காமம் சான்ற கடைக்கோட் காலை
ஏமம் சான்ற மக்களொடு துவன்றி
அறம்புரி சுற்றமொடு கிழவனும் கிழத்தியும்
சிறந்தது பயிற்றல் இறந்ததன் பயனே (தொல்.பொருள். கற்பு-51)

என்னும் நூற்பா இல்லறநெறி ஒழுகுவார், எப்பொழுது எப்படி நீந்தத் துணைபுரிவார் என்று விளக்கம் செய்வதைக் காணலாம்.

இல்லறம், துறவறம் எனும் இரு அறத்தில் ஒழுகுபவர்களும் உரன் என்னும் தோட்டியான் ஒரைந்தும் காப்பவர்கள். இவ்வாறு காப்பவர்கள் அடையும் மேன்மைக்கு இந்திரனே சான்று.

புலன்களைக் காத்து, அடக்குபவர் போலவே, உலகில் தம் கருமமே செய்து உயர்ந்தவர் உண்டு. அவர்கள் செயற்கரிய செய்பவர். கல்வி, தறுகண், புகழ், கொடை எனப் பெருமிதங்கொண்டு உயர்ந்த வாழ்வு வாழ்பவர். இவர்கள் நம் வாழ்வை நீந்த வழிகாட்டி வழித்துணையாய் வருபவர்.

ஐந்து ஐந்தாகப் பகுக்கப்படும் சுவை முதலாயினவற்றை ஆய்ந்து தெரிகின்றவனை, நாம் விஞ் ஞானிகள் என்போம். உயர்ந்த விஞ்ஞானி நாம் உலகைக் கடந்து செல்ல உதவும் உத்தமப் புணையே என்பதில் இரு கருத்து வேண்டாம்.

மறைநூல்களே ஓதி நிறைமொழி மாந்தராய் வாழ்வோர்
குணக்குன்றாய் ஒழுகுவோர், எல்லா உயிர்களிடத்தும் தண்ணளி கொண்டவர்
இவரெல்லாம் நாம் நீந்தத் துணைபுரியும் உத்தமர்களே என உணர்வோமாக.

இறைவன் தாள் தொழுது பிறவியைக் கடக்க இறைவன் கருணையே முதல் துணை. அந்தக் கருணையால், பிறவிப் பெருங்கடலைக் கடந்தவர். மீண்டும் வந்து நீந்துகின்றவர்க்கு உதவுகின்றனர். இவ்வாறு உதவுகின்றவர்களை வள்ளுவர் நீந்தச் செய்கின்றவர்கள் என்னும் பொருளில் நீத்தார் என்பர். நீந்துதல் தான் தன்வினை. நீத்தார் பிறவினை. நீந்துவதோடு இன்றிப் பிறரையும் நீந்தச் செய்கிறது படகு ஆகவே, நீத்தார் புணை போல்வர். நீந்தத் துணை புரிவது ஏறி அமர்ந்து செலுத்தும் படகு அன்று. நீரில் தானும் மிதந்து நீந்துகின்றார் மிதக்கவும் துணைபுரியும் புணை என்றும் காணலாம்,

சுரையாழ அம்மிமிதப்ப வரையனைய
யானைக்கு நீத்து முயற்கு நிலையென்ப
காகை நாடன் சுனை

என்னும் சிந்தியல் வெண்பாவில் நீந்து, நீத்து எனப் பிறவினையாக வந்தமை காண்க.

# தமிழ் இலக்கியம் காட்டும் ஓருலகம்

புலவர் சு.சாவித்திரி
புதுச்சேரி

பழந்தமிழ் மக்கள் பண்டைக்காலத்திலிருந்தே இறைவனை இசையோடு பாடி வழிபட்டனர். அவை பக்தி இசை இலக்கியங்களாகும். அவர்கள் தம் உலகியற்பொருள்களின் இயற்கை வனப்பையும், தெய்வ வனப்பையும் பொருளாகக் கொண்டு பாடலியற்றினர்.

மிகப்பழங்காலத்தில், 'பாணர்' என்பவர் இசையில் வல்லவர்கள். இவர்கள்தம் இசைத்திறத்தை அரசவையின்கண் வெளிப்படுத்தும்பொழுதெல்லாம் இசைப்பாடலுக்குச் சிறப்புடைப்பொருளாய் விளங்கும் முழுமுதற்பொருளைப் போற்றும் தெய்வப்பாடலையே முதன்மையாகப் பாடுதல் வழக்கமாகக் கடைப்பிடித்தனர் என்பதைப் பத்துப்பாட்டுள் ஒன்றாகிய மலைபடுகடாம் மூலம் அறிகிறோம்.

மருதம் பண்ணிய கருங்கோட்டுச் சீறியாழ்
நரம்பு மீதிறவா துடன் புணர்ந்தொன்றிக்
கடவத றிந்த இன்குரல் விறலியர்
தொன்றொழுகு மரபில் தம்மியல்பு வழாஅது
அருந்திறற் கடவுள் பழிச்சிய பின்றை
விருந்திற் பாணி கழிப்பி (534-539)

எனவரும் அடிகளில் பெருங்குன்றூர்ப் பெருங்கௌசிகனார் தெளிவாகக் கூறியுள்ளார். கடைச்சங்கக் காலத்தையடுத்துத் தோன்றிய முத்தமிழ்க் காப்பியமாகிய சிலப்பதிகாரத்தில் 'மங்கலவாழ்த்து'ப் பாடல் பகுதியில் 'திங்களைப்போற்றுதும்', 'ஞாயிறு போற்றுதும்', 'மாமழை போற்றுதும்', 'பூம்புகார் போற்றுதும்' என்றும் வேட்டுவ வரியில் கொற்றவை, ஆய்ச்சியர் குரவையில் திருமால் ('திருமால்சீர் கேளாத செவியென்ன செவியே', 'கரியவனைக் காணாத கண்ணென்ன கண்ணே', 'நாராயணா வென்னாத நாவென்ன நாவே' போன்றவை) குன்றக்குரவையில் முருகன் ஆகிய தெய்வங்களைப் பரவும் முறையில் அமைந்த வரிப்பாடல்களும் இரண்டாயிரம் ஆண்டுகட்கு முன்னரே தமிழகத்தில் இன்னிசையுடன் பாடப்பெற்ற தெய்வ இசை நூல்களாகும்.

பின்னர் கி.பி. ஐந்தாம் நூற்றாண்டில் சிவபெருமானாலேயே 'அம்மையே' என்றழைக்கும் பேறு பெற்ற காரைக்காலம் மையார் அருளிய 'திருவாலங்காட்டு மூத்த திருப்பதிகங்கள் இரண்டும் நட்ட பாடை, இந்தளம் என்ற பண்களில் பாடப்பெற்ற இன்னிசைத்திருப்பதிகங்களாகும்.

திருஞானசம்பந்தர் தேவாரப்பதிகங்கள் 384 முதல் மூன்று திருமுறைகளாகவும், திருநாவுக்கரசர் தேவாரப்பதிகங்கள் 310ம், நான்கு, ஐந்து, ஆறாந் திருமுறைகளாகவும் சுந்தரர் தேவாரப் பதிகங்கள் 100 ம் ஏழாந்திருமுறையாகவும் தொகுத்தார். மூவர் தேவாரத்தின் பெருமையை,

அருமறையைச் சிச்சிலி பண்டு அருந்தத் தேடும்
அதுபோல் அன்றுஇது, என்றும் உளதாம் உண்மைப்
பரபதமும் தற்பரமும் பரனே அன்றிப்
பலர் இல்லை என்றெழுதும் பனுவல் பாரில்
எரியினிடை வேவாது ஆற்று எதிரே ஓடும்
என்புக்கு உயிர்கொடுக்கும் இடுநஞ்சு ஆற்றும்
கரியை வளைவிக்கும் கல்மிதக்கப் பண்ணும்
கராமதலை கரையிலுறக் காற்றுங்காணே

என்று திருமுறை கண்ட புராணம் கூறுகின்றது. இங்ஙனமே நாலாயிரத் திவ்வியப் பிரபந்தத்திலுள்ள திருப்பதிகங்களில் பெரும்பாலானவை தேவாரத் திருப்பதிகங்களைப் போன்று பாடுதற்கேற்ற இயலிசை அமைப்பினையுடைய தெய்வ இசைத் தமிழ் இலக்கியங்களாகத் திகழ்கின்றன.

# வள்ளுவரும், வள்ளலாரும்

அருட்பா அருணாசலம்
திருக்குறளார் நகர், அரும்பார்த்தபுரம், புதுச்சேரி.

உலக இயற்கையான மரணத்தை வென்று மரணமிலாப் பெருவாழ்வைப் பெற்றவர் வள்ளலார். மரணத்தை வெல்ல முடியுமா? இதற்குத் தமிழ்மறையாம் திருக்குறள் யாது பதில் கூறுகிறது?

கூற்றம் குதித்தலும் கைகூடும் நோற்றலின்
ஆற்றல் தலைப்பட்ட வர்க்கு

தான் செய்த நோன்பாகிய தவம் கைவரப் பெற்றவர்களால் இயமனை வெல்ல முடியும். மரணத்தைத் தவிர்க்கமுடியும் சுவாமி விவேகானந்தரும் மரணத்தை வெல்ல முடியும் என்ற கருத்தை, 'அது ஒரு சரியான சூத்திரம். முறையான பயிற்சியை ஒழுக்க நெறியுடன் மேற்கொண்டால் அஃது சாத்தியமே"என்கிறார். இத்தகைய பயிற்சியை இளமைமுதற்கொண்டே அஃதாவது, 9 வயது முதற்கொண்டே செயல்படுத்தி வெற்றி கண்டவர், வள்ளலார்.

கட்டமும் கழன்றேன் கவலை விட்டொழிந்தேன்
கலக்கமும் தீர்ந்தனன் பிறவிச்
சட்டமும் கிழித்தேன் தூக்கமும் துறந்தேன்
சாவையும் நோவையும் தவிர்ந்தேன்
சிட்டமும் அடைந்தேன் சிற்சபை உடையான்
செல்வமெய்ப் பிள்ளை என்றொருபேர்
பட்டமும் தரித்தேன் எனக்கிது போதும்
பண்ணிய தவம்பலித் ததுவே

இந்தத் திருவருட்பாப்பாடல் இவ்வுண்மையைத் தெளிவுபடுத்துகிறது. தான் செய்த தவம் பலித்ததாம். அதனால் சாவையும், நோவையும் தவிர்த்துக் கொண்டாராம். "நோற்றலின் ஆற்றல் தலைப்பட்டவர்க்கு" என்ற திருக்குறளின் கருத்து வள்ளற்பெருமானால் மெய்ப்பிக்கப் பட்டுள்ளது. தான் பெற்ற இவ்வருள் அனுபவத்தை இவ்வுலகம் முழுவதும் பெற வேண்டும் என்று திருமூலநாதர் கூறியதுபோலவே வள்ளல்பெருமானும் ஆசைப்படுகிறார்.

'நீதிநடஞ்செய் பேரின்ப நிதிநான் பெற்ற
நெடும்பேற்றை
ஓதிமுடியாது என்போல் இவ்வுலகம் பெறுதல்
வேண்டுவனே'

எனத் தனது பேராசையை வெளிப்படுத்துகிறார்.

தாயுமானவரும்,

'ஆடுங் கருணைப் பெருஞ்சோதி
அருளைப் பெறுதற்கன்பு நிலை
தேடும் பருவம் இது கண்டீர்!
சேர வாரும் செகத்தீரே!'

என்று பொதுவாகவே உலகமக்களை அழைக்கிறார். திருமூலர் தொடங்கி வள்ளல் பெருமான் வரை அருளாளர்கள் அனைவரும் தான் பெற்ற அருள் அனுபவங்களை இவ்வுலக மக்களும் பெறல் வேண்டும் என்றே விரும்பியுள்ளனர். தமிழக அருளாளர்களின் பொதுமை உணர்வு மொழி, இனம், மதம், நாடுகடந்து உலகளாவியே காணப்படுகிறது. இதனை அவர்கள் வாழ்ந்து காட்டிய நடைமுறைகளில் இருந்தே உணர்ந்து கொள்ளலாம்.

# பார்வையாளர்கள் பதிவுகளிலிருந்து....

'தமிழின் ஒருலகக் கருத்துணர்வு' எனும் பன்னாட்டுக் கருத்தரங்கில் காலை 9.30 மணிமுதல் மாலை 6.30 மணிவரை செவிக்கும், மனத்திற்கும் இனிமையைக் கொடுத்துப் பரவசமூட்டிய இந்நிகழ்வு வாழ்நாளில் என்றென்றும் மறவாத ஒரு இனிய நிகழ்வு. இந்நிகழ்வில் நானும் பங்கேற்றதை நினைத்துப் பெருமகிழ்ச்சி அடைகின்றேன். மேலும், மேலும் இதுபோல் இங்கு நிகழும் எல்லா நிகழ்வுகளிலும் பங்கேற்றுப் பயனடைய என் மனம் விழைகின்றது. இதுபோல், சிறப்பான கருத்தரங்கங்களை நடத்திவரும் மதிப்பிற்குரிய மீனாட்சி அக்கா அவர்களுக்கு என் வணக்கத்தைப் பெருமிதத்துடன் தெரிவித்துக் கொள்கிறேன்.

**- வே.சிவமதிசேகர், குயிலாப்பாளையம், ஆரோவில்.**

பாரதி– 125 நிறைவுவிழா எனும் பன்னாட்டுக் கருத்தரங்கம்– 'தமிழின் ஒருலகக் கருத்துணர்வு' இம்மாநாடு போற்றுதலுக்கும், பாராட்டுதலுக்கும் உரியது. ஆன்றோர், சான்றோர்கள் கூடியிருக்கும் இந்நாள் ஓர் பொன்னாள். இதுபோன்ற மாநாடுகள் என்றென்றும் சிறந்து நடைபெற வேண்டும். இம்மாநாட்டில் கலந்துகொள்ள வாய்ப்புக் கிடைத்தமைக்கு நன்றி. ஆரோவில் பாரில் சிறந்து நிற்கட்டும்.

**- தி.கல்பனாதேவி, அச்சிரப்பாக்கம்.**

ஆரவாரமில்லாத அமைதியான கருத்தரங்கு. இயற்கைச் சூழல்; மாசற்ற காற்று, அயலார் பங்கேற்பு அனைத்தும் பெருமை.

**முனைவர் இரா.நிர்மலா, அவ்வையார் கல்லூரி, காரைக்கால்.**

முற்பகல் நிகழ்ச்சியில் பேசிய ஆன்றோர்கள் அனைவரும் அரிய கருத்துக்களை சங்கநூற்களில் இருந்தும், பாரதியார் பாடல்களிலிருந்தும், மற்றும் பல எடுத்துக்காட்டுக்கள் மூலம் ஒருலகக்கருத்து உணர்வை ஏற்படுத்தினர். பாரதியாரைப்பற்றியும், அவர் பாடல் பற்றியும் வைரவரிகளாக, சுவையாக, முழுமையாக, செவிவழி இனிமையாக நுழைந்து இதயத்தில் தங்கிவிட்டது. நன்றி.

**- புஞ்சைத் தமிழரசன், கூடுவாஞ்சேரி.**

பாரதி மீண்டும் அற்புதம். வாழ்வில் திருப்பம். நன்றி

**எம்.மண்ணாங்கட்டி, புதுச்சேரி.**

பாரதிவிழா மிகவும் சிறப்பாக இருந்தது. ஆராய்ச்சியும் அடிகளாரின் பேச்சும், என் ஆழ்மனதைத் தொட்டது என்றால், மிகையன்று. மீனாட்சி அம்மையும், சேதுபதி தொண்டும் மேலும் சிறக்க வாழ்த்துகள்.

**எஸ்.சோமசுந்தரம், அரியாங்குப்பம், புதுச்சேரி.**

மகாகவி ஸ்ரீ சுப்பிரமணிய பாரதியின் 125ஆவது பிறந்த நாள் விழாவினை மிக அருமையாக நடத்தினார்கள்.

'எடுத்த காரியம் யாவினும் வெற்றி' என்ற பாரதியின் வாக்கிற்கேற்ப இந்நிகழ்ச்சி ஒருலகச் சிந்தனையில், செயலில் வெற்றி கண்டதை உணரமுடிகிறது. பாரதி புதுவைக்கு வருகை தந்த நூற்றாண்டு விழாவின் தொடக்கம் இனிது.

ஸ்ரீஅரவிந்தர், ஸ்ரீஅன்னை, திருவள்ளுவர், தாகூர், வள்ளலார், ஆண்டாள், ஔவையார், விவேகானந்தர், ரமணமகரிஷி சிந்தனைகளுக்கு நடுநாயகமாக பாரதி என ஆன்மிகச் சான்றோர்களின் தத்துவச்சிந்தனைகளோடு பேசிக்கொண்டே அமர்ந்திருக்குமாறும், பாரதி–செல்லம்மாவோடும் உவப்போடு மகிழுமாறும், கருத்தரங்கையும், கலைநிகழ்வையும், குழந்தைகளின் யோகாசனத்தோடும் களிப்படையச் செய்த அன்புள்ளங்களுக்கு நன்றி.

**இரா.விசாலாட்சி, தமிழ்த்துறை, தாகூர் கலைக்கல்லூரி, புதுச்சேரி.**

பாரதி–125 விழா மிகவும் அருமையாக இருந்தது. அடிகளார் சொற்பொழிவு மிகவும் அருமையாக இருந்தது. இவ்விழா இன்னும் ஆயிரம் ஆயிரம் நூற்றாண்டுகள் நடக்க வேண்டும் என்பது எனது ஆசை.

**பி.சுப்புராயன், புதுச்சேரி.**

கல்லும் மண்ணும் தோன்றுவதற்கு முன் தோன்றிய மொழி, 'தமிழ்' என்று படித்திருக்கிறேன்... அந்தக் காலத்திற்கே சென்று ஆரோவில்லில்தான் அருமைத்தமிழை அனுபவித்திருக்கின்றேன்.

'காட்டுமிராண்டி மொழி' என்று தந்தை பெரியாரால் வர்ணிக்கப்பட்ட தமிழை, காட்டுக்குள்ளும் கற்றுக்கொடுக்கும் அருந்தவப் பணியாக மேற்கொண்டுள்ள அக்கா.. அல்ல.. அன்னை மீனாட்சி அவர்களின் தொண்டிற்கு வணக்கங்கள்.

**- கி.சிங்காரவடிவேல், தவத்திரு குன்றக்குடி அடிகளாரின் உதவியாளர், குன்றக்குடி.**

ஆரோவில் நிகழ்வு அரிய இலக்கிய விருந்து. கவிச்சிற்பியாம் பாலசுப்பிரமணிய அய்யாவின் செறிவான பேச்சால், உதயமூர்த்தியின் மனிதநேய உரையால், அடிகளாரின் அருட்பொழிவால் நெகிழ்ந்தோம். இளைஞி மீனாட்சி அம்மாவின் உபசரிப்பும், எளிமையும், சகோதரர் சேதுபதியின் எடுப்பான இணைப்புரையும் நிகழ்வை மெருகேற்றியது. சுடச்சுட செவிக்கும்– அதற்கும் மேலாய் வயிற்றுக்கும் படைத்த விருந்து அருமை. நன்றி சொன்னால் அது நம் உறவை அந்நியப்படுத்திவிடலாம். இனிய எழில் நகராம் ஆரோவில் மனதிற்குத் தன் பசுமையால் அமைதியை வழங்கியது. தொடரட்டும், உங்களின் இலக்கியப் பணியும், பொதுச்சேவையும். உங்களின் ஆயுளை நீட்டிக்கப் பிரார்த்திக்கும்,

**- இரா. தமிழரசி, ஸ்ரீசி.பா.சு.தமிழ்க்கல்லூரி, மயிலம்.**

காலை முதல் மாலை வரை நடைபெற்ற கருத்தரங்கு, காலம் போவது தெரியாத வகையில் நடைபெற்றது. குறிப்பாக, கலந்துரையாடல் அமர்வு சிறப்பாக அமைந்தது. மொத்தத்தில் இக்கருத்தரங்கு எதிர்காலத்தில் ஒருலக ஒருமைப்பாட்டைக் கொண்டுவரும் என்பது உண்மை. இச்செய்திகள் தமிழின், தமிழரின் சிறப்பை உலகுக்கு உணர்த்தும் என்றால் மிகையல்ல.

**- இரா.பரஞ்சோதி, துணைமாவட்டஆட்சியர் (ஓய்வு) சென்னை-74.**

ஒரே சமயத்தில் பன்னாட்டவரும் தமிழின் உலக ஒருமைக்கருத்துப்பற்றி உசாவி உரையாடும் நிகழ்வு கிடைத்தற்கரிய ஒன்று. 'யாதுமூரே யாவரும் கேளிர்' என்ற பைந்தமிழ்ப்பாடல் நான்மொழியாளரின் நாவில் நடம்பெற்றது மகிழ்ச்சியும் பாராட்டும் தந்தது. இன்னும் நிகழ்வுகளைத் தொகுத்துரைத்தலும், அளாவலும், தமிழில் நிகழ்ந்திருக்குமாயின் மேலும் சிறப்புக்கு வழிவிட்டிருக்கும். அரவிந்தரின் அருந்தமிழ்ப்பற்றும் இதனால் அறிய முடிந்ததற்கு மட்டற்ற மகிழ்ச்சியையும் நன்றியையும் தெரிவித்துக் கொள்கிறேன்.

**- புலவர் பெ.செயராமன், கள்ளக்குறிச்சி.**

ஒரு பல்கலைக்கழகம் செய்ய வேண்டிய பணியை, ஆரோவில் தமிழ்மரபு மையம் செய்திருப்பதை (செந்தமிழ்கூறும் நல்லுலகம் போற்றக் கடமைப்பட்டிருக்கிறது.

**- ஜி. புண்ணியமூர்த்தி, திருப்பதி.**

காலையில் கருத்தையும், குறிக்கோளையும் மனதில் பதியச் செய்த சான்றோர் உரையரங்கம் இயற்கையான சூழலில் இனிமையான கானங்கள் சிந்தனைக்கு விருந்தளித்தன.

**- சு.இளமாறன், இலக்குமிபுரம் கலைக் கல்லூரி, நெய்யூர்.**

தமிழின் ஒருலகக் கருத்துணர்வு என்ற மாநாட்டில் எதிர்கொள்ளும் சிந்தனைகள் வளர்ச்சி நோக்காக அமைந்ததைக் காணமுடிந்தது.

**- அரங்க.கண்ணன், முனைவர் பட்ட ஆய்வாளர், சூலூர்.**

மிகச்சிறப்பாக அமைந்த நிகழ்வு இது.

**- மா.கண்ணன், அண்ணாமலைப் பல்கலைக்கழகம், சிதம்பரம்.**

நல்ல முயற்சி. செயல்படுத்தினால் நலம் பயக்கும். தொடரட்டும் நற்பணி.

**- அருட்பா அருணாசலம், அரும்பார்த்தபுரம்,புதுச்சேரி.**

மூன்று நாட்களும் பாரதியுள் மூழ்கினோம். முத்துகள் விலைமதிக்க இயலாதவை.

**- முனைவர் மு.பழனியப்பன், மாமன்னர் கல்லூரி, புதுக்கோட்டை**

இவ்வினிய நன்னாளில் தமிழ்ச் சமூகத்தின் கொடை பற்றி அறிஞர் பெருமக்களும், ஆன்மிகச் செல்வர்களும் சிறப்பாகச் சிந்தித்து நம் முன்னோர்களின் 'உலகத்திற்கான கொடை'பற்றி நமக்கு மீண்டும் நினைவூட்டிய கருத்துக்கள் மகா பொக்கிஷங்கள். இந்நாள் ஆரோவில்லில் நடப்பது இவ்விழாவின் தனிச்சிறப்பு.

**– சு.சங்கர், ஆரோவில்.**

தேமதுரத் தமிழோசை உலகெங்கும் பரவ வகை செய்தல் வேண்டும்' என்ற பாரதியின் சீரிய அரிய நோக்கை, பாரதியின் 125ஆம் பிறந்த நாளில் செயற்கரிய செய்யும் பெரியராய் திருமிகு. மீனாட்சி அம்மையாரின் செயற்பாடுகள் அமைந்திருந்தன. பெண்ணிய முன்னேற்றத்திற்கும், பெண்ணும் ஆணும் சமம் என்ற ஒரு நேரிய உணர்விற்கும் ஒரு படிம நிகழ்வாய், 09.12.2007 அன்றைய நிகழ்வு அமைந்திருந்தது. 'தமிழின் ஒருலகக் கருத்துணர்வு' என்ற கருத்தை ஓவியமாக்கிப் பெரும் பதாகையில், ஆண்டாள், திருவள்ளுவர், திரு அன்னை, திரு.அரவிந்தர், தாகூர், வள்ளலார், ஔவையார், பாரதியார், விவேகானந்தர், இரமணர் போன்றோரை உயிரோட்ட உணர்வாய்க் கருத்தரங்காளர் முன்னிலையில் நிறுத்தி, எங்களைப் பேருணர்வாளர்களாய் மாற்றியமைக்கு மிக்க நன்றி. தங்களின் செயற்பாடுகள் அனைத்திற்கும் துணைநிற்போம்.

**– தா.பொ.அ.தேன்மொழி, தமிழூர் (திலாசுப்பேட்டை) புதுச்சேரி.**

மகாகவி பாரதியாரின் 125ஆம் பிறந்த நாள் விழாவை, தமிழின் ஒருலகக் கருத்துணர்வாகப் பன்னாட்டுக் கருத்தரங்கத்தில் வெகு சிறப்பாக நடத்திய திருமகள் மீனாட்சி சகோதரிக்கும், அவரோடு பங்கேற்ற குழுவிற்கும் பாராட்டுக்கள். ஒருலகச் சிந்தனை ஆரோவில்லில் நடந்தேறியது; தமிழுக்கும் உலகத்தில் சிறந்திருக்க வேண்டிய மானுடத்திற்கும் முடிசூட்டி இக்கருத்தரங்கு ஒளிரச் செய்தது.

மேடையின் முன்னே அமைந்த பெரிய படத்தை ஓர் அஞ்சல் அட்டைப் படமாக அச்சடித்து அளித்தால் சிறந்த நல்நினைவாகும்.

**– 'செவாலியே' ச. மதனகல்யாணி, புதுச்சேரி.**

ஆரோவில்லில் பாரத்நிவாஸ் – தமிழ்மரபு மையத்தில் நடைபெற்ற பாரதி நிறைவுவிழா– மகிழ்ச்சி நிறைந்த விழாவாகவே இருந்தது. தமிழ்ச் சான்றோர்கள், பற்றாளர்கள், சொற்பொழிவு தமிழ்உணர்வையும், உலக மக்கள் ஒன்றென்ற உணர்வையும் ஏற்படுத்தியது. அமைதியான சூழல் அறிவார்ந்த மக்கள் கூட்டம் உள்ளத்திற்குப் புத்துணர்ச்சியைத் தந்தது.

**– சரோசா செயராமன், கூடுவாஞ்சேரி.**

ஆரோவில் ஒளி நகரம் என்று அழைக்கப்படும் ஆன்மிக மேம்பாட்டு மையத்தில் நடைபெற்ற பன்னாட்டுக் கருததரங்கில் ஆத்மபூர்வமான தூய எண்ணங்களைப் பகிர்ந்துகொள்ளும் வாய்ப்பு கிடைக்கப்பெற்றது.

சமூகச் சிந்தனையாளர்களின் எண்ண ஓட்டங்களில் எழுந்த அறிவியல் சார்ந்த ஆன்மிக உணர்வுகளைக் கேட்டுச் சிறப்புற்றோம். வாழ்க, அரவிந்தரின் ஆன்மிக மெய்யுணர்வின் பிறப்பிடமான ஆரோவில்.

**– அருட்கவி அரங்கனடிகள், கோயமுத்தூர்.**

ஓர் அரிய நிகழ்வு. உலகு உய்ய உயரிய முயற்சி. இத்தகைய நிகழ்வுகள் தொடரட்டும்.

**– இரா.நாகசுந்தரம், வில்லியனூர், புதுச்சேரி.**

உணவு, உபசரிப்பு, அரங்கநிகழ்வு, சிறப்புரைகள் அனைத்தும் அருமை.

**– சு.சுஜாதா, குன்னூர்.**

மகாகவி பாரதி–125 விழா நனி மிகச்சிறப்பாக நடந்தது.

**– 'தமிழ்மாமணி' சீனு.இராமச்சந்திரன், புதுவைத்தமிழ்ச்சங்கம், புதுச்சேரி.**

பல அனுபவங்களைப் பெற்றேன். புதிய சிந்தனைக்கு, தளத்துக்கு வித்திட்டது. மனதிற்கு அமைதியை அளித்தது. வாழ்த்துகள்.

**– சு.இராமச்சந்திரன், புதுச்சேரி.**

உலக ஒருணர்வு வர – பெற, சில நிலைகளில் தேசபக்தியை ஒத்தி வைக்க வேண்டும்

**– அ.வேதரத்னம், குருகுலம், வேதாரண்யம்.**

இதுபோன்ற கருத்தரங்கம் உலகமெங்கும் நடைபெற வேண்டும்.

**- த.அன்பழகன், வேதாரண்யம்.**

சிறந்த ஏற்பாடு, தேவையான கருத்தரங்கு – நடைமுறைப்படுத்துதல் நன்று.

**- க.விநாயகம், திண்டிவனம்.**

மிகவும் அருமையான சந்தர்ப்பத்தைக் கொடுத்ததற்கு நன்றி.

**- முனைவர் நிர்மலா நடராஜன், ஸ்ரீஅரபிந்தோ சொசைட்டி, திருச்சி.**

இவ்விழா மிகவும் சிறப்பாக அமைந்திருந்தது.

**- இராமலிங்கம், ஆரோவில்**

மிகச்சிறப்பான முறையில் மகிழ்ச்சி தரும் வகையில் நடைபெற்றது பாரதிவிழா.

**- ஆ.இராமகிருஷ்ணன்**

சிறப்பு மிக்க தெய்வங்களாய் வாழும் பாரதியாரையும், அரவிந்தரையும் தரிசிக்க உதவிய இந்தப் பூஜைக்கு எங்களின் நெஞ்சம் நிறைந்த வணக்கங்கள்.

**- மணி**

பாரதி–125 மூன்று நாள் விழாவும் மிகச்சிறப்பாக அமைந்தது. இதுவரை இயல்தமிழை மட்டுமே கண்டு கொண்டிருந்த என்போன்றவர்களுக்கு இசையோடு கூடிய இந்தக் கருத்தரங்கமும் நிகழ்வுகளும் புதியதொரு அனுபவம். பாரதியின் பல்வேறு ஆளுமைகளை சிற்பி அய்யாவின் பொழிவின் மூலம் அறிந்துகொண்டேன். புதியதொரு பாரதியை அறிமுகப்படுத்திய பெருமையும், வெற்றியும் இந்தக் கருத்தரங்கிற்கு உண்டு. மேலும், பல்வேறு புதிய அறிமுகங்கள் திறமைகளை வெளிப்படுத்த ஒரு புதிய களம், வாய்ப்பு. இப்படியே பலவும்....

**–தா.சசதின்.**

இனிமையான நாள். மிகச்சிறந்த கருத்துரைகள். இனியும் தொடரட்டும்.

**- ம.கணேசன்**

பாரதியின் சிந்தனையை, நினைவுகூரும் தொடர்பணி. மக்கள்பணி. இலக்கியப் பணி. மரபுமையம் பணி சிறக்கட்டும்.

**- நா.முத்துராஜன்**

மூன்று நாட்களில் பாரதியை உய்த்துணர முயற்சி செய்ய வைத்த பயிலரங்கு, இந்த பாரதி–125 நிறைவுவிழா. என்னுடைய படைப்புலகில் பாரதியே தெய்வமாகிய இயற்கையாய் அமைந்து அலங்கரிக்கின்றார். இன்றைய நிலை என்றும் மாறலாம். ஆயினும் நிற்பார் பாரதி, உலக உச்சியில்...

**- பூந்தளிர் ஆனந்தன்**

இன்று நடைபெற்ற இந்நிகழ்வானது, இந்த ஆரோவில்லில் மட்டுமல்லாது, புதுச்சேரியில் மட்டுமல்லாது, இந்நாட்டிற்கு மட்டுமல்லாது, உலகனைத்திற்கும் இதன் பயன் சென்றடைய வேண்டும். சமத்துவ, சமுதாயம் இவ்வுலகில் நிறுவ இம்மாநாடு ஓர் முக்கிய காரணமாக அமையும். 'எல்லா உயிர்களும் இன்புற்று வாழ்க'.

ஒருலகு காணும் நம் கனவு நனவாக வேண்டும்.

**- கவி.வெற்றிச்செல்வி சண்முகம்**

இன்று வாழ்வின் பொன்னான நாள். அன்பு அக்கா கவிஞர் மீனாட்சி அவர்களின் அரிய முயற்சி. அற்புதமான நிகழ்வாக நடந்துகொண்டிருக்கிறது. இதில் கலந்துகொள்ளும் வாய்ப்புக் கிடைத்ததை நினைத்து மிகவும் பெருமைப்படுகிறேன். ஓர்உலகச் சிந்தனை நிறைய்ய மக்களிடம் சென்று சேர வேண்டும்.

**- எம். மாலதி மணியன்**

விழா அமைதியாக நடந்தேறியது. குன்றக்குடி அடிகளாரின் பேச்சால் ஆன்மிகம் பற்றிய உண்மையான தகவல்கள் அறிந்துகொண்டேன்.

- ஆர்

மிகச்சிறப்பாக இருந்தது. மூன்று நாளும் பொது அமர்வாக இருந்திருக்கலாம்.

- ரமேஷ்பிரேதன்

விழா மிக அருமை. பாரதியின் ஓருலகம் அமைக. இந்தவிழா என்றும் நினைவில் இருக்கும்

- மதுரம் இராமச்சந்திரன், விருதுநகர்

தாங்கள் எண்ணிய எண்ணம்– திண்ணிய எண்ணம்– பாரதத்தை ஞானபீடத்தில் நிலைநாட்டும் எண்ணம்– முடிதல் வேண்டும். அதுவே நானிலத்திற்கு நன்று. திருவருட்பயனால் தங்கள் ஞானப்பணி நனிசிறக்கப் பிரார்த்திக்கிறேன்.

- மா.பாதமுத்து, ச.மேலப்பட்டி.

ஏற்கெனவே, என்னுள் உலவிக் கொண்டிருந்த பாரதியார், இந்த விழாவில் பெற்ற கருத்துத் தாக்கத்தால் என்னைக் குடுமிபிடித்து உலுக்கிக் கொண்டிருக்கிறார். பாரதியார் பற்றிச் சிந்திக்க, பேச, ஏன் பாரதியாராகவே வாழ இந்த விழா எனக்குப் பயன்படும் என்ற நம்பிக்கை எனக்குண்டு.

- சிங்கமுத்து, வேளாங்கண்ணி

Well organised and conducted.

Dr C.R. LAKSHMI NARASIMHAN, Coimbatore.

Thank you very much for everything of today 09.12.2007. It is so good to hear all this & wish to hear more and more. Love

CELESTINE, Auroville.

A very good opportunity is given by the Mother! We are interested to serve the Tamil Heritage Centre.

- K.THAMILVEL, Sri Aurobindo Society, Trichy centre.

This was a very good programme that will go a long way to promote peace.

- PAUL VINCENT, Auroville



‘நண்பர்களே, தெய்விகக் கருணையின் பெருமையை என்னால் அளவிட்டுரைக்க முடியாது. அதைப்பற்றி விவாதம் செய்யாதே; பேசாதே; நகையாதே; செய்துபார். அதன் இயற்கை தெரியும்.

உனக்குத் தீயன செய்து வருவோனுக்கு நீ நல்லன செய்து வா.

நீ உடனே மகானாகி விடுகின்றாய்; உடனே தெய்வமாகி விடுகின்றாய்.

என்னால் வருணிக்க முடியாததும் எனது வணக்கத்திற்கும் உரியதுமான பொருளாய் விடுகின்றாய்.’



# இன்பமே சூழ்க! எல்லாரும் வாழ்கவே!

இன்பமே சூழ்க! எல்லாரும் வாழ்க!
என்னும் குரலை எழுப்பிடுவோமே!
கல்லார் கற்றார்; காணார் கண்டார்;
இல்லார் உள்ளார்; ஈந்தார் ஏற்றார்;
நல்லார் அல்லார்; நம்பர் பண்பர்;
செல்வர் எளியர்; சிறியார் பெரியார்;
எவர்எவரேனும் எத்திசையேனும்
மானிட ஓரின மக்களே யாவர்
ஓர்வான் சூழும் ஒருலகத்தில்
ஒருயிர்த் துடிப்புடன் ஓரான்மநேயர்
சாதிமத மெனும் பேதமேயின்றித்
தீதற வாழும் செவ்விய மந்திரம்
இன்பமே சூழ்க! எல்லாரும் வாழ்கவே!

- கவியோகி மஹரிஷி சுத்தானந்த பாரதியார்

